



# திருநாவுக்கரசர்

# தேவாரத்தில்

# சைவசித்தாந்தக் கருத்துக்கள்

முனைவர் ச. சாம்பசிவனார்

வளவன் வெளியீடு

# திருநாவுக்கரசர் தேவாரத்தில் சைவ சித்தாந்தக் கருத்துக்கள்

'செந்தமிழ்ச் செல்வர்', 'தமிழாகரர்', 'தமிழ்ச்செம்மல்'
முனைவர் ச. சாம்பசிவனார், எம்.ஏ., பிஎச்.டி.,
சிறப்புநிலைப் பேராசிரியர்
சைவ சித்தாந்தத் துறை, ம.கா. பல்கலைக்கழகம்

வளவன் வெளியீடு
அ.பெ.எண். 155,
மதுரை - 625 001.

முதற்பதிப்பு டிசம்பர் 1998
உரிமை : ச. சாம்பசிவனார்
விலை ரூ. 60
படிகள் : 1000

THIRUNAVUKKARASAR THEVARATHIL
SAIVA SIDDHANTA KARUTHUKKAL

*By*

Dr. S. *SAMBASIVANAR*, M.A., Ph.D.
(Research Fellow, Dept. of Saiva Siddhanta
Philosophy, M.K. University, Madurai)

This book is published with the financial assistance of
TIRUMALA-TIRUPATI DEVASTHANAMS
under their scheme aid to publish Religious Books.
My sincere thanks to T.T.D.
**- AUTHOR**

Published by
Dr. S. SAMBASIVANAR
VALAVAN VELIYEEDU
Post Box No. 155,
MADURAI - 625 001. (TAMILNADU)
Phone : 747871

Branch Office
AMUTHACHAKAM
Plot No. 4, Perumal Avenue,
D.S.P. Nagar Extn.,
Bye-Pass Road,
MADURAI - 625 010.
Phone : 602029

Amuthachakam, MADURAI - 625 010.

# முன்னுரை

*"'என்கடன் பணிசெய்து கிடப்பதே' என்று*
*தங்கடன் இதுவென்று தாணிக் குணாநதி*
*எம்மான் பொன்னடியில் இன்புற நிற்கும*
*பெம்மான் நாவாசப் பெருந்தகை போற்றி"*

என்பதற்கேற்பத் தம் தூய 'தொண்டுநெறி'யால் 'சிவப்பேறு' பெற்றவர் திருநாவுக்கரசர்! அவர் அருளிய தேவாரத் திருப்பதிகங்களில் - அஃதாவது 'நான்கு, ஐந்து, ஆறாவது திருமுறை'களில், இடம்பெற்றுள்ள 'சைவ சித்தாந்தக் கருத்துக்கள்' பலவாகும். தெய்வத்தமிழ்த் தேவார - திருவாசகங்களை நாளும் ஓதி வழிபடுவோர் பலராவர். அத்தகையோரும் பிறரும், நாவரசர் மொழிந்த தேவாரத் திருப்பாடல்களோடு, சைவ சித்தாந்தக் கருத்துக்களையும் தெரிந்து கொள்ளல் நன்று! அதன் பயனாகச் 'சிவப்பேற்றுக்கு ஆளாக வேண்டும்' என்னும் உயர் நோக்கத்தால் உருவானதே "திருநாவுக்கரசர் தேவாரத்தில் சைவ சித்தாந்தக் கருத்துக்கள்" என்னும் இவ் ஆய்வு!

மதுரைக் காமராசர் பல்கலைக்கழகச் சைவ சித்தாந்தத் தத்துவத்துறையில், '**ஓய்வுபெற்ற சிறப்புநிலைப் பேராசிரியர்க்குரிய திட்டத்**'தின்கீழ் ஓராண்டுக்கால அளவிற்குள் செய்து முடிக்கப்பட்ட ஆய்வு இது!

இவ்வாறு ஓர் அரிய பொருள் குறித்து ஆய்வு செய்தற்கென என்னை இப்பணியில் ஈடுபடுத்திய, மதுரைக் காமராசர் பல்கலைக்கழகத்தின் **துணைவேந்தராக இருந்த பெருமைமிகு பேராசிரியர் கு. ஆளுடையபிள்ளை** அவர்கட்கும், இப்போது துணைவேந்தர் பொறுப்பை ஏற்றிருக்கும் பேராசிரியர் **பெருமைமிகு எம். சாலிகு அவர்கட்கும்** பெரிதும் கடப்பாடுடையேன். பதிவாளர் முனைவர் திரு. **அ. இராமசாமி** அவர்கள், என்பால் காட்டும் பேரன்புக்கு என் மனங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இத்துறையின் ஒருங்கிணைப்பாளர் பேராசிரியர் முனைவர் ச. செயப்பிரகாசம் அவர்களும், துறைத் தலைவர் பேராசிரியர் முனைவர் ச. கங்காதரன் அவர்களும் செய்துவரும் பேருதவிகட்கு ஏன் நன்றி. இவ் ஆய்வினைப் படித்துப்பார்த்து, ஆங்காங்கே தள்ளுவன கொள்ளுவன

கண்டறிந்து, எடுத்துக்கூறிய என் கெழுதகை நண்பரும் துறைப் பேராசிரியருமான முனைவர் ஆ. ஆனந்தராசன் அவர்கட்கு என் நன்றி மற்றும் துறை சார்ந்த ஆசிரியர்களும் அலுவலர்களும், துணைவேந்தரின் தனிச்செயலரும் உதவிப் பதிவாளருமான திரு. எஸ். இராசகோபால், எம்.ஏ.,எம்.ஃபில்., அவர்களும் அவ்வப்போது செய்துவரும் உதவிகள் பலவாம். இவர்கள் அனைவர்க்கும் என் நெஞ்சார்ந்த நன்றி.

இது, நூல் வடிவில் வெளிவருவதற்கு நிதி உதவியளித்த 'திருமலை - திருப்பதி தேவத்தானத்'தைச் சார்ந்த அனைவர்க்கும் மனங்கனிந்த நன்றி! இதனை நன்முறையில் அச்சிட்ட அமுதச்சகத்தார்க்கும் நன்றி! தமிழ்ப் பெருமக்கள் இதனை வாங்கி ஆதரவு நல்கிட அன்புடன் வேண்டுகின்றேன்.

தோன்றாத்துணையாயிருக்கும் எம்பெருமான் திருவடிநினைந்து வழுத்துவன்!

வாழ்க தமிழ்!

மதுரை - 1.
தி.வ.ஆ. 2029
09-12-98

அன்பன்
முனைவர் ச. சாம்பசிவனார்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அ.ப.க. | - | அண்ணாமலைப் பல்கலைக்கழகம் |
| ஆ.இ. | - | ஆண்டு இல்லை |
| உ.ஆ. | - | உரை ஆசிரியர் |
| கழகப்பதிப்பு | - | சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் |
| சமாசம், பெருமன்றம் | - | சைவ சித்தாந்தப் பெருமன்றம் |
| சூத். | - | சூத்திரம் |
| செ.ப.க. | - | சென்னைப் பல்கலைக்கழகம் |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| ப.ஆ. | - | பதிப்பு ஆசிரியர் |
| மு.கா.நூல் | - | முன்னர்க் காட்டிய நூல் |
| மேலது | - | மேலே காட்டிய நூல் |
| வ.எ. | - | வரிசை எண் |
| வி.உ. | - | விற்பனை உரிமை |
| A U | - | Annamalai University |
| p | - | page |
| pp. | - | pages |

# பாடல் எண்களின் விளக்கம்

1. 'திருநாவுக்கரசர் தேவாரம் (4.5 6 திருமுறைகள் மூலமும் தெளிவுரையும்) சென்னை, தமிழ் நிலையம் வெளியிட்ட (உ.ஆ. : வ த இராமசுப்பிரமணியம்) 1995ஆம் ஆண்டுப் பதிப்பை அடிப்படையாகக் கொண்டது. முதல் எண் திருமுறை; 2ஆவது எண் பதிகம்; 3ஆவது எண் பாடல 4ஆவது எண் பாடல் அடியைக் குறிக்கும்.

2. 'திருவாசகம்', சைவ சித்தாந்தப பெருமன்றம் 1988ஆம் ஆண்டு வெளியிட்ட பதிப்பை அடிப்படையாகக் கொண்டது. முதல் எண் பாடல் வ.எண்; அடுத்தது பாடல் அடி எண்.

3. சம்பந்தர், சுந்தரர் தேவாரம்' 'தேவாரம் அடங்கன்முறை' மயிலை இளமுருகனார் பதிப்பு (1953) சம்பந்தர் தேவாரமாயின். முதல் எண் திருமுறை; 2ஆவது எண் பதிகம்; 3ஆவது எண் பாடல்; 4ஆவது எண் பாடல் அடி. சுந்தரர் தேவாரமாயின், முதல் எண் பதிகம்; 2ஆவது எண் பாடல். 3ஆவது எண் அடி.

4. சிவஞான போதமும். பிற சாத்திர நூல்களும (சித்தியார் தவிர) சைவ சித்தாந்தப் பெருமன்றம் வெளியிட்ட 'சித்தாந்த சாத்திரம் பதினான்கு மூலமும் உரையும்' (3ஆம் பதிப்பு 1944) எனும் நூலினை அடிப்படையாகக் கொண்டவை.

5. 'சிவஞான சித்தியார்' என்பது 'சுபக்கத்'தைக் குறிக்கும். இது மு. திருவிளங்கம் எழுதிய புத்துரை நூலினை (1971) அடிப்படையாகக் கொண்டது.

# உள்ளுறை

பக்கம்

# 1
# தோற்றுவாய்

## முன்னுரை

"கற்றவன் கலையாரச் சிவனைக் கட
பாதங்கள் சென்னிவைக்கப்
பெற்றவன் பற்றிய பிறப்பற
விட்டார் பெயர்கழற்றான்
உற்றவன் உற்ற விடம் அம்ம
யாத்திட ஒள்ளிய புகாத
துற்றவன் ஆழியில் நாவுக்
கரசெனும் தூயவனே"

என்னும் திருப்பாடல், திருநாவுக்கரசர் என்னும் தூமணியை ஏத்தும் நம்பியாண்டார் நம்பியின் அருமைத் திருவாயில் மலர்ந்தது! இத்தகைய அருளாளராம் திருநாவுக்கரசர் திருவாய் மலர்ந்தருளிய தேவாரப் பதிகங்களில் 'சைவ சித்தாந்தக் கருத்துக்கள்' இடம்பெற்றுள்ள பான்மையை ஒருசிறிது ஆராய்வதே இவ் ஆய்வுத்திட்டமாகும்!

## ஆய்வின் நோக்கம்

தேவாரத் திருப்பாக்களை நாளும் ஓதி வழிபடுவோர், அவற்றோடு தொடர்புடைய சைவ சித்தாந்தக் கருத்துக்களையும் தெரிந்து கொள்ளவேண்டும் என்பது இவ் ஆய்வின் நோக்கம். அன்றியும், சைவ சித்தாந்தக் கருத்துக்களைத் தெரிந்துகொண்டு, தம் வாழ்விலும் கைக்கொண்டு, சிவபூசை செய்வாராயின் எம்பெருமானின் திருவருளுக்கு உரியராகி, இறுதியில் அவனது திருவடி இன்பம் பெறுதற்கும் ஏதுவாகும்!

## ஆய்வு முன்னோடிகள்

அப்பர் அருளிய தேவாரத் திருமுறை நூல்கள் பல வெளிவந்துள்ளன. தருமையாதீனத் தேவாரப் பதிப்புக்கள், மயிலை இளமுருகனார் பதிப்பித்த தேவார அடங்கன்முறை, தமிழ் நிலையத்தாரின் தேவாரத் தெளிவுரை நூல்கள்; திருப்பனந்தாள் ஆதீனத்தின் 'திருநாவுக்கரசு சுவாமிகளின்

தேவாரம்' தலமுறைப் பதிகங்கள்; மறைமலையடிகளார் எழுதிய 'சிவஞானபோத ஆராய்ச்சி'; பொ. முத்தையபிள்ளை எழுதிய 'சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம்'; சி. அருணைவடிவேலு முதலியார் எழுதிய 'சிவஞான மாபாடியப் பொருள்நிலை விளக்கம்': சைவ சித்தாந்தப் பெருமன்றம் வெளியிட்ட 'சித்தாந்த சாத்திரம் பதினான்கு மூலமும் உரையும்'; கழகம் வெளியிட்ட 'மெய்கண்ட சாத்திரம் பதினான்கு மூலமும் உரையும்' முதற்பகுதி; மு. திருவிளங்கம் எழுதிய 'சிவஞான சித்தியார் சுபக்கம் - புத்துரை'; ஆ. ஆனந்தராசன் எழுதிய 'சிவஞானபோதம் வழித்துணை விளக்கம்'; திருவாவடுதுறை ஆதீனம் வெளியிட்ட 'பெரியபுராணம்'; அ.ச. ஞானசம்பந்தன் எழுதிய 'பெரியபுராணம் - ஓர் ஆய்வு'; வை. இரத்தினசபாபதி எழுதிய 'திருமுறைத் தெளிவே சைவ சித்தாந்தம்'; ச. கங்காதரன் எழுதிய 'சைவ சித்தாந்த அடிப்படைக் கொள்கைகளும் வரலாறும்' ஆகிய நூல்களும் பிறவும், இவ் ஆய்வுக்கு முன்னோடிகளாகக் கருதத்தகுவன.

## ஆய்வின் அடிப்படை

இவ் ஆய்விற்குத் திருநாவுக்கரசர் அருளிய 'தேவாரம் 4.5.6ஆம் திருமுறைகள்; மெய்கண்டார் அருளிய 'சிவஞான போதம்'; மற்றும் 'சிவஞான சித்தியார்' போன்ற சைவ சித்தாந்த சாத்திர நூல்கள்; இவற்றின் விளக்க - விரிவுரைகள் முதலாயின இவ் ஆய்வுக்கு அடிப்படையாம்.

## ஆய்வு எல்லை

'திருநாவுக்கரசர் தேவாரத்தில் சைவ சித்தாந்தக் கருத்துக்கள்' எனும் ஆய்வு பரந்துபட்டது; விரிந்தது. நாவரசர் அருளிய ஒவ்வொரு பாடலிலும் ஏதாவதொரு சைவ சித்தாந்தக் கருத்து இடம்பெற்றுள்ளது எனலாம். அத்துணையும் விரிவாக எடுத்துரைக்க, இவ் ஆய்வுக்கென அளிக்கப்பட்ட கால எல்லை (அஃதாவது ஓராண்டு) இடந்தாராது! ஆதலின், நாவரசரது வாழ்க்கை வரலாறும் அவர் அருளிய தேவாரத் திருப்பதிகங்களும் பற்றி முதற்கண் எடுத்துரைத்து, அதன் பின்னர்ப் 'பதி, பசு, பாசம், நால்வகை நெறிகள், சிவப்பேறு' என்னும் அடிப்படையில் ஆங்காங்கு இடம்பெறும் ஒருசில கருத்துக்கள் மட்டுமே ஆராயப்படுகின்றன. இவை குறித்து மேலும் விரிவாக ஆராய இடனுண்டு.

## அணுகுமுறை

இவ் ஆய்வு, 'பகுப்புமுறை', 'விளக்கமுறை', 'ஒப்பீட்டுமுறை', 'திறனாய்வுமுறை' என்னும் வகைகளில் அமைந்துள்ளது.

திருநாவுக்கரசர் அருளிய 'தேவாரம்'; மெய்கண்டார் அருளிய 'சிவஞானபோதம்' முதலான சைவ சித்தாந்த நூல்களின் வாயிலாக அறியலாகும் 'பதி, பசு, பாசம், நால்வகை நெறிகள், சிவப்பேறு' பற்றிய

கருத்துக்கள், 'பகுப்பு, விளக்கம், ஒப்பீடு, திறனாய்வு' என்னும் வகையில் விளக்கப்படுகின்றன.

## ஆய்வுப் பகுப்பு

இவ் ஆய்வு, பின்வரும் எட்டு இயல்களைக் கொண்டுள்ளது.

1. தோற்றுவாய்
2. திருநாவுக்கரசரும் தேவாரத் திருப்பதிகங்களும்
3. திருநாவுக்கரசர் தேவாரத்தில் 'பதியியற் கருத்துக்கள்'
4. திருநாவுக்கரசர் தேவாரத்தில் 'பசுவியற் கருத்துக்கள்'
5. திருநாவுக்கரசர் தேவாரத்தில் 'பாசவியற் கருத்துக்கள்'
6. திருநாவுக்கரசர் தேவாரத்தில் 'நால்வகை நெறிகள்'
7. திருநாவுக்கரசர் தேவாரத்தில் 'சிவப்பேறு'
8. முடிவுரை

'தோற்றுவாய்' எனும் இவ் இயலில், 'ஆய்வு நோக்கம், ஆய்வு முன்னோடிகள், ஆய்வின் அடிப்படை, ஆய்வு எல்லை, அணுகுமுறை' முதலாயின இடம்பெறுகின்றன. 'திருநாவுக்கரசரும் தேவாரத் திருப்பதிகங்களும்' என்னும் இயலில், நாவரசரின் வாழ்க்கை வரலாற்றுச் சுருக்கம், தேவாரப் பெருமை, 'சைவ சித்தாந்தம்' என்பதன் விளக்கம் ஆகியன விளம்பப்படுகின்றன. 'திருநாவுக்கரசர் தேவாரத்தில் பதியியற் கருத்துக்கள்' என்ற இயலில், 'பதி'யின் இயல்பு, 'பதி' பற்றி நாவரசர் மொழிவன, அவற்றோடு இயைபுடைய தோத்திர - சாத்திர நூற் கருத்துக்கள் ஆகியன இடம்பெறுகின்றன. இவ்வாறே, "பசுவியற் கருத்துக்கள், பாசவியற் கருத்துக்கள், நால்வகை நெறிகள், சிவப்பேறு" முதலான பிற இயல்களிலும் ஆராயப்படுகின்றன. 'முடிவுரை'யில், ஆய்வு முடிபுகள் சுருக்கமாகத் தரப்படுகின்றன. 'பின்னிணைப்பி'ல் 'முதன்மை ஆதாரம், துணைமை ஆதாரம்' என நூற்பட்டியல் இடம்பெறுகின்றது.

## மேற்கோள் விளக்கம்

இவ் ஆய்வில், அப்பர் அருளிய தேவாரம் 4,5,6ஆம் திருமுறைகள்; 'சிவஞான போதம்' முதலான சாத்திர நூல்கள்; பிற தோத்திர நூல்கள் ஆகியனவும் பல்வேறு அறிஞர்கள் கூறிய கருத்துரைகள் முதலாயினவும், தேவையான இடங்களில் மேற்கோள்களாக எடுத்தாளப்படுகின்றன. சில இடங்களில் முழுமையான பாடல்கள்; சில இடங்களில் பாடல் அடிகள் அல்லது தொடர்கள் இடம்பெறுகின்றன. பாடல் முடிவில், வளைவு கோட்டிற்குள், அவற்றின் எண்கள் தரப்படுகின்றன. "முதல் எண் - திருமுறை எண்; அடுத்தது - நூலில் காட்டப்பட்டுள்ள பாடல் வரிசை எண்; அதனை அடுத்தது - பாடல் அடி எண்" என்னும் முறை பின்பற்றப்படுகின்றது.

# 2
# திருநாவுக்கரசரும் தேவாரத் திருப்பதிகங்களும்

## முன்னுரை

'திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட'[1] செல்வர் எனப் போற்றப்படும் திருநாவுக்கரசரைப் பற்றியும், அவரருளிய 'தேவாரத் திருப்பதிகங்களை'ப் பற்றியும் ஒரு சிறிது ஆராய்வதாக இவ்வியல் அமைகின்றது.

## திருநாவுக்கரசர் வரலாற்றுச் சுருக்கம்

*"திருநாவுக் காசுவளர் திருத்தொண்டின் நெறிவாழ*
*வருஞானத் தவமுனிவா வாகீசா வாய்மைதிகழ*
*பெருநாமச் சீாபாவ லுறுகின்றேன் பேருலகில*
*ஒருநாவுக குரைசெய்ய ஒண்ணாமை உணராதேன்"*[2]

என்பது, திருநாவுக்கரசரைத் தெய்வச் சேக்கிழார் போற்றும் திருப்பாட்டாகும். இத்தகு தவமுனிவராம் நாவரசரின் வாழ்க்கை வரலாறு இயம்பும் நூல்கள் பலவுள; எனினும் அனைத்திற்கும் மூலமாக இலங்குவது சேக்கிழார் அருளிய 'திருத்தொண்டர் புராணமே'யாகும். இதன்கண் 'திருநின்ற சருக்கம்' எனும் பகுதியில் முதலாவதாக இடம்பெறுவது 'திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம்' ஆகும். இதில், நாவரசரது வாழ்க்கை வரலாற்றை 429 செந்தமிழ்ப் பாக்களால் எடுத்து இயம்புகின்றார் சேக்கிழார். இதன் சுருக்கம் இவண் தரப்படுகின்றது.

தமிழ்நாட்டில், பெண்ணைமாநதி பாயும் வளப்பமான பகுதி 'திருமுனைப் பாடி நாடு'. அறந்தரு நாவுக்கரசரும், ஆலாலசுந்தரரும் அவதரித்த நாடு இதுவெனில் இதன் சீர்மை ஒருவாறு தெரியவரும். இத்தகு நன்னாட்டில் உள்ள, திருவாமூரில், ஒழுக்கத்தின் மேதக்கநிலை சைவ வேளாண் குலத்தில், 'குறுக்கையர்' என்ற குடியில் தோன்றினார் நாவரசர். இவர்தம் தந்தையார் - புகழனார்; தாயார் - மாதினியார்; தமக்கையார் - திலகவதியார். நாவரசருக்குப் பெற்றோர் இட்ட திருப்பெயர் - மருள் நீக்கியார்.

திலகவதியாரை மணக்க இசைந்தவர் கலிப்பகையார்; ஆனால், திருமணம் நிகழ்தற்கு முன்னர், படைத்தலைவராகிய அவர், வட புலத்தோர் மாறேற்கச் சென்றபோது, போர்க்களத்தில் உயிர் கொடுத்துப் புகழ் கொண்டார். இதற்கிடையே, புகழனாரும், மாதினியாரும் இவ்வுலக வாழ்வை நீத்து, இறைவனடி எய்தினர்! ஆதலின், கலிப்பகையாரையே தம் மணவாளராகக் கருதிய திலகவதியார், தாமும் இறக்கத் துணிந்தார். அந்நிலையில் மருள்நீக்கியார் மனம் கவன்று, தமக்கையாரது காலில் வீழ்ந்து பணிந்து, 'என்னைவிட்டு ஏகுவீராகில் யானும் உயிர்நீப்பன்' என்றார். அதனைக் கேட்ட தமக்கையாரும், 'தம்பியார் உளராக வேண்டும்' என்ற அருளினால், உயிர்தாங்கிச் சிவபிரான் திருத்தொண்டு பூண்டவராய்த் திகழலானார்.

தமக்கையாரின் ஆதரவில் வளர்ந்து வந்த மருள்நீக்கியார், 'நில்லாத உலகியல்பு' கண்டார்; 'நிலையா வாழ்க்கை அல்லேன்' என்று முற்றத்துறந்து, பிற சமய உண்மைகளையும் அறியவேண்டும் எனும் முடிபு மேற்கொண்டு, 'பாடலிபுத்திரம்' (திருப்பாதிரிப்புலியூர்) எனும் பதி அணைந்து, அமணசமயம் சார்ந்தார்; ஆங்குத் 'தருமசேனர்' என்னும் பட்டமும் பெற்றார். புறச்சமயம் சேர்ந்த தம்பியின் செயல்கண்டு கவலையுள் மூழ்கிய திலகவதியார், 'திருவதிகை வீரட்டானம்' சென்று, ஆங்கு எழுந்தருளியுள்ள வீரட்டானேசுவரர்க்குத் திருத்தொண்டு செய்யலானார்; இறைவனை வழிபடும் போதெல்லாம்,

> *"என்னை*
> *ஆண்டருளும் நீராகில் அடியேன்பின் வந்தவனை*
> *ஈண்டுவினைப் பரசமயக் குழிநின்றும் எடுத்தாள*
> *வேண்டும்"*[3]

என்று முறையிடுவார். ஆண்டவனும் உளமிரங்கி, "அன்னவனை இனிச் சூலை மடுத்தாள்வம்" என அம்மையாரின் கனவில் உரைத்தனன். அவ்வாறே சமண சமயத்திலிருந்த 'தருமசேனர்'க்கு, வயிற்றினிடைச் 'சூலைநோய்' புக்கது. அமணர் பலரும் ஈண்டி முயன்றும் குணம் பெறவில்லை; அனைவரும் கைவிட்டனர்; சூலைநோய் ஒழியத் திலகவதியாரை நாடித் திருவதிகை வந்தார் தருமசேனர். வந்த தம்பியிடம், திருவாளன் திருநீற்றைத் திலகவதியார் அளிப்ப, அவரும் 'பெருவாழ்வு வந்தது' எனக் கருதி, அதனை வாங்கி, உருஆர அணிந்தார்; தமக்கையாருடன் திருக்கோயில் சென்றார்; ஈசனைத் தொழுது, வலங்கொண்டு இறைஞ்சினார்; தம்பிரான் திருவருளால், உரைத்தமிழ் மாலைகள் சாத்தும் உணர்வு பெற்றார்.

> ***"கூற்றாயின வாறு விலக்ககிலீர்***
> *கொடுமைபல செய்தன நான்அறியேன்'*

*ஏற்றாய்,அடிக் கேஇர வும்பகலும*
*பிரியாது வணங்குவன் எபபொழுதும்*
*தோற்றாது,என* **வயிற்றின் அகம்படியே**
**குடரோடு துடக்கி முடக்கியிட**
**ஆற்றேன்**! *அடி யேன்,அதி கைக்கெடில*
*வீரட்டா னத்துறை அம்மானே*'[4]

எனும் திருப்பதிகம் பாடினார். இத்திருப்பாட்டில், சூலை நோயினால் தாம்பட்ட துன்பத்தைச் சொற்களால் வடித்துள்ளமை அறியத்தக்கது. இறைவனருளால் நோய் நீங்கியது; அங்கங்கள் அடங்க, உரோமமெலாம் அடையப் புளகங்கள் முகிழ்த்தலரப், பொங்கும் புலன் கண்கள் பொழிந்திழியப் புவிமீது புரண்டயர்ந்தார்; கருணைப் பெருவெள்ளம் காட்டிய செயலுக்கு எங்ஙனம் நன்றி செய இயலும் எனத் தவித்தார். அப்போது,

"...

*பாவுற்றலர் செந்தமி ழின்,சொலவளப*
*பதிகத தொடைபாடிய பானமையினால*
*'நாவுககர சென்றுல கேழினும்,நின*
*நனநாமம நயபபுற மனனுக'*[5]

எனும் வாய்மை ஒலி, வானிடை எழுந்தது. அன்றுமுதல், '**நாவுக்கரசர்**' எனும் நற்பெயர் தாங்கி, மனத்தொடு வாய்மையுடன் மெய்யுற்ற திருப்பணி செய்பவராய்ச், சிவசின்னம் பூண்டு, 'தியானம், ஞானம், திருப்பெயர், உழவாரம் (கருவி)' ஆகியன கொண்டு, எம்பெருமானைத் தேவாரத் திருப்பதிகங்களால் பாடிப் பரவலாயினர்.

இவர்தம் மாற்றங்கண்டு மலைத்தனர் சமணர்; ஆதலின் இவருக்கு இன்னல்பல விளைக்கத் துணிந்தனர்; அரசன் மகேந்திரவர்ம பல்லவனை நாடி, "நம் சமயம் ஒழித்தார் தருமசேனர்" என நாவில் வந்தன உரைத்தனர்; அரசனது ஆணைப்படி நாவரசர்க்கு, நவிலமுடியாத் துன்பங்களைத் தந்தனர். நாவுக்கரசரை நீற்றறையில் இட்டனர்; நஞ்சு கலந்த பாலடிசில் உண்ணச் செய்தனர்; யானைக்காலில் இடறச் செய்தனர்; இறுதியாகக் கல்லுடன் கட்டிக் கடலில் இட்டனர்; சொற்றுணை வேதியனின் நற்றுணை அடிகளை மறவா நாவரசர், திருப்பதிகங்கள் பாடி, ஒன்றாலும் துன்புறாதிருந்த உயர்நிலையினைக் கண்டு உள்ளம் திகைத்தனர் சமணர். "தம்முயிருக்குப் பன்முறை சமணர் தீங்கு செய்ய முயன்றபோதும் 'தாண்டக வேந்தர்', அவர்கள்மீது கோபமோ பகைமையோ கொள்ளாதிருந்ததும், திருவருள் தம்மை எப்படியும் காக்கும் என்று சிறிதும் நிலைகலங்காதிருந்ததும் அவரது அளப்பரும் மேன்மையை உணர்த்துமன்றோ ?"[6] என்பது ச. சச்சிதானந்தம் பிள்ளையின் கூற்று. மகேந்திர பல்லவன், நல்லவனாகி, நாவரசரை வணங்கிச் 'சைவ சமயமே மெய்ச் சமயம்' என உணர்ந்து சைவனானான்;

சமணப் பள்ளிகளைச் சிவன் திருக்கோயில்களாக்கினான்.[7] இப் பல்லவ மன்னனைக் குறித்துச் சி.கே. சுப்பிரமணிய முதலியார், தமது 'சேக்கிழார்' என்னும் ஆராய்ச்சி நூலில், பின்வருமாறு குறிப்பிடுகின்றார் :

> "நந்நாட்டிற் பாடலிபுத்திரத்தில் அரசு செய்த சமண மன்னவனாகிய மகேந்திரவர்மன், அப்பர் பெருமானாரை நீற்றறையில் இட்டும் பிற வகைகளாலும் வருத்தஞ் செய்தான். ஆனால் நாளில்லா அமணர் பக்கநின்ற ஒன்றிய அம்மன்னவன் சூழ்ச்சியைத் திருத்தொண்டின் உறைப்பினாலே அப்பர் பெருமான் வென்ற பின்னர் சமணத்தைக் கைவிட்டு அந்த மன்னவன் சைவனானான்; சமண் பாழிகளையும் பள்ளிகளையும் இடித்துக் கொண்டு வந்து **குணபரவிச்சரம்** என்ற கோயிலைக் கட்டினான். 'கூட இடித்துக் கொணர்ந்து குணபர வீச்சரம் எடுத்தான்' ஆதலால் அவனுக்குக் **குணபரனென்றும்** ஒரு பேர் இருந்தமையைச் சேக்கிழார் பெருமான் அறிவிக்கின்றார்."[8]

இவ்விடத்தில், அ.ச. ஞானசம்பந்தன் கூறுவதைச் சுட்டுதலும் பொருந்தும் :

> "வாகீசர், சேக்கிழார் என்ற இருவருக்கும் சமண சமயத்திலிருந்த நலமான கொள்கைகளை ஏற்றுக் கொள்வதில் தடை ஒன்றும் இல்லை. அஹிம்சை, தவம் என்ற இரண்டும் சைவர்கட்குச் சமணர் தந்த கொடையாகும் என்று கூறினால் மிகையாகாது. ஆனால் சமயம் வேறு, சமயிகள் வேறு என்பதை மறத்தலாகாது. சமயம் கூறும் தத்துவங்கள் அனைத்தையும் சமயிகள் அனைவரும் பின்பற்றுகிறார்கள் என்று நினைப்பது பெருத்த தவறாக முடியும். எந்த அமைதியை நாடி அங்குச் சென்றாரோ அது கிடைத்தபாடில்லை. அவரையும் அறியாமல் தாம் செய்தது தவறோ என்ற எண்ணம் அவருடைய அகமனத்தில் இருந்துகொண்டே இருந்தது போலும். புதுமையில் பயன் இருக்கும் என்று சென்றவர்கள் பலரும் அங்கு அது இல்லை என்றவுடன் தங்கள் பழமையே இதைவிட நலம் போலும் என்று நினைப்பதும் பழமைக்கே திரும்பி விடுவதும் இன்றும் உலகிடைக் காணப்பெறுகின்ற ஒரு செயலாகும்.
> புறச்சமயத்தில் இருக்கும்பொழுது அவருடைய மனத்தில் இந்த அரிப்பு இருந்தது என்பதைச் சைவம் மீண்டவுடன் அவர் பாடிய முதல் பதிகத்தின் 6வது பாடலில்

*வெளிப்படக் காண்கிறோம். ஒருசில மணித்துளிகட்கு முன் தமக்கையாரிடம் திருநீறு வாங்கி இட்டுக் கொண்டு சிவன் கோயிலினுள் நுழைந்துள்ளார். இந்த வினாடிக்கு முன் பல்லாண்டுகள் சமணராக இருந்த இப்பெருமகனார் திரும்பி வந்த வினாடியில், 'சலம் பூவொடு தூபம் மறந்தறியேன் . ' என்று பாடுவதன் அடிப்படை இதுதான்! மனவியலில் ஏற்படும் இந்த நுணுக்கத்தை அறியாவிட்டால் இப்பாடலுக்குப் பொருள் காண்பது கடினம்!"*[9]

சிவபெருமானின் திருவருளுக்கு உரியரான நாவரசர், சிவத் திருத்தலங்கள்தோறும் சென்று வழிபடலானார். திருப்பெண்ணாகடத்தில் உள்ள திருத்தூங்கானைமாடத்து இறைவனருளால் இடபக்குறியும், சூலக்குறியும் திருத்தோளில் பொறிக்கப்பெற்றார். சீகாழியில், திருஞானசம்பந்தரைக் கண்டு களித்து, அவரால் '**அப்பர்**' என அன்புடன் அழைக்கப் பெற்றார்; திருநல்லூரில் சிவபிரானின் சேவடி, தம் முடிமேல் சூட்டப்பெற்றார்; திங்களூரை அடைந்து அப்பூதியடிகளாரின் மகனான மூத்த திருநாவுக்கரசு, அரவு தீண்டி ஆவி நீங்கத் திருவருட்டுணையால் உயிர்ப்பித்தார்; திருவீழிமிழலையில் படிக்காசு (பொற்காசு) பெற்று, அடியார்களின் அரும்பசி போக்கினார்; திருமறைக்காட்டில் நெடுநாள் அடைபட்டுக் கிடந்த மறைக்கதவம் திறக்கப் பாடினார்; திருவாய்மூரில் இறைக்காட்சி கண்டு இன்புற்றார்; பழையாறை வடதளியில், சமணர் சூழ்ச்சியால் மறைப்புண்டிருந்த சிவலிங்கத்தை வெளிப்படுத்தினார்; திருப்பைஞ்ஞீலி செல்லும்போது, பசியால் வருந்த, ஆண்டவனால் பொதி சோறு அளிக்கப் பெற்றார்; இறுதியில் கயிலைத் திருக்காட்சி காண விரும்பி, வடபுலம் நோக்கி நடந்தார்; கால்களும் கைகளும் தேய்ந்தன; மார்பும் தசையும் நைந்தன; என்பும் முரிந்தது; ஆயினும், இறைவன் கயிலைக் காட்சி காண்பதற்கு அருள் புரியவில்லை. இதற்குரிய காரணமாகச் சேக்கிழார் கூறுவது :

> *"அன்ன தன்மையர் கயிலையை அணைவதற் கருளார்*
> *மன்னு தீந்தமிழ் புவியினமேற் பின்னையும் வழுத்த . "*[10]

"அழியாத - நிலைபெற்ற - இனிய தமிழ்ப் பாக்களாம் தேவாரப் பதிகங்களை நாவரசர், இப்புவியில் இன்னும் பாடவேண்டும்" என்னும் காரணத்தால், அவர் கயிலையை நண்ணுதற்கு இறைவன் அருள் செய்யவில்லை எனச் சேக்கிழார் கூறுவதிலிருந்து தேவாரப் பாக்களின் மேன்மை புலனாகும். அந்நிலையில், முனிவர் வேடத்தில் இறைவன், நாவரசர்முன் போந்து, "உம்மால் கயிலை காண இயலாது; திரும்பிச் செல்க!" என்று கூற, அதற்கு அஞ்சா நெஞ்சினரான நாவரசரோ,

> "ஆளும் நாயகன் கயிலையில் இருக்கை கண்டல்லால்
> மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன்"[11]

என மொழிந்தார். இவர்தம் மனவுறுதி கண்ட மங்கைமணாளராம் இறைவன், 'ஓங்கு நாவினுக்கரசனே எழுந்திரு' என்ன, நாவரசரும் தீங்கிலா யாக்கை பெற்றவராய், ஆங்குள்ள பொய்கையில் மூழ்கியவர், திருவையாற்றுத் திருக்குளத்திலிருந்து எழுந்தார்; ஆங்கே திருக்கயிலைக் காட்சியைக் கண்குளிரக் கண்டார்.

பின்னர்த் திருப்பூந்துருத்தியில் திருமடம் அமைத்து உழவாரப் பணி புரிந்தார்; திருப்புகலூரில் உழவாரப்பணி கொண்டு செதுக்கும்போது, பொற்குவையும் நவமணிக் குவியலும் கண்டு, அவற்றை 'ஓடும் கல்லுமா'கக் கருதி வீசி யெறிந்தார்; வானர மகளிர் தோன்றி வலைவீச முயன்றனர்; முற்றுத் துறந்த முனிவராம் வாகீசர், அவ்வலையில் வீழ்ந்தாரிலர்.

இறுதியில், திருப்புகலூரில் திருப்பணி செய்து வந்தபோது, மாதொரு பாகன் மலரடிககீழ்த் தங்க எண்ணங்கொண்டு, தம் 89ஆம் வயதில் சித்திரைத் திங்கள் - சதயநாளில்,

> "எண்ணுகேன் என்சொல்லி எண்ணுகேனோ
> எம்பெருமான் திருவடியே எண்ணின் அல்லால்
> கண்ணிலேன் மற்றோர் களைகண் இல்லேன்
> கழலடியே கைதொழுது காணின் அல்லால்
> ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்
> ஒக்க அடைக்கும்போது உணரமாட்டேன்
> புண்ணியா! உன்னைப் புகக் போதுகின்றேன்
> பூம்புகலூர் மேவிய புண்ணியனே!"[12]

என்னும் இறுதித் திருத்தாண்டகத்தைப் பாடிச், சிவானந்த ஞானவடிவேயாகி, 'அண்ணலார் சேவடிக்கீழ் இனிதமர்ந்தார்' நாவுக்கரசர்.

நாவுக்கரசர் வாழ்ந்த காலத்தைப் பற்றிப் பலரும் பலவிதமாகக் கூறுவர்.

"திருநாவுக்கரசர் தேவாரத்தில் காணப்படும் இலக்கியக் கொள்கைகள்" எனும் பொருள் குறித்து முனைவர்ப் பட்டத்திற்கு ஆய்வு செய்த ம.சா. அறிவுடைநம்பி,

> "தேவாரம் பாடிய மூவருள் காலத்தால் முற்பட்டவர் திருநாவுக்கரசர் ஆவர். அவர், மாணிக்கவாசகர் வாழ்ந்த காலத்திற்குப் பின்னால் வாழ்ந்தவரென்றும், மாணிக்கவாசகர் காலத்திற்குமுன் வாழ்ந்தவரென்றும் அறிஞர்கள் பல சான்றுகளைக் காட்டிச் செல்வர். கி.பி. 5ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்று தணிகாசல

*முதலியாரும்; கி.பி. 650க்கு சிறிது முன்னர் வாழ்ந்தவர் என்று சீனிவாசபிள்ளையும்; கி.பி. 580க்கும் 660க்கும் இடைப்பட்ட காலத்தவர் என்று இராசமாணிக்கனாரும்; கி.பி. 550க்கும் 650க்கும் இடைப்பட்டவரென்று கா சுப்பிரமணியபிள்ளையும்; கி.பி. 574க்கும் 655க்கும் இடைப்பட்டவரென்று இராமச்சந்திரஞ் செட்டியாரும், கி.பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்று வெள்ளைவாரணனாரும், ஔவை சு. துரைசாமிப்பிள்ளையும் கூறுவர்."*[13]

இதுகுறித்துச் 'சைவ இலக்கிய வரலாறு' எழுதிய ஔவை சு. துரைசாமிப்பிள்ளை கூறுவது இவண் சுட்டத்தகும்.

*". . . . திருஞானசம்பந்தர் தோன்றுதற்கு முன் தோன்றி, அவர் இவ்வுலகில் நிலவிய காலமுற்றும் உடனிருந்து, அவர் இறைவனது அருளொளியிற் கலந்த பின்னும் இருந்து சிறந்தவர் திருநாவுக்கரசர் என்பது சைவவுலகு நன்கறிந்த செய்திகளுள் ஒன்று . . ஆகவே திருநாவுக்கரசர், கி.பி 570அளவில் திருவாமூரில் புகழனாருக்கும் மாதினியாருக்கும் மகனாகத் தோன்றி, எண்பத்தோரியாண்டு மண்ணுலகில் வாழ்ந்திருந்து, கி.பி. 650-1 அளவில் சித்திரைத்திங்கள் சதயநாளில் திருப்புகலூரில் இறைவன் திருவடி நீழல் எய்தினார் என அறிகின்றோம்."*[14]

### தேவாரத் திருப்பதிகங்கள்

"**தெற்கோதும் தேவாரம்** *திருவாய்நன் மொழியானதேன்*"[15]

எனப் பாரதிதாசன் பாடுவார். தென்றமிழ் நாட்டில் சிவன் திருக்கோயில்களில் நாளும் ஓதப்பெறுவது 'தேவாரம்'.

தே + ஆரம் = தேவாரம். தே - தெய்வம்; ஆரம் - மாலை. தெய்வத்திற்குச் சூட்டப்படும் 'மாலை' போன்ற பாக்கள் ஆதலின் இப்பெயர் பெற்றது.

இனித், 'தே வாரம்' எனப் பிரித்துத், 'தே - தெய்வம்; வாரம் இசைப்பாட்டு' எனப் பொருள் கொண்டு, "தெய்வத்திற்கு இன்றமிழ் இசைப்பாட்டால் பாடப்படுவது" என்றும் கூறலாம். ஏனெனில், தேவாரப் பாக்களுக்கெனப் 'பண்' உண்டு; அந்தப் பண்போடு பாடுதல் மரபு.

"தேவினிடத்து வாரத்தை, அன்பை விளைவிப்பது. அஃதாவது கடவுளிடத்தில் அன்பு காட்டும் நூலே தேவாரமாகும்" என்பர் ச. ஆறுமுக முதலியார்.[16]

'பதிகம்' என்பதற்குப் 'பத்துப் பாடல்கள்' என்று பொருள்.[17] தேவாரப் பதிகமனைத்துமே பெரும்பாலும் பப்பத்துப் பாடல்கள் கொண்டதாக இருத்தல் காணலாம். 'திரு' என்னும் அடைமொழி கொண்டு, 'திருப்பதிகம்' எனப்படுவதாயிற்று.

திருநாவுக்கரசர் 4,900 திருப்பதிகம் பாடினர் என்பதற்குச் சான்று உண்டு.

> "இணைகொ **ளேழெழு நூறிரும் பனுவல்**
> *ஈன்றவன் திருநாவினுக் கரையன்*"[18]

என்பது சுந்தரர் வாக்கு. '**ஏழு எழுநூறு** இரும்பனுவல்' (7 x 700 = 4900) எனும் தொடர், 4,900 திருப்பதிகத்தைக் குறிக்கும்.

சுந்தரருக்குப் பின்னர்த் தோன்றிய நம்பியாண்டார் நம்பியும்,

> "பதிக**மே ழெழுநூறு** *பகரு மாகவி யோகி*
> *பாகுநா வாசகன் பாமாலை யாவீசன*"[19]

என்பதும் குறிப்பிடத்தக்கது. 'ஏழ் எழுநூறு' என வருவது நோக்கத்தகும். இவற்றை உட்கொண்டே சேக்கிழாரும்,

> " *உடைய அரசு என்றும் உலகத்திடை நீங்கப*
> *பாடி* **ஏழெழு நூறும்**"[20]

என்பாராயினர். ஆனால், உமாபதி சிவாசாரியார், தமது 'திருமுறை கண்ட புராணத்'தில், "**ஒருநூற்பத் தொன்பதினா யிரம** தாகப், பெருநாமப் புகலூரில் பதிகம்கூறி"[21] என்று கூறுவது கொண்டு, நாவரசர் 49,000 பதிகங்கள் பாடியுள்ளார் என்பாருமுளர்.

"தில்லையில் திருக்கூத்து இயற்றும் அம்பலத்தின் புறச்சபையில், மூவர் அருளிய தேவாரப் பதிகங்கள் வைத்துக் கையடையாளமிடப் பெற்றுள்ளன" என்னும் செய்தியறிந்த சோழப் பெருவேந்தன், நம்பியாண்டார் நம்பியுடன் தில்லைக்குச் சென்று, தில்லைவாழ் அந்தணர்க்குத் தெரிவித்தான். அவர்களோ, "தமிழ் வைத்த மூவர் வந்தால், அறை திறக்கும்" என்றனர். சோழவேந்தன், மதிநுட்பமுடையன் ஆதலின் தில்லை நடராசப் பெருமானுக்குத் திருவிழாவெடுத்து, மூவர் முதலிகளைத் திருவீதியுலாப் போதுவித்துத் 'திருநெறித்தமிழ்' இருந்த இடத்திற்கு எழுந்தருள்வித்து, "மூவரும் எழுந்தருளியுள்ளனர்" என்றான். வேறு வழியின்றித் தில்லைவாழ் அந்தணர்கள், தேவாரமிருந்த அறையைத் திறந்தனர். அந்தத் தெய்வத்தமிழ் ஏடுகளின் மேல் புற்று மூடிக்கொண்டிருந்தது; அதனைக் கண்ட சோழ வேந்தன் கலங்கினான்; பின்பு அதனை நீக்கிப் பார்த்தபோது ஏடுகள் பல செல்லரிக்கப்பட்டுக் கிடந்தன. அப்போது 'வான் ஒலி' ஒன்று எழுந்தது; "மூவர் பாடல்களில்

வேண்டுவன மட்டுமே வைத்துளோம்!" என்றது அது! வேந்தன் ஒருவாறு மனம் தேறி, அவ் ஏடுகளை எடுத்து, நம்பியாண்டார் நம்பியிடம் ஒப்படைத்து. "இவற்றை முறைப்படுத்தித் தருக!" என வேண்டிக் கொண்டான். அவ்வாறே, சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய இம்மூவரும் பாடிய திருப்பதிகங்கள். 'முதல் ஏழு திருமுறைகளா'க வகுக்கப்பட்டன. பின்னர் மணிவாசகர் அருளிய திருவாசகம், திருக்கோவையார் எட்டாம் திருமுறையாகவும்; திருவிசைப்பாமாலைகள் ஒன்பதாம் திருமுறையாகவும்; திருமூலர் அருளிய திருமந்திரம் பத்தாம் திருமுறையாகவும் முறைப்படுத்தப்பட்டன.[22]

சோழ மன்னனுக்குக் கிடைத்த பதிகங்கள் 321 என்றும்;[23] ஆனால் இப்போது அச்சானவை 312பதிகங்கள் மட்டுமே என்றும் அறிய முடிகின்றது. இதன்படி நாவுக்கரசர் அருளிய தேவாரப் பதிகப் பாடல்களின் விவரம் வருமாறு : (தமிழ் நிலையப் பதிப்பிற் கண்டவாறு. நான்காம் திருமுறையில் சில பதிப்பில் 1069 பாடல்கள் காணப்படுகின்றன.)

| வ.எ. | திருமுறை | பதிகம் | பாடல்கள் |
|---|---|---|---|
| 1 | நான்காம் திருமுறை | 113 | 1070 |
| 2 | ஐந்தாம் திருமுறை | 100 | 1015 |
| 3 | ஆறாம் திருமுறை | 99 | 980 |
| | ஆக மொத்தம் | 312 | 3065 |

நான்காம் திருமுறை கீழ்க்கண்டவாறு பத்துப் பண்களில் அமைந்துள்ளது :

*இந்தளம், காந்தார பஞ்சமம்; காந்தாரம், குறிஞ்சி; கொல்லி, சாதாரி, சீகாமரம், பழந்தக்கராகம், பழம்பஞ்சுரம், பியந்தைக் காந்தாரம்*

இத்திருமுறையில் அமைந்த அற்புதத் திருப்பதிகங்கள் : ஏழு.

ஐந்தாம் திருமுறை முழுதும் 'திருக்குறுந்தொகை'. இதில் அமைந்த அற்புதத் திருப்பதிகங்கள் : மூன்று.

ஆறாம் திருமுறை முழுதும் திருத்தாண்டகப் பதிகங்கள்; இதில் அமைந்த அற்புதத் திருப்பதிகங்கள் : நான்கு.[24]

இவ் ஆறாந்திருமுறையைத் 'தாண்டகத் திருமுறை' என்றும், இத் தாண்டகங்களைப் பாடிய சிறப்பால், திருநாவுக்கரசரைத் 'தாண்டக வேந்தர்' என்றும் போற்றுவர் அறிஞர். அப்பர் அருளிய "இத்திருத்தாண்டகத்திற்கு ஈடு இணை வேறு இல்லை" என்றும் கூறுவர்.[25]

இத்திருப்பதிகங்களால் திருநாவுக்கரசர் பாடிய சிறப்பினையுடைய ஊர்கள் : 125. இவற்றில் ஒரு திருப்பதிகம் மட்டுமே பெற்றவை : 76. இரண்டு திருப்பதிகங்கள் பெற்றவை : 23. மூன்று திருப்பதிகங்கள் பெற்றவை : 7; நான்கும் நான்குக்கு மேற்பட்டவையுமாகிய திருப்பதிகங்கள் பெற்றவை : 19. இவற்றுள் மிகுதியான திருப்பதிகங்கள் பெற்ற திருத்தலங்கள் இரண்டு. ஒன்று, திருவாரூர்; மற்றது, திருவதிகை.

இத்திருப்பதிகங்கள் குறித்து ஔவை சு. துரைசாமிப்பிள்ளை கூறுவது இவண் குறிக்கத்தகும் :

> "திருநாவுக்கரசர் அருளிய திருப்பதிகங்கள், இறைவன் இயல்பு, உயிர்களின் இயல்பு, இறைவன் உயிர்கட்கு அருள் செய்யும் திறம், கற்றவர்களும் தேவர்களும் பிறரும் இறைவனுக்கு அடியார்களாய் அன்பு செய்யும் முறை, இறைவன் அவர்களுடைய மனக்கவலைகளைப் போக்கி அருளி இன்புறுத்துவது முதலிய பல பொருள்களை விரித்துக் கூறுகின்றன"[26]

அப்பரடிகள், நம் தண்டமிழின் இசைக்குக் காலத்தாற் செய்த அருந்தொண்டு குறித்துக் குன்றக்குடி அடிகளார் கூறுவது வருமாறு :

> "ஏழாம் நூற்றாண்டில் தமிழிசைக்கு ஆபத்து வந்தபோது 'பண்ணோடு இசை கேட்கார்' அதைக் கேட்பது பாவம்' என்று கூறிய காலத்தில் பண்ணோடு இசை பாடித் தமிழகத்தில் இசை வெள்ளம் பாய்ந்தோடச் செய்த பெருமை அப்பரடிகளையே சாரும்"[27]

"யாப்பு அடிப்படையில் பதிகப் பாகுபாடு அமைக்கப்பட்டுள்ளது; அப்பர் பாடல்களில் உவமைகளும் உருவகங்களும் உள்ளன; எளிமையும் நேரடியாகப் பொருளை விளக்கும் பாங்கும் அப்பாடல்களிற் காணலாம்" என்கிறார் தேவபூபதி நடராசா.[28]

'நால்வர் நான்மணிமாலை' பாடிய சிவப்பிரகாச சுவாமிகள், திருநாவுக்கரசருக்கென அமைத்த பா யாப்பு, 'கட்டளைக் கலித்துறை'யாகும். இவ்வாறு பாடப்பெற்றதன் நுட்பத்தை வை. இரத்தினசபாபதி பின்வருமாறு எடுத்துக்காட்டுவர் :

> "வாழ்க்கையில் உத்தம இலக்கணத்தோடு வாழ்ந்து, பேரின்ப வாழ்வை இவ்வுலக வாழ்விலேயே பெற்றும், பெறுமாறு அறிவுறுத்தியும் நின்ற நாவுக்கரசர், எழுத்தெண்ணிப் பாடும் இலக்கண நெறியோடு அமைந்த கட்டளைக் கலித்துறையால் பாடப்பெறுவராயினர். அருள்வாழ்வை இன்ப வாழ்வுடன் இணைத்து, உலகிற்கு

*எடுத்து வழங்குமபோது (கோவை பாடும்போது) கட்டளைக் கலித்துறை பாடுதல் வேண்டும் என்ற வரையறையை உன்னுக.”*[29]

திருக்குறள் நெறியே - அப்பர் கைக்கொண்ட நெறி; அதுவே 'திருநெறி - செம்மை நெறி' நாவரசர். 'திருநின்ற செம்மையினையே செம்மை நெறியாகக் கொண்டொழுகிய அருளாளர்' என்று அறிஞர் கூறுவதும்[30] ஏற்புடைத்தே.

**நாவரசர் தேவாரத்தில் 'சைவ சித்தாந்தம்'**

“நிலக்கரி யுகத்திற்கும் அதற்கும் முன்னருள்ள காலந் தொட்டே சைவ சமயம் உள்ளதாகத் தெரிகிறது” என்பர் ர. ராமானுஜாசாரி.[31] இத்தகு பழமையான சைவத்தின் முடிந்த முடிபினைக் கூறுவது 'சைவ சித்தாந்தம்'. சிவத்துக்கும் உயிருக்குமுள்ள தொடர்பு - சிவத்துக்கும் உயிரில்லாத உலகிற்குமுள்ள தொடர்பு - உயிர்கட்கும் உலகிற்குமுள்ள தொடர்பு - உயிர்க்கும் உடம்புக்கும் உளதாகிய தொடர்பு ஆகியவற்றை விரித்துரைப்பது 'சைவ சித்தாந்தம்'.

திருநாவுக்கரசர் திருவாய் மொழிந்தருளிய தேவாரத் திருப்பதிகங்களில், இத் தெய்வத் தமிழ்நாட்டில் தொன்றுதொட்டு இருந்துவரும் 'சைவ சித்தாந்த'க் கருத்துக்கள் விரிவாக இடம்பெற்றுள்ளன. எந்தப் பாடலை நோக்கினும் அதன்கண் ஏதாவதொரு சைவ சித்தாந்தக் கருத்து இடம்பெறுவதை அறியலாம்.

'திருநாவுக்கரசு' என்னும் பெயரில் 'திரு' என்பது அடைமொழி. எனினும் 'கண்டாரால் விரும்பப்படும் தன்மை' என்ற பொருளுடையது. 'நாவுக்கரசு' என்ற சொல்லில், 'க்' என்னும் ஒற்றெழுத்தைக் கணக்கிற் கொள்ளாமல் எண்ணினால் 'ஐந்தெழுத்தே' உண்டு.[32] இது, வெறும் எண்ணிக்கையிலமைந்த சொல்லன்று; பஞ்சாட்சர மந்திரமாக நின்று பயனளிப்பது; அதனாற்றான், 'திருநாவுக்கரசு' எனும் ஒரு திருப்பெயரைச் சொல்லியே சிவப்பேறு எய்தி விடுகிறார் அப்பூதியடிகள்!

*“உற்றான் அலன் தவம் தீயில்நின்*
*றான்அலன்; ஊண் புனலா*
*அற்றான் அலன்; நுகர்வும்திரு*
*நாவுக்கரசு எனும்ஓர்*
*சொற்றான் எழுதியும் கூறியு*
*மேஎன்றும் துன்பில்பதம்*
*பெற்றான் ஒருநம்பி அப்பூதி*
*என்னும் பெருந்தகையே!”*[33]

**எனச் சிவப்பிரகாச சுவாமிகள் ஏத்துவது இவண் எண்ணத்தகும்.**

## முடிபுகள்

இவ் 'இயல்' வாயிலாக அறியலாகும் முடிபுகளாவன :

1. திருநாவுக்கரசரது வாழ்க்கை வரலாற்றை முழுமையாகக் கூறுவது 'திருத்தொண்டர் புராணம்';
2. நாவரசர், திருவாமூரில் திருவவதாரம் செய்து, அமண் சமயம் சார்ந்து, தமக்கை திலகவதியாரால் மீண்டும் சைவம் வந்து, அமணர்களால் பல துன்பங்கட்கு ஆளாகிச் சிவபிரான் திருவருளால் உய்வு பெற்றவர்;
3. பல திருத்தலங்கட்கும் சென்று, தேவாரத் திருப்பதிகங்கள் அருளித் தம் 89ஆம் வயதில், திருப்புகலூரில், 'எண்ணுகேன்' எனும் திருப்பாடல் பாடிச் சிவப்பேறு எய்தியவர்;
4. தேவாரம் பாடிய மூவருள், காலத்தால் முற்பட்டவர் நாவரசர்; இவரது காலம் கி.பி. 7ஆம் நூற்றாண்டு;
5. நாவரசர் பாடிய பதிகங்கள் 4900, எனினும் அச்சாகி வெளிவந்தவை 312 பதிகங்கள் மட்டுமே;
6. இவர் பாடியவை யாப்பு அடிப்படையில் 4, 5, 6 திருமுறைகளாக வகுக்கப்பெற்றுள்ளன;
7. நாவுக்கரசர், 'தாண்டக வேந்தர்' என்ற சிறப்புப் பெற்றவர்;
8. பண்ணோடு இசைபாடித் தமிழகத்தில் இசை வெள்ளம் பாய்ந்தோடச் செய்த வித்தகர்;
9. திருக்குறள் நெறியே - அப்பர் கைக்கொண்ட செம்மைநெறி;
10. நாவரசர் பாடிய தேவாரத் திருப்பதிகங்களில் சைவ சித்தாந்தக் கருத்துக்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன;
11. 'நாவுக்கரசர்' என்ற சொல்லே பஞ்சாட்சர மந்திரமாகக் கொள்ளத்தகுவது;
12. நாவரசர் திருப்பெயரைக் கூறியே சிவப்பேறு எய்தியவர் அப்பூதியடிகள்.

## சான்றெண் விளக்கம்


1. சுந்தரர் தேவாரம், திருத்தொண்டத் தொகை. 4:1.
2. திருத்தொண்டர் புராணம், திருநாவுக்கரசர் புராணம். 1.
3. மேலது, 46:1:4.
4. திருநாவுக்கரசர் தேவாரம். 4:1.
5. திருத்தொண்டர் புராணம். திருநாவுக்கரசர் புராணம், 74:2-3.
6. ச. சச்சிதானந்தம்பிள்ளை, 'திருநாவுக்கரசு சுவாமிகள்'. நால்வர் சரித்திரமும் அற்புதத் தேவாரத் திரட்டும். ப. 23.

7. ச. சாம்பசிவனார். அப்பர் குறுந்தொகை ஐம்பது மூலமும் பொழிப்புரையும். பக். 6-8.

8. சி.கே. சுப்பிரமணிய முதலியார். சேக்கிழார், பக். 106-107.

9. அ.ச. ஞானசம்பந்தன். பெரியபுராணம் ஓர் ஆய்வு. பக். 251. 254. 255.

10. திருத்தொண்டர் புராணம். திருநாவுக்கரசர் புராணம். 361 1-2.

11. மேலது. 366.3-4.

12. திருநாவுக்கரசர் தேவாரம். 6 971

13 ம.சா. அறிவுடைநம்பி. திருநாவுக்கரசர் தேவாரத்தில் காணப்படும் இலக்கியக் கொள்கைகள். பக். 16-17.

14. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை. சைவ இலக்கிய வரலாறு (கி.பி. 7 முதல் 10ஆம் நூற்றாண்டு வரை). பக். 126. 128.

15. பாரதிதாசன். தமிழியக்கம். 59.3.

16. ச. ஆறுமுக முதலியார். திருநாவுக்கரசர், ப. 91.

17. கழகத் தமிழ்க் கையகராதி. ப. 229.

18. சுந்தரர் தேவாரம். 65.2.

19. திருநாவுக்கரசுதேவர் திருஏகாதசமாலை. 7 1

20. திருத்தொண்டர் புராணம். ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம். 150.

21. திருமுறை கண்ட புராணம். 15-3-4

22. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை. மு.கா. நூல். பக். 438. 439.

23. கு. நடேசக் கவுண்டர். அப்பர் வரலாற்றாராய்ச்சியும் தேவாரத் திறனாய்வும், ப. 107.

24. தேவார அடங்கன்முறை. பக். 681, 809, 987.

25. Peria Puranam, English Version by G. Vannukanathan, p. 316.

26. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை. மு.கா. நூல். ப. 137.

27. குன்றக்குடி அடிகளார். அப்பர் விருந்து. ப. 7.

28. Devapoopathy Nadarajah, The Strength of Shaivism. pp. 21-22.

29. வை. இரத்தினசபாபதி. 'ஆராய்ச்சி முன்னுரை'. நால்வர் நான்மணி மாலை உரை. ப. 15.

30. ஜி. சுப்பிரமணியபிள்ளை. நாவுக்கரசும் திருவள்ளுவரும். ப. 3.

31. ர. ராமானுஜாசாரி. சைவ சித்தாந்தம். ப. 1.

32 வை. இரத்தினசபாபதி. திருமுறைத் தெளிவே சிவஞானபோதம். ப. 124.

33. நால்வர் நான்மணி மாலை. 38.



# 3
# திருநாவுக்கரசர் தேவாரத்தில் 'பதியியற் கொள்கை'

## முன்னுரை

சைவ சித்தாந்தம் கூறும் 'இறை (பதி), உயிர் (பசு), தளை (பாசம்)' எனும் மூன்றனுள், 'பதி' முதன்மைப் பொருள். திருநாவுக்கரசர் அருளிய தேவாரப் பதிகங்களில் காணலாகும் 'பதியியற் கொள்கை' பற்றி இவ்வியல் ஆராய்கிறது.

## முப்பொருள்

> *"சிவஞானபோதச் செந்தமிழ்நூல், வழியளவையான, மெய்ப்பொருள் உண்மைகளை நாட்டும் மெய்ந்நூலாகும். சுட்டியுணரப்படுவன அனைத்தும் 'காரியப் பொருள்கள்' ஆகும்; சுட்டுணர்வுக்கு எட்டாதன 'காரணப் பொருள்கள்'. காரணப் பொருள்கள், என்றும் ஒன்றுபோல் நின்று நிலவுவன. காரியப் பொருள்கள் தோன்றி யொடுங்குவன. மேலும் அவை, அறிவில்லன. காரணப் பொருள்கள், 'இறை; உயிர், தளை' என மூன்றாம். இவற்றையே 'முப்பொருள்கள்' என்ப."*[1]

என்று கூறும் ப. இராமநாதபிள்ளை, தொல்காப்பியத்தில் வரும்,

> *"வேண்டிய கல்வி யாண்டு* **மூன் றிறவாது**"[2]

எனும் நூற்பாவில் 'மூன்று' என்பதற்கு **'முப்பொருள்'** எனப் புதுப்பொருள் கூறி, "இம் முப்பொருள்களை, நல்லாசானை யடுத்துக் கற்பதே கல்வியின் முடிநிலை" என்றும் விளக்குவர்.

> *"பலகலைஆ கமவேதம் யாவையினும் கருத்துப*
> **பதிபசுபா சந்**தெரித்தல்"[3]

என்பது சிவப்பிரகாசம். திருமூலரும்,

"**பதிபசு பாசம்** *எனப்பகர் மூன்றிற்*
*பதியினைப் போற்பசு பாசம் அனாதி*"[4]

என இம்முப்பொருள் பற்றிக் கூறுவர்.

பதியாகிய கடவுள் என்று உண்டோ, அன்றே பசுவாகிய உயிரும், அவ்வுயிர்களைப் பிணித்துள்ள பாசமும் உண்டு என்பது சைவ சித்தாந்தம் கூறும் முடிந்த முடிபு. இவ்வாறு கூறுவதனால் இம் மூன்று பொருள்களும் சமமானவை எனல் தகாது; இறைவனே முதற்பொருள்: தகுதியால் வெவ்வேறு இயல்புடையன.[5] இம்முப்பொருள்களுள், 'பதி'யே எஞ்சிய இரண்டின்மேல் ஆதிக்கமும், ஆணையும் கொண்டுள்ளது.[6]

"இவை மூன்றும் என்றும் உள்ளவை என்பது சித்தாந்தம். இல்லது வாராது; உள்ளது போகாது என்பது சித்தாந்தம் ஏற்கும் முற்கோள் (postulate). இதன் உட்கிடையாகக் காரண காரியத் தொடர்பை விளக்குவதற்குச் சத்காரியவாதம் மேற்கொள்ளப் பெறுகிறது" என்பர் வ.ஆ. தேவசேனாபதி.[7]

*"பதியும் பசுவும் பாசமுமாய் பன்னும் பலவே தாகமத்தின்*
*விதியுந் தேரிற பதியொன்றே வேறாம பசுகக ளனந்தமவை*
*பொதியும் பாச மைந்தாகப புகலு மவையென*
*போலெனின்வினா*
*கதிருந் தெரிகண களுமிருளுங காய மாதி களும்போலும்!"*[8]

எனச் 'சைவ சித்தாந்த சாரம்' நூலாசிரியர் சிவானந்த தேசிகர் கூறுவதும் இவண் ஒப்புநோக்கத்தகும்.

## முத்தி தரும் பரசிவனே முதல்வன்

'பதி'யாகிய பரசிவன் குறித்து ந. சுப்புரெட்டியார் கூறுவது இங்குக் குறிப்பிடல் சாலும் :

*"இந்த முப்பொருள்களுள் 'பதி' ஏனையவற்றைவிடப் பேராற்றல் வாய்ந்தது; சுதந்திரம் உடையது; பசுவும் பாசமும் சுதந்திரத் தன்மையின்றிப் பதியின விருபபப்படிச் செயற்படுவனவாகும். மேலும், பசுவும் பாசமும் மற்றொன்றின் சார்பினால் தன்மையில் மாறுபடும். பதியோ அங்ஙனம் எந்தப் பொருளின் சார்பினாலும் மாறுபடாமல் என்றும் ஒரே பெற்றிதாய் இருக்கும் . . . பதி உலகத்தை நோக்கி நிற்கும் நிலையில் காணப்பெறும் இயல்புகள் 'தடத்த இலக்கணமா'கும். இனிப் பதியின் சொரூப இலக்கணத்தை விளக்குவேன் . இது, குணம் குறிகளைக் கடந்த நிலை; பதி ஒன்றே; அதாவது அஃது*

*ஏகமாய் இருக்கும். எல்லாவற்றிற்கும் மேலானது. அது காணப்படும் உருவமற்றது. காலம் இடம் இவற்றால் அளவுபடுத்தப்படாதது. குணங்களும் இல்லை. அடையாளங்களும் இல்லை. மலமற்றது; என்றும் அழியாதிருப்பது. ஆன்மாக்களுக்கு அறிவாய் நிற்பது. சலிப்பற்றது. அளவு படாததால் போக்குவரவாகிய அசைவு இல்லாதது. காட்சிக்கும் கருத்துக்கும் அப்பாற்பட்டது"[9]*

- இவ்வாறு கூறுபவர், தாயுமான அடிகளின் பின்வரும் பாடலைச் சான்றாகக் காட்டுகிறார் :

*"தணையிலானதனம் தறிஇலான*
*குறைவிலான் கொடிதாம்*
*புலமிலானதனக் கென்னவூர்*
*பற்றிலான் பொருந்தும்*
*இலமிலான் மைந்தர் மனைவியில்*
*லான எவனவ் அவனசரு*
*சலமிலான முத்தி தரும* **பர**
**சிவன்***எனத் தகுமே"*[10]

இத்திருப்பாட்டில், இத்தகையான் பரசிவன் ஒருவனே எனத் தெளிவுறுத்தியிருப்பது நோக்கத்தகும்.

எல்லாம்வல்ல முழுமுதற் பரம்பொருளாக விளங்கும் சிவபெருமானைப் பற்றியும், எண்ணிலா உயிர்களைப் பற்றியும், அவ்வுயிர்கள் பிறந்து இறந்து உழல்வதற்கு அடிப்படையாக இருக்கும் 'ஆணவம், கன்மம், மாயை' எனும் பாசங்களைப் பற்றியும் விரித்து உரைப்பன, சாத்திர, தோத்திர நூல்களாம். பன்னிரு திருமுறைகள் - தோத்திர நூல்கள்; 'திருவுந்தியார்' முதலாகச் 'சங்கற்ப நிராகரணம்' ஈறாகப் பதினான்கும் - சாத்திர நூல்கள்.

*"உந்தி களிறே உயர்போதம் சித்தியார்*
*பிந்திருபா உண்மை பிரகாசம் வந்தஅருள்*
*பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு*
*உண்மைநெறி சங்கற்பம் உற்று"*

எனும் பழைய வெண்பாவால், இப் பதினான்கு சாத்திர நூல்களின் பெயர்களை அறியலாம். இச் சாத்திர நூல்கள் நுவலும் சைவ சித்தாந்தத் தத்துவ உண்மைகளுக்கு மூலமாய் அமைந்தவை சைவத் திருமுறைகள் ஆகும்.

இப் பதினான்கு நூல்களில் காலத்தால் முற்பட்டவை திருவுந்தியாரும் திருக்களிற்றுப்படியாருமாகும். இவற்றிற்குப் பின்னெழுந்த ஒப்புயர்வற்ற நூலே மெய்கண்டார் அருளிய '**சிவஞானபோதம்**' ஆகும். இதனாற்றான், தாயுமான அடிகளாரும்,

> *"பொய்கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித*
> *மெய்கண்ட நாதன்அருள் மேவுநாள் எந்நாளோ?"*[11]

என ஏத்தி இசைப்பாராயினர்.

இத்தகைய சிவஞானபோதமெனும் செம்பொருட்டுணிவு நூலின் சீர்மை குறித்து மறைமலையடிகளார் கூறுவது இவண் குறித்தல் சாலும் :

> *". . . . சிவஞானபோதமோ. காணப்பட்ட இவ்வுலகினைக் கொண்டு காணப்படாத கடவுளொன்றுண்டெனவும், அதுதான் படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழில்களைப் புரிவதாமெனவும் . . .* ***அம்முழுமுதலறிவுப் பொருடான்*** *உலகுயிர்களிற் பிரிவற நிறைந்து நின்று அம்முத்தொழில்களை உயிர்களின் அறிவு விளக்க இன்பப் பேற்றின்பொருட்டு நிகழ்த்தாநிற்குமெனவும். உடலின் வேறாக உயிர் என்பதொரு பொருள் உண்டெனவும், அவ்வுயிர்தானும் ஒன்றாகாமற் பலவாய்ப் பலவேறு தன்மைகள் வாய்ந்தனவாய் என்றுந் தம்முதல் அழியாமல் இருக்குமெனவும். அவ்வுயிர்களெல்லாந் தொன்றுதொட்டே* ***ஆணவம்*** *எனப்படும்* ***ஓரிருளால்*** *தம் விழை வறிவு செயல்கள் மறைக்கப்பட்டு நிற்றலின் அவ்விருள் நீக்கத்தின் பொருட்டு இறைவனாற் படைத்துக் கொடுக்கப்பட்ட இப்பல்வேறுடம்புகளைக் கருவியாய்க் கொண்டே அவ்விழை வறிவு செயல்கள் விளங்கப்பெற்று வருகின்றனவென்றும் . . . இறைவன் சேர்க்கை யாலன்றி உயிர்கட்கு விழைவறிவு செயல்கள் விளங்காவெனவும் . . மயங்கி வருந்தும் உயிர்களுக்கு அவ்வுயிர்களுள் உயிராய் மறைந்துநின்று அருள்புரிந்து வரும்* ***முதல்வனே*** *இரக்கமிகுதியாற் குருவடிவிற் போந்து அவ்வியல்புகளை யுணர்த்த அதனான் மெய்யுணர்வு தோன்றப் பெற்று அவ்வுயிர்கள்* ***இறைவன் திருவடியினை*** *ஒருங்கு தலைக்கூடு மெனவும் . . . . சிவனடியார் வடிவினையுந் திருக்கோயில்களையுஞ்* ***சிவமே****யெனக் கருதி வழிபடுதல் இன்றியமையாததா மெனவும் இனிது விளங்குந் தனிப்பெருமாட்சி வாய்ந்ததாகும்!"*[12]

ஈசன், எல்லா இடங்களிலும் கலந்தும் விரிந்தும் விளங்குபவன்; அந்தமும் ஆதியும் ஆனவன்; பிறவியைத் தரும் பந்தமாகவும், அதிலிருந்து விடுவிக்கும் முத்திப் பேற்றிற்குரிய வீட்டுலகமாகவும் இருப்பவன். இதனைத் திருநாவுக்கரசர்,

*"அந்தமும் ஆதியும் ஆகிநின்*
*றீர்!அண்டம் எண்திசையும்*
*பந்தமும் வீடும் பரப்புகின்*
*றீர்!பசு ஏறுகந்தீர்!*
*வெந்தழல் ஓம்பும் மிழலையுள*
*ளீர்!என்னைத் தென்திசைக்கே*
*உந்திடும் போது மறக்கினும*
*என்னைக் குறிக்கொள்மினே!"*[13]

என்று கூறுவதால் உணரலாம். "திருவீழிமிழலையுள் எழுந்தருளியுள்ள எம்பெருமானே! தென்திசைக் காலன், என்னை உந்தித் தள்ளும் போது, நான் மறந்தாலும், அடியேனை மறவாது குறிக்கொண்டு காத்தருள் புரிவீராக!" என இறைவனின் பேரருட்டிறத்தைப் புலப்படுத்துகின்றார் நாவரசர்.

தமக்குப் பேரருள் சுரந்த பரமனை, "அம்மான், தலைவன், தத்துவன், தழலன், அப்பன், நின்மலன், உலகினுக்கு ஒருவன், பராபரன்" என்று பலவாறு போற்றும் நாவுக்கரசர்,

*"விண்ணினார் விண்ணின் மிக்கார்*
*வேதங்கள் விரும்பி ஓதப்*
*பண்ணினார் கின்ன ரங்கள்*
*பத்தர்கள் பாடி யாடக்*
*கண்ணினார் கண்ணின உள்ளே*
*சோதியாய் நின்ற எந்தை*
*மண்ணினார்! . . . . ."*[14]

என்றும் ஏத்துகின்றார்.

*"அவன்அவள் அதுஎனும் அவைமூ வினைமையில்*
*தோற்றிய திதியே ஒடுங்கிமலத் துளதாம்*
*அந்தம்ஆதி என்மனார் புலவர்"*[15]

என்பது மெய்கண்டார் அருளிய முதல் சூத்திரம்.

இவ்வுலகம் ஒரு தொகுதிப் பொருள். 'ஒருவன், ஒருத்தி, ஒன்று' என்பவற்றின் கூட்டமே உலகம். நம் அறிவினால் சுட்டி அறியப்படுவது. எனவே இவ்வுலகம் 'தோன்றுதல், நிற்றல், அழிதல்' ஆகிய முத்தொழில்கள்

உடையது என்பது போதரும். அறிவற்ற உலகம், தானே தோன்றி, நின்று அழியும் எனல் பொருந்தாது ஆதலின் அதனைத் தோற்றுவித்து நடத்த ஒரு முதல்வன் தேவை. இவ்வுலகம் தோற்றுவிக்கப்படுதற்கு முன்னர் ஒடுங்கியிருந்தது; முன்பு அவ்வாறு ஒடுக்குமாறு செய்த ஒருவன்தான் மீண்டும் அதனைத் தோற்றுவிக்க முடியும். எனவே ஒடுக்கத்தைச் செய்யும் அழித்தற் கடவுளே (சங்கார காரணன்) உலகிற்கு முதற்கடவுள்;[16] அவனே சிவபெருமான் என்பது இச்சூத்திரக் கருத்து.

அப்பரடிகள் அருளிய திருப்பாதிரிப்புலியூர்த் திருப்பதிகத்துள் வரும் ஒரு திருப்பாட்டு :

*"ஈன்றாளு மாய்,எனக்கு எந்தையு*
*மாய்,உடன் தோன்றினராய்*
**மூன்றாய் உலகம் படைத்துஉகந்**
*தான்.மனத் துள்ளிருக்க*
*ஏன்றான் இமையவர்க்கு அன்பன்*
*திருப்பா திரிப்புலியூர்த்*
**தோன்றாத் துணையாய் இருந்தனன்**
*தன்னடி யோங்களுக்கே!"*[17]

"திருப்பாதிரிப்புலியூர் ஈசன், என்னை ஈன்ற அன்னை; எனக்குத் தந்தை; என்னுடன் தோன்றியவன்; இவ்வாறு மூவிதத்தில் உறவினன்; உலகங்களைப் படைத்துக் காப்பவன்; என் மனத்துள் என்றும் இருப்பவன்; தேவர்க்கு அன்பன்; என் போன்ற அடியவர்களுக்கோ என்றும் தோன்றாத் துணை!" என்பது இப்பாடற் பொருள்.

நாவரசரே பிறிதோரிடத்தில்,

"**அப்பன்நீ! அம்மைநீ!** *ஐயனும்நீ!*
*அன்புடைய மாமனும் மாமியும்நீ!"*[18]

என்று கூறுவதும் இவண் சுட்டத்தகும். பொதுவாக, இறைவனை, 'அம்மை அப்பராக'க் காண்டல் அடியார்தம் இயல்பு.

*"தோடுடைய செவியன்"*[19]

எனச் சம்பந்தர், முதன் முதலாக ஆண்டவனை அம்மையப்பனாகக் காண்கின்றார்.

*"தாயவளாய்த் தந்தையாகிச் சாதல்பிறத்த லின்றி"*[20]

எனச் சுந்தரரும்,

*"அம்மையே! அப்பா! ஒப்பிலா மணியே!"*[21]

என மணிவாசகரும் மொழிந்தமை ஒப்புநோக்கத்தகும்.

இவ்வாறு 'அம்மையப்பனா'கக் காண்பது ஒருபுறமிருக்க, ஈண்டு நாவரசரோ, 'உடன் தோன்றினராய்' என்று கூறுவது சிந்திக்கத்தக்கது. இதற்கு வை. இரத்தினசபாபதி, பின்வருமாறு விளக்கம் தருகின்றார் :

> *"உடன் தோன்றினராய் என்ற கருத்தை வேறு அருளாளர்களிடத்திற் காணப்பெறல் அரிது. 'உடன் தோன்றினார்' என்று குறிப்பிட்ட ஒன்று, திலகவதியாரைக் கொண்டதாகக் கொள்ளலாம். மேலும், தாயும் தந்தையும் இறந்தபிறகும், தமபியார் உளராக வேண்டும் என வைத்த தயையே காரணமாக உயிர் வாழ்ந்து, பின்னர்த் திருவாளன் திருநீற்றினைத் தந்து அருள்வழிப்படுத்திய காரணத்தால், தாயாகவும், தந்தையாகவும், உடன்பிறந்தாராகவும் திலகவதியாரே விளங்கினார் என்ற கருத்தில் உடனதோன்றியும், அதிலும் பின் தோன்றாது முன்தோன்றியும்; தம்மை வழிப்படுத்திய திலகவதியாரே செம்பொருள் நின்ற திறம் எனக் காட்டுவாராகி,* **எல்லாவற்றிலும் உயிர்களின் தோன்றாத்துணையாக நிற்கிறான் இறைவன்** *எனக் குறிப்பிட்டருளினன்! 'உடன் தோன்றினராய்' என்ற கருத்து, 'உடனானான்' என்ற கருத்தை ஒத்ததேயெனினும், இணைந்து நிற்கும் அவ்வளவே கொள்ளுதல் கூடாது. துணை செய்கிறான்;* **துணையைப் பெற்றே உயிர் தன்னைச் செயற்படுத்துகிறது என்னும் பரம்பொருளின் இலக்கணத்தை உணர்த்திக் காட்டினார்!**"[22]

ஈசனையன்றி வேறு பற்றின்மையை உணர்த்துவதாகவும் இத் திருப்பாட்டு அமைந்துள்ளது. இதே பதிகத்தில் "பற்றாய் நினைந்திடப் போது நெஞ்சே!" என அடுத்த பாடலாய் வருவதும் இதற்குச் சான்றாகும்.

> "**பற்றுக பற்றற்றான் பற்றினை** *அப்பற்றைப்*
> *பற்றுக பற்று விடற்கு*"[23]

என வள்ளுவர் வாய்மொழியும் இங்கு ஒப்புநோக்கத்தகும்.

'பிரமன், விட்டுணு, உருத்திரன்' என மும்மூர்த்திகளின் பெயர்களும், அவர்கள் இயற்றும் தொழில்களும் பற்றிப் புராண நூல்கள் விரிவாகப் பேசும். எனவே, 'உலகிற்கு முதல்வர் பலர் உண்டு' எனக் கூறுவோரும் உளர். 'தேர் செய்தல்' எனும் ஒரு தொழிலை எடுத்துக் கொண்டால் அதனை ஒருவன்மட்டுமே செய்துவிடமுடியாது; பலர் கூடிச் செய்தல் வேண்டும். அவ்வாறிருக்கத் தேரினும் மிகப் பெரியதாய், மிகப் பல வகையாய் அமைந்த இவ்வுலகைப் படைத்தல் முதலாய தொழில்களை ஒருவனே செய்கிறான்

எனல் பொருந்தாது எனச் சான்றும் கூறுவர். இதனைச் 'சிவஞானபோதம்' பின்வருமாறு மறுக்கிறது :

*"இனிச் சங்காரமே முதலென்றது"*

*"சுட்டுணர்வாகிய பிரபஞ்சம். சுட்டுணர்வின்றி நின்ற சங்காரத்தின் வழியல்லது சுதந்திரமின்றி நிற்றலான்"*[24]

இங்குக் காட்டப்பட்ட 'மேற்கோள், ஏது' இவற்றின் மூலம் பெறப்படும் கருத்து வருமாறு :

*"தேர் செய்தல் முதலிய பெருஞ்செயல்கள் பலராலே செய்யப்படினும். அவருள் ஒருவன் வழி நின்றே ஏனையோர் செய்தல் கண்கூடு. அவ்வொருவன மட்டுமே சுதந்திரம் உடையவனாக, ஏனையோர் பலரும் சுதந்திரம் இன்றி அவன் வழியே நிற்பர். அதுபோலவே உலகத்தைப படைத்தல் முதலிய செயலிலும் பலர் உளாராயினும். அவருள் 'சங்கார காரணன்' ஒருவனே சுதந்திரம் உடையவனாக. ஏனையோா பலரும் சுதந்திரம் இன்றி நிற்பவரே என உணர்தல் வேண்டும்."*[25]

எனவே 'சங்காரகாரணன்' ஒருவனே முதல் என்பது போதரும்.

*". . . . . .*
*பிரமனும் மாலும் மேலை முடியோடு பாதம்*
*அறியாமை நின்ற பெரியோன்*
*பரமுத் லாயதேவர் சிவனாய மூர்த்தி*
*அவனா நமக்கொர் சரணே"*[26]

என்னும் இத்திருப்பாட்டில் நாவரசர், பிரமனும் மாலும் சிவபெருமானின் அடிமுடி தேடிக் காணமுடியாது நின்று, பின்னர் ஈசனின் இருபுறமும் நின்று பணிந்தனர் என்பதைச் சுட்டுகின்றார்.

*"காலமும் நான்கன்ஊழி படையாமுன் ஏக*
*உருவாகி மூவர் உருவில் . . . .*
*ஞாலமும் மேலை விண்ணோடு உலகேழும் உண்டு*
*குறளாய் ஓர்ஆலின் இலைமேல்*
*பாலனும் ஆயவற்கோர் பரமாய மூர்த்தி"*[27]

எனும் பாட்டில், "உலகமும் காலமும் தோன்றுவதற்கும், யாவும் படைக்கப்படுவதற்கும் முன்னால் ஏகனாக விளங்கியவர் சிவபெருமான்; உலகேழும் உண்ட திருமால், ஆலிலையின்மேல் பாற்கடலில் பள்ளி கொண்டிருக்க, அவருக்குப் பரம்பொருளாக விளங்குபவர்" என்று கூறுவது

கொண்டு, பிரமன், விட்டுணு முதலானோர்க்கும் முதல்வன் சிவபெருமானே என்னும் உண்மை தெளியலாம்.

> "அரிக்கும் பிரமற்கும் அல்லாத தேவர்கட்கும்
> தெரிக்கும் படித்தன்றி நின்ற சிவம்"[28]

எனும் திருவாசகமும் ஈண்டுக் கருதத்தக்கது.

முதல்வனின் ஆணைவழியே நின்று, 'படைத்தல், காத்தல், அழித்தல்' எனும் முத்தொழில்களை மும்மூர்த்திகள் செய்வர் என்பதாம்.

> "அம்மூவரும் ஒவ்வொரு தொழிலுக்கே உரியவராகச், சிவபெருமான் ஒருவனே முத்தொழிலுக்கும் முதல்வனாய் நின்று, இறுதிக்காலத்தில் எல்லாவற்றையும் ஒருசேரப் ஒடுக்குகின்ற முற்றழிப்பைச் செய்வான். முற்றழிப்பு, 'மகாசங்காரம்' எனப்படும். அதனைச் செய்பவன் 'மகாசங்கார காரணன்' எனப்படுகின்றான்"[29]

என விளக்குவர் ஆ. ஆனந்தராசன்.

நாவுக்கரசர் பாடல்களில் 'ஊழி'யைப் பற்றிய கருத்துக்கள் இயம்பப்பட்டுள்ளன.

> "ஊழி அளக்கவல் லானும்'

> " . . . . மயானத்தில்
> நீற்றற மேனியனாய்"

> " . . ஊழிஊழி
> பவந்திட்ட பரமனார்"

> ". . . . . ஊழி முதலானான் காண்"

> " மயானத்தான்காண்"

> ". . . ஊழிதோ றூழி உயர்ந்தான்"

> "ஊழிபலகண் டிருந்தார் போலும்"

> "சவந்தாங்கு மயானத்துச் சாம்ப லென்பு
> தலையோடு மயிர்க்கயிறு தரித்தான"[30]

எனவரும் பகுதிகள், ஈசன், மகாசங்காரகாரணனாக இருந்து மயானத்துச் சாம்பலையும் என்பையும் அணிந்து கொள்வான் என்பதைச் சுட்டுகின்றன.

> ". . . . . . எம்பிரான
> கழுதொடு காட்டிடை நாடக
> மாடிக் கதியிலியாய்

*உழுவையின் தோலுடுத் துன்மத்தம்*
*மேல்கொண் டுழிதருமே!"*[31]

என மணிவாசகரும் மொழிவர்.

இவற்றை உட்கொண்டே மெய்கண்டாரும்,

*"இலயித்த தன்னில் இலயித்தது ஆம்"*[32]

என்றருளிச் செய்வாராயினர்.

*"ஒடுங்கிய உலகம், தான் ஒடுங்குதற்கு இடமாய்*
*நின்ற சங்காரகாரணனிடமிருந்தே மீளத் தோன்றும்"*

என்பது இதன் பொருள்.

*"உலகவன் உருவிற் றோன்றி ஒடுங்கிடும்"*[33]

எனும் சித்தியார் வாக்கும் ஒப்புநோக்கத்தகும்.

ஊழி முதல்வனாக உள்ள ஈசனே 'ஆதி'யாகவும் இருக்கின்றான். உலகத்தோற்றம் முதலானவற்றிற்கு 'ஆதி'யாகவுள்ள பரமன், தனக்கு ஓர் ஆதியோ, அந்தமோ இல்லாதவன் என்பதும் எண்ணத்தக்கது.

இறைவன் 'ஆதி'யாக உள்ளவன் என்பதை நாவரசர், பல்வேறு பதிகங்களில் குறிப்பிட்டுச் செல்கின்றார். அவற்றுள் சில வருமாறு :

*"பொய்யினைத் தவிரவிட்டுப் புறமலா அடிமை செய்ய*
*ஐயநீ அருளிச் செய்யாய்* ***ஆதியே ஆதிமூர்த்தி***
*வையகந் தன்னில் மிக்க மல்குசிற் றம்பலத்தே*
*பையநுன் னாடல் காண்பான் பரமநான் வந்தவாறே!"*

*"அண்டமாய் ஆதியாய்"*

*"ஆதியும் ஈறும் ஆனார்"*

*"ஆதியே அலந்து போனேன்"*

*"ஆதியாய் அந்தம் ஆனார்"*[34]

வள்ளுவப் பெருந்தகையும்,

*"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி*
*பகவன் முதற்றே உலகு"*[35]

என மொழிந்ததும் உன்னத்தக்கது. இதே கருத்தை நாவரசரும்,

"**ஆனத்து முன்னெழுத்தாய்** *நின்றார் போலும்!*
*அணியாரூர்த் திருமூலட் டான னாரே!"*[36]

என்னும் பாட்டில் இயம்புவர்.

*"ஆதியார் அந்தம் ஆயினார்"*[37]

எனச் சம்பந்தரும்;

*"ஆதியன் ஆதிரையன் அயன்மால் அறிதற்குஅரிய
சோதியன்"*[38]

எனச் சுந்தரரும்;

*"ஆதியும் அந்தமும் ஆயினார்க்கு"*[39]

என மணிவாசகரும் மொழிந்துள்ளமை ஒப்புநோக்கத்தகும்.

நாவரசர், எம்பெருமானை, 'ஒருத்தன்', 'உலகினுக்கு ஒருவர்', 'ஒருவனாய்', 'ஒருமணி' என்றெல்லாம் ஏத்திப் புகழ்வர்.[40]

இதனை, மெய்கண்டார்,

*"ஒன்றலா ஒன்று"*[41]

என்பதால் சுட்டுவர்.

## பொதுவியல்பும் சிறப்பியல்பும்

ஒரு பொருளுக்கு இரண்டு இயல்புகள் உண்டு : (1) பொது இயல்பு; (2) சிறப்பு இயல்பு. 'இயல்பு' எனினும் 'இலக்கணம்' எனினும் ஒன்றே. ஒரு பொருளுக்கு, அதன் தன்மையில் இயல்பாக என்றும் உள்ள இயல்பு 'சிறப்பியல்பு' எனப்படும்; பிறிதொரு பொருளின் சார்பு காரணமாக ஒரு பொருளின்கண் உண்டாகி, அந்தச் சார்பு நீங்கியபோது, உடன் நீங்கும் இயல்பு 'பொது இயல்பு' எனப்படும். சிறப்பியல்பைச் 'சொரூப இலக்கணம்' என்பர்; பொதுவியல்பைத் 'தடத்த இலக்கணம்' என்பர்.

இவ்விரண்டின் விளக்கமாக ந. சுப்புரெட்டியார் கூறுவது வருமாறு :

*"**பதி**, ஏனையவற்றைவிடப் பேராற்றல் வாய்ந்தது. சுதந்திரம் உடையது. **பசுவும், பாசமும்** சுதந்திரத் தன்மையின்றிப் பதியின் விருப்பப்படி செயற்படுவனவாகும். மேலும், பசுவும் பாசமும், மற்றொன்றின் சார்பினால் தன்மையில் மாறுபடும். பதியோ அங்ஙனம் எந்தப் பொருளின் சார்பினாலும் மாறுபடாமல் என்றும் ஒரே பெற்றியதாய் இருக்கும். இதுபற்றியே பதியை, வடமொழியில் 'சித்' என்றும், தமிழில் 'மெய்ப்பொருள்' 'செம்பொருள்' என்றும் வழங்குவர். 'சத்' என்பதை 'உள்ளது' என்று மொழிபெயர்த்துப் பேசுவர் சித்தாந்திகள் 'உள்ளது' என்பதை 'என்றும் ஒரு பெற்றியதாய் உள்ளது' என்று கொள்ளல் வேண்டும். ஆகவே பிறிதொரு பொருளின்*

*சார்பினால், மாறுபடாத தன்மையையுடைய பதியிடம். பிறிதொன்றை நோக்காது தன்னையேதான் நோக்கி நிற்கும் நிலையில் காணபபடும் இயல்புகளே. பதியின் 'சொரூப இலககணமா'கும். பதி, உலகத்தை நோக்கி நிற்கும் நிலையில் காணப்பெறும் இயல்புகள். 'தடத்த இலக்கணமா'கும்."*[42]

சைவ சித்தாந்தம், "எவ்வித மாற்றமும் அடையாமல், என்றும் ஒருதன்மைத்தாய் நிற்கும்" பொருளையே 'சத்து' என்று கொள்ளும்; அவ்வகையில், 'பதி'ப் பொருளாகிய 'இறை' ஒன்றே 'சத்து' எனப்படும். ஆதலின் 'தோன்றி அழியும் பொருள்' 'அசத்து' எனப்படும்.

இதனையே மெய்கண்டார்,

*"அதுவே* ***சத்தாய்*** *உள்ள* ***சிவம்****"*[43]

என்பர். சிவம் சத்தாய் உள்ளது எனவே 'அது, சித்தாய் உள்ளது' என்பதும் தெளிவு. இங்ஙனம், சத்தாயும் சித்தாயும் நிற்றலே பதியின் உண்மை இயல்பாகிய 'சொரூப இலக்கணம்' ஆகும்.

*"சத்தும் சித்தும் ஆகிய இவற்றோடு ஆனந்தத்தையும் கூட்டி, இறைமைக குணங்களை மூன்றாகக் கூறுதல் உபநிடதங்களிற் காணும் வழக்கு. அவற்றை* ***எட்டாக*** *விரித்துக் கூறுதல் சிவநெறி வழக்காகும்"*[44]

என்பார் ஆ. ஆனந்தராசன்.

இறை முதற்பொருளாம் 'பதி'யின் எண்குணங்களாவன : தன்வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கை அறிவினனாதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருள் உடைமை, வரம்பில் இன்பமுடைமை, முடிவிலாற்றல் உடைமை.

இவ் எண்பெருங்குணங்கள் குறித்து மறைமலையடிகள் மிக விரிவாக இயம்புவர்.[45]

(1) **தன்வயத்தன் ஆதல் :** தான் ஒன்றன்வயப்பட்டு நடவாமல் எல்லாம் தன் ஆணைவழி நின்று ஏவல் கேட்ப, அதிகாரம் நடாத்தும் சுதந்திர முழுமுதன்மையுடைமை. வடமொழியில் இதனைச் 'சுதந்திரத்துவம்' என்பர். முதல்வனாகிய சிவபெருமான், இத்தகு தலைமைத் தன்மையுடையவனாவான்.

திருநாவுக்கரசர், பின்வரும் தொடர்களால், சிவபெருமானின் தலைமைத் தன்மையைச் சுட்டுகின்றார் :

*"கைப்போது மலர்தூவிக் காதலித்து வானோர்கள்*
*முப்போது முடிசாய்த்துத் தொழநின்ற* ***முதல்வனை****"*

"முன்னெறி யாகிய முதல்வன் முக்கணன்"

"ஏழுகொ லாம்அவர் ஊழி படைத்தன
ஏழுகொ லாம்அவர் கண்ட இருங்கடல்
ஏழுகொ லாம்அவர் **ஆளும் உலகங்கள்**
ஏழுகொ லாம்இசை யாக்கின தாமே!"

"... முதல்வா! தில்லை அம்பலத்து ஆடுகின்ற
அத்தா!"

"முந்தித் தானே முளைத்தானை"

"மூர்த்தியே என்பர் உள்ளார் **மூவரின் முதல்வன்** என்பர்"

"பாழியார் பாவம் தீர்க்கும் **பராபரர்**"

"தலையினால் வணங்க வல்லார்
**தலைவர்க்கும் தலைவர்** தாமே!"

"மூர்த்தியாய முதல்வனை"

"காரணத்தர் கருத்தர் கபாலியார்"

"தலைவ னாகிய ஈசன்"

"தன்னொப்பா ரில்லா தானை"

"**முற்றாத முழுமுதலை** முளையை மொட்டை
முழுமலரின் மூர்த்தியை முனியா தென்றும்
பற்றாகிப் பல்லுயிர்க்கும் பரிவோன் தன்னைப்
பராபரனைப் பரஞ்சுடரைப் பரிவோர் நெஞ்சில்
உற்றானை உயர்கருப்புச் சிலையோன் நீறாய்
ஒள்ளழல்வாய் வேவவுறு நோக்கத் தானைச்
செற்றானைத் திரிபுரங்கள் திருமாற் பேறெஞ்
செம்பவளக் குன்றினைச் சென்றடைந்தேன் நானே!"[46]

(2) **தூயஉடம்பினன் ஆதல் :** "கூன் குருடு முதலான எண்வகை எச்சங்களும், என்பு தோல் நரம்பு முதலான எழுவகைத் தாதுக்களாற் சமைக்கப்படுதலும், அழுக்குத்திரளல் சீழ்வழிதல் புழுநெளிதல் பவ்விநீர் ஒழுகல் நோயான் வருந்துதல் புண்படுதல் இறத்தல் பிறத்தல் முதலான குற்றங்களும் பிறவுமுடைய புல் முதல் தேவர் ஈறாகவுள்ள உயிர்த்தொகுதிகள் பெறும் உடம்புகள் போலாது, சீவர்களறிவினான் இப்பெற்றிப்பட்டதென்று உரைக்கவுமாகாத ஓர் அருமைத் திருமேனி உடையனாதல்" என்பர் மறைமலையடிகள்.[47] இதனை, வடமொழியில் 'விசுத்த தேகம்' என்பர்.

இறைவன் தன்வயத்தால் செய்யும் செயல்கள் அனைத்தையும் உடம்பின்றியே செய்யக்கூடும் எனினும், பிறர்பொருட்டுச் சிலவற்றை உடம்பொடு செய்ய வேண்டியவனாகின்றான்.

"எரியலால் **உருவம்**இல்லை ஏறலால் ஏறமில்லை"

"தருவினை மருவும் கங்கை
தங்கிய சடையன எங்கள்
அருவினை யகல நல்கும்
அண்ணலை அமரர் போற்றும
திருவினைத் திருவே கப்பம்
செப்பிட உறைய வல்ல
**உருவினை** உருகி யாங்கே
உள்ளத்தால் உகக்கின றேனே!"

"நீறுடை **உருவர்** போலும்!"

"உருவம் காட்டி நின்றான"

"கருமானின் உரியதளே உடையா வீக்கிக்
கனைகழல்கள் கலந்தொலிப்ப அனலகை ஏந்தி
வருமானத் திரள்தோள்கள் மட்டித் தாட
வளர்மதியஞ் சடைக்கணிந்து மானோ நோக்கி
அருமான வாண்முகத்தா ளமர்ந்து காண
அமரர்கணம முடிவணங்க **ஆடு கின்ற**
**பெருமானைப்** பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே!"[48]

- இவ்வாறெல்லாம் இறைவனின் உருவத்தைக் குறிப்பிடும் நாவரசர், பின்வரும் திருப்பாட்டால், அவனின் திருமேனி அழகைக் காண்பதே மனித்தப் பிறவியின் மாண்பயன் என்று மொழிகின்றார்.

"குனித்த புருவமும் கொவ்வைச்செவ்
வாயிற் குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல்
மேனியில் பால்வெண் ணீறும்
இனித்தம் உடைய எடுத்தபொற்
பாதமும் காணப் பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவ
தேஇந்த மாநிலத்தே!"[49]

எல்லாம்வல்ல சிவபெருமான், திருநாவுக்கரசருக்குத் தம் திருமேனி வண்ணத்தை நேரிலும் காட்டி அருள் செய்துள்ளான் என்பதும் இங்குக் கருதத்தகும்.

ஈசனின் திருவடித் தீக்கை பெறவேண்டும் என்னும் உணர்வு நாவரசருக்கு உண்டாயது; அதனை இறைவன்பால் விண்ணப்பித்தார். இறைவனும், 'திருநல்லூருக்கு வருக' என அசரீரியாக அருளிச் செய்தனன். அவ்வாறே திருநல்லூரில், சிவபெருமான், திருநாவுக்கரசரின் தலைமீது தன் திருவடித் தாமரை மலர்களைச் சூட்டியருளினன்.

*'உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோம் என்றவர்தம்*
*சென்னிமிசைப் பாதமலர் சூட்டினான் சிவபெருமான்'"[50]*

எனச் சேக்கிழார் இந்நிகழ்ச்சியைக் குறிப்பிடுகின்றார்.

இவ் அரிய விந்தை நிகழ்ச்சியை நாவரசரே நாவார ஏத்திப் பாடுகின்றார்; அப்பாட்டு வருமாறு :

*"நினைந்துருகும் அடியாரை நைய வைத்தார்*
*நில்லாமே தீவினைகள் நீங்க வைத்தார்*
*சினந்திருகு களிற்றுரிவைப் போர்வை வைத்தார்*
*செழுமதியின் தளிர்வைத்தார் சிறந்து வானோர்*
*இனந்துருவி மணிமகுடத் தேறத் துற்ற*
*இனமலர்கள் போதவிழ்ந்து மதுவாய்ப் பில்கி*
**நனைந்தனைய திருவடிஎன் தலைமேல் வைத்தார்**
**நல்லூர்எம் பெருமானார்** *நல்ல வாறே!"[51]*

இவ்வாறு நாவரசர், இறைக்காட்சி கண்டு பேரானந்தப் பெருவெள்ளத்தில் திளைத்த நிகழ்ச்சிகளும் உண்டு.

ஞானசம்பந்தப் பெருமான், தம் மூன்றாம் வயதிலேயே, 'அம்மே அப்பா' என்று அழைத்து அருளி அழுதருள, எம்பெருமான் எழுந்தருளிய பான்மையைச் சேக்கிழார்,

*"பொன்மலைவல் லியுந்தாமும் பொருவிடைமேல் எழுந்தருளிச்*
*சென்னிஇளம் பிறைதிகழச் செழும்பொய்கை*
*மருங்கணைந்தார்"[52]*

எனக் குறித்திடுவர்.

இவ்வாறே சுந்தரமூர்த்தி நாயனாரும், மணிவாசகரும் இறைவனை நேரிற்கண்டு இன்புற்றவர்கள் என்பதும் எண்ணத்தக்கது.

(3) **இயற்கை அறிவினன் ஆதல் :** அறிவே உருவாய்த் தன் இயல்பிற் பிரகாசித்தல். இதனை வடமொழியில் 'அநாதி போதம்' என்பர்.

தன்வயத்தனாயும் தூய உடம்பினனாயும் நிற்கும் இறைவனது அறிவு, தானே விளங்கும் தன்மையது. எனவே அனைத்தையும் தன் சங்கற்பத்தினாலேயே செய்பவனாவன். அதுவே ஈண்டு 'இயற்கை அறிவு' எனப்பட்டது.

இதனை நாவுக்கரசர்,

*"தந்தையும் தாயு மாகித*
*தானவன் **ஞான மூர்த்தி**"*[53]

என்பதனால் சுட்டுவர். இறைவன் 'ஞானமூர்த்தி'யாக, அஃதாவது 'இயற்கை அறிவினனா'க இருப்பதால்தான், தன் அடியார்கட்கும் ஞானத்தை வழங்க முடிகின்றது. இவ்வுண்மையை நாவரசர்,

*"**ஞானம் காட்டுவர்** நன்னெறி காட்டுவர்*
*தானம காட்டுவர் தம்மடைந் தார்கட்கெலாம்"*[54]

எனும் திருப்பாட்டால் உணர்த்துவர்.

"ஞான வடிவாய் மேவும் சிவபெருமானே! ஞானத்தால் தெளிந்த ஞானிகள், உன்னைத் தொழுது ஏத்துகின்றனர். ஆயினும், அத்தகைய ஞானத்தை நான் அடையப்பெறாதவனாகித் தொழுது ஏத்தாது, வெறுமையாக இருந்தேன். ஞானிகள் உன்னைத் தொழுது ஏத்தும் திறம் கண்டு, நானும் உன்னைத் தொழுது ஏத்துதலானேன்!" என்ற பொருளில்,

*"ஞானத் தால்தொழு வார்சில ஞானிகள்*
*ஞானத் தால்தொழு வேன்உனை நானலேன்*
*ஞானத் தால்தொழு வார்கள் தொழக்கண்டு*
*ஞானத் தாய்!உனை நானும் தொழுவனே!"*[55]

என்கின்றார் அப்பர் பெருமான். இவண், எம்பெருமானை, 'ஞானத்தாய்!' என விளித்துள்ளமை காணலாம்.

ஞான வடிவாய் இலங்கும் எம்பெருமான் திருவருளால் திருஞான சம்பந்தர், 'ஞானம்' பெற்ற பான்மையைச் சேக்கிழார் செப்பும் திறமும் இவண் ஒப்புநோக்கத்தகும்.

*"சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்*
*பவமதனை அறமாற்றும் பாங்கினில்ஓங் கியஞானம்*
*உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்*
*தவமுதல்வர் சம்பந்தர் தாம்உணர்ந்தார் அந்நிலையில்!"*[56]

மணிவாசகப் பெருந்தகை,

*"மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே!"*[57]

என மொழிந்ததும் அறியத்தகும்.

(4) **முற்றும் உணர்தல் :** இறைவன், அனைத்தையும் ஒரேநேரத்தில் தானாகவே ஒருங்குணர்ந்து நிற்றல். அஃதாவது நூல்களாலும் உணரப்படா உணர்வுடையவன் என்பதாம். இதனை, வடமொழியில் 'சர்வஞ்ஞருத' என்பர்.

"**தீரன்** *தீத்திரளன்* . . ."

"ஒருத்தரால் **அறியவொண்ணா** . . . . சோதி!"[58]

என்பர் நாவரசர். 'தீரன்' என்பது, முற்றும் உணர்ந்த சிவபெருமானைக் குறிப்பதாம்.

மணிவாசகரும்,

"*நூலுணர் வுணரா நுண்ணியோன்*"[59]

என்பர்.

(5) **இயல்பாகவே பாசங்களின் நீங்குதல் :** தன்னியற்கையாகவே பாசங்களின் விடுபட்டு நிற்றல். இயற்கையாக விளங்குவதும், எல்லாவற்றையும் ஒருங்கே உணர்வதுமான இறைவனது அறிவு, பாசத்திற்கு மறுதலையாய நுண்ணிய தன்மை யுடையது. உயிர்களைப் பற்றும் 'பாசம்', இயற்கையிலேயே அறிவுருவாய் விளங்கும் முதல்வனைப் பற்ற முடியாது. பாசப் பற்றையே அடியோடு நீக்கும் பேரருளாளனாம் இறைவனிடத்துப் 'பாசம்' பொருந்துதல் யாண்டும் இல்லை. வடமொழியில் இதனை 'நிராமயம்' என்பர்.

". . . *ஈசனே!* **பாச வினைகள் தீர்க்கும்**
*மன்னவனே!*"

"**பந்தம் அறுத்து** ஆளாக்கப் பணிகொண்டு"[60]

என்று அப்பர் அருளும் திருவாக்கால், இறைவனின் இக்குணத்தை அறியலாம்.

"*பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே*"[61]

எனும் மணிவாசகர் மணிமொழியும் ஒப்புநோக்கத்தகும்.

(6) **பேரருள் உடைமை :** "அறிவுப் பொருள்களான உயிர்த் தொகுதிகள், தம்மியற்கையறிவு சுருங்கிப் பேரின்ப நுகர்ச்சிப் பேறு எய்தற்கு உரிமையிலராய் வருந்துதலைக் கண்டு அவர்கட்குப் பாசக் கவிப்பினை விலக்கிப் பேரின்பம் துய்ப்பித்தல் வேண்டுமென்று எழும் இரக்கம் உடைமையாம்" என விளக்கமுரைப்பர் மறைமலையடிகள்.[62] இறைவன் பேரருள் உடைமையால், எல்லா உயிர்களிடத்தும் எஞ்ஞான்றும் குறையாத - கைம்மாறற்ற பெருங்கருணைத் திறம் அவன்பால் உண்டு. இதனை வடமொழியில் '**அலுப்த சக்தி**' என்பர்.

திருநாவுக்கரசர், தம் தேவாரத்தில், இறைவனின் இப் 'பேரருள் உடைமை'யைப் பலவிடங்களிலும் குறிப்பர். அவற்றுட் சில வருமாறு :

*"தொழற்கு அங்கை துன்னிநின் றார்க்குத்*
*தோன்றி* **அருளவல் லானும்**"

*"அரிதரு கண்ணியானை ஒருபாக மாக*
**அருள்கார ணத்தில் வருவார்**!"

*"இரவுகொப் பளித்த கண்டர்*
*ஏத்துவார்* **இடர்கள் தீர்ப்பார்**"[63]

"சிவபெருமான், அளவுகோலால் அறியப்படாதவர்; நூல் பல கற்றவர்களானாலும், வணக்கமிலா நெறியினராயின் அவர்களை அடக்குவிப்பவர்; தம்மைத் தொழும் அன்பர்கள், எத்தகைய இடரில் சிக்கியிருப்பினும் அதிலிருந்து மீட்டு **அருள்பவர்**; இனிய பொருளென்று கருதிப் பற்றி நின்றாலும், தன் அடியார்களுக்குப் பொருந்தாது எனில், அவற்றை விலக்கும் **அருளாளர்**; அப் பெருமானே, திருப்பேரையில் என்னும் திருத்தலத்தில் எழுந்தருளியிருந்து அருளாட்சி புரிகின்றார்" என்ற பொருள்பட அப்பர் பாடும் அருமைத் திருப்பாட்டு வருமாறு :

*"கணக்கி லாரையும் கற்றுவல் லாரையும்*
*வணக்கி லாநெறி கண்டுகொண் டாரையும்*
*தணக்கு வார்தணிப் பார்,எப் பொருளையும்*
*பிணக்கு வார்,அவர் பேரெயி லாளரே"*[64]

இறைவனின் பேரருட்டிறத்தைப் பலவாறு ஏத்திப் போற்றும் நாவரசர், அவன், இவ்வுலக உயிர்கள் உய்யும் பொருட்டுப் பாற்கடலில் தோன்றிய நஞ்சினை உண்டு, தன் கண்டத்தே இருத்தி, 'நஞ்சுண்ட கண்டனா'ன வரலாற்றையும் குறிப்பிடுகின்றார்.

*"காரமுது கொன்றை கடிநாறு தண்ணென்ன*
*நீரமுது கோதையொடு ஆடிய நீள்மார்பன்*
**பேரமுதம் உண்டார்கள் உய்யப் பெருங்கடல் நஞ்சு**
**ஆரமுதா உண்டானை** *நான்கண்டது ஆரூரே!"*[65]

என்பது அவர் திருவாக்கு.

நாவரசர் தம் நெஞ்சுக்குக் கூறுபவராய், "ஏ, நெஞ்சமே! கடலினின்று பொங்கி எழுந்த ஆலகால நஞ்சினைக் கண்டு, அனைவரும் அச்சமுற்று ஆங்காங்குப் பதறியோட, அதனைத் தம் திருக்கையால் வாங்கிப் பருகிய தெய்வம், சிவபெருமானையன்றி, வேறு யாருளர் என எண்ணிப் பார்ப்பாயாக! திருச்சோற்றுத்துறையில் எழுந்தருளியிருக்கும் அப்பெருமானின்

திருவடிகளை வணங்கி, அவனுக்கே ஆளாக மேவித் திருத்தொண்டு செய்வாயாக!" என்கின்றார்.

"பொங்கி நின்றெழுந் தகடல் நஞ்சினைப்
பங்கி உண்டதோர் தெய்வம் உண்டோசொலாய்
தொங்கி நீஎன்றும் சோறுத் துறையர்க்குத்
தங்கி நீபணி செயமட நெஞ்சமே"[66]

என்பது திருப்பாட்டு.

சைவ சமய குரவர் நால்வரில், நாவுக்கரசர் மட்டுமே சைவம் விட்டு அமண் சமயம் சார்ந்து, மீண்டும் சிவனருளால் சைவத்திற்கு மீண்டவர்.

தம் பெற்றோர்களை இழந்த நிலையில், தமக்கையாராம் திலகவதியாரின் ஆதரவில் வாழ்ந்துவந்த 'மருள்நீக்கியார்'. தமக்குப் பாதுகாவலாக உள்ள தமக்கையாரின் அருஞ்சொல்லைக் கேளாது இகழ்ந்து, "சமயங்களானவற்றின் நல்லாறு தெரிந்துணர நம்பர் அருளாமையினால், கொல்லாமை மறைந்துறையும் அமண்சமயம் குறுகினார்."[67]

இத்தகு புறச்சமயங்கள் குறித்தும் சைவ சமய மேன்மை குறித்தும் சிவஞான சித்தியார் பின்வருமாறு கூறும் :

"ஓதுசம யங்கள்பொரு ளுணரு நூல்கள்
ஒன்றோடொன் றொவ்வாம லுளபலவு மிவற்றுள்
யாதுசம யம்பொருணூல் யாதிங் கெனனில்
இதுவாகு மதுவல்ல தெனும்பிணக்க தின்றி
நீதியினா லிவையெல்லா மோரிடத்தே காண
நின்றதியா தொருசமய மதுசமயம் பொருணூல்
ஆதலினா லிவையெல்லா மருமறையா கமத்தே
யடங்கியிடு மவையிரண்டு மரனடிக்கீ ழடங்கும்"[68]

இப்பாடலுக்கு மு. திருவிளங்கம் தரும் பொழிப்புரையாவது :

"சமயங்களும் சமயநூல்களும் ஒன்றோடொன்று மாறுபட்டனவாயும் பலவாயுமிருத்தலின், அவற்றுள் உண்மைச் சமயம் யாது, அச்சமயப் பொருளை உணர்த்தும் நூல் யாது, என்னின், எல்லாச் சமயத்தார் கூறும் பொருள்யலபுகளும் தனித் தனி ஒவ்வோரிடத்தே யமைய, அவற்றை ஒருங்கு சேர்த்துக் காணநின்ற சமயம் எதுவோ. அதுவே உண்மைச் சமயமாக வேண்டும். அச்சமயப் பொருளை உணர்த்தும் நூலே உண்மை நூலாகவும் வேண்டும். இச்சமயங்களும் அவை கூறும் பொருளியல்புகளும் வேதாகமங்களிலே அடங்கியிருக்கக் காணப்படுதலாலும், வேதாகமங்கள் சிவனடியிலே அடங்குதல் அறியப்படுதலாலும் சிவனடியை அடைவிக்கும்

**சைவ சித்தாந்தமே உண்மைச் சமயமாம். அச்சமயப் பொருளை விளக்கும் வேதாகமங்களே மெய்ந்நூல்களுமாகும்!"[69]**

இதுபற்றியே தாயுமானவரும்,

*"சைவ சமய மேசமயஞ் சமயா தீதப் பழம்பொருளைக்*
*கைவந் திடவே மன்றுள்வெளி காட்டு மிந்தக் கருத்தை*
*விட்டுப்*
*பொய்வந் துழலுஞ் சமயநெறி புகுத வேண்டா முத்திதரும்*
*தெய்வ சபையைக் காண்பதற்குச் சேர வாருஞ் சகத்தீரே"[70]*

என்று அருள்வாராயினர்.

மணிவாசகப் பெருமான், பிற சமயவாதிகளின் வலைக்குள் அகப்பட்டுத் தடுமாறாவண்ணம், சிவபெருமான் நன்னெறி காட்டித் தம்மை ஆட்கொண்டான் என்பர்.

*"மற்றோர் தெய்வம் கனவிலும் நினையாது . .*
*தாயே ஆகி வளர்த்தனை!"[71]*

இதனை உளத்துட் கொண்டே மெய்கண்டாரும்,

*"தம்மை உணர்ந்து தமைஉடைய தன்னுணர்வார்*
*எம்மை உடைமை எமையிகழார் தம்மை*
*உணரார் உணரார்; உடங்கியைந்து தம்மிற்*
*புணராமை கேளாம் புறன்"[72]*

என்று, 'அவையடக்கம்' கூறினாராதல் வேண்டும். இதற்கு ஆ. ஆனந்தராசன், பின்வருமாறு விளக்கம் தருவர் :

*"முன்னிரண்டு அடிகளில் சித்தாந்த சைவத்தில் நின்ற தலைமக்களின் உயர்வைப் புலப்படுத்திய ஆசிரியர், பின்னிரண்டடிகளில் ஏனைச் சமயவாதிகளின் நிலையை வெளிப்படுத்துகின்றார். 'தம்மை உணரார்' என அவர்களைச் சுட்டுகின்றார். தம்மியல்பை முற்ற உணராமல், ஒருபகுதியே உணர்ந்தவர் என்பது பொருளாகும். 'தம்மை உணர்ந்து' என்றதனால், சித்தாந்த சைவரே தம்மியல்பை முற்ற உணர்ந்தவர் என்பதைப் பெறவைத்தார். அவரல்லாத பிற சமயத்தாரையெல்லாம், 'தம்மை உணரார்' என்ற சிறிய தொடரில் அடக்கி வைத்தார்!"[73]*

திருநாவுக்கரசர், அமண் சமயத்திலிருந்தபோது, சூலைநோயால் இறைவன் ஆட்கொண்ட வரலாறு முன்பே சுட்டப்பட்டுள்ளது. அவர்,

திருவதிகை வீரட்டானத் திருக்கோயிலில் பாடிய முதற் பதிகத்திலேயே, தமது வரலாற்றையும் அமண் சமயத்தாரின் நிலையினையும் சுட்டுவதனோடு அமையாமல். **இறைவனின் பேர நட்டிறத்தையும்** புலப்படுத்துகின்றார்!

> "காத்தாளபவர் காவல இகழநதமையால்
> கரைநின்றவர் கண்டுகொள என்றுசொல்லி
> நீததாய கயமபுக நூககியிட
> நிலைக்கொளளும வழித்துறை யொனறறியேன
> வாரதனதயிது ஒபபது கேட்டறியேன
> வயிறறொடு துடககி முடககியிட
> ஆரத்தாரபுனல ஆரதிகை கெடில
> வீரட்டானத துறைஅம மானே!"[74]

- இவ்வாறு, தமக்கையாரின் காவலை இகழ்ந்து, 'கயம்' எனப்படும் சமண சமய நீர்நிலையில் சிக்கித் தடுமாறி, மீண்டு எழும் வழித்துறை தெரியாது தவித்த நிலையைக் குறிப்பிடும் அடிகள்,

> "தண்டனாயத் தலைபறித்துக் குவிமுலையார்
> நகைநாணாது உழிதா வேனைப
> பணடமாப படுத்தென்னைப பாலதலையில
> தெளித்துத்தன் பாதம காட்டித
> தொண்டெலாம் இசைபாடத தூமுறுவல்
> **அருள்செய்யும் ஆரூரரைப்**
> பணடெலாம் அறியாதே பனிநீரால்
> பாவைசெயப் பாவித் தேனே!"[75]

எனத் தம்மை ஆட்கொண்ட சிவபெருமானின் அருட்டன்மையை ஏத்துகின்றார்.

ஞானசம்பந்தர்,

> "உள்ளமார்ந்த அடியார்தொழு தேத்த
> உகக்கும் **அருள்தந்துஎம்**
> கள்ளமார்ந்து கழியப் பழிதீர்த்த கடவுள்!"[76]

என்றும்;

**சுந்தரர்,**

> "சாதலும பிறத்தலும் தவிர்த்துஎனை வகுத்துத்
> தன் **அருள் தந்தஎம் தலைவனை!**"[77]

என்றும்;

**மணிவாசகர்,**

"**அருள்நிதி தரவரும்** *ஆனந்த மலையே*"[78]

என்றும்;

காரைக்காலம்மையார்,

"**அருளே** *உலகெலாம் ஆள்விப்ப தீசன்*"[79]

என்றும்;

தாயுமானவர்,

"**தன்னருள்** *வெளிக்குளே*
*அகிலாண்ட கோடியெல்லாம்*"[80]

என்றும் கூறுவன ஈண்டு ஒப்புநோக்கி உணரத்தகுவன.

(7) **வரம்பில் இன்பமுடைமை :** உயிர்களிடத்துத் தோன்றி அழியும் சிற்றின்பம் போலல்லாமல், நிறைந்த பேரின்பமே தன் தன்மையாக உடைமை. இறைவன், எவ்வாற்றானும் யாதொரு குறையும் இல்லாதவன் என்பதாம். இதனை வடமொழியில் 'திருப்தி' என்பர்.

"**தேன்நி லாவிய** *சிற்றம் பலவனார்*"

"**கரும்புஒப் பானைக்** *கரும்பினிற் கட்டியை*
*விரும்புஒப் பானை*"

"*திருமணியைத்* **தித்திப்பைத்** *தேனதாகித்*
*தீங்கரும்பின் இன்சுவையை*"[81]

என்பன அப்பர் அருள்மொழிகள்.

(8) **முடிவிலாற்றல் உடைமை :** "அறிவித்தாலன்றித் தாமே அறியமாட்டாத சீவர்களையும், அசைவித்தாலன்றித் தாமே அசையமாட்டாத பிரபஞ்சங்களையும் ஒருகாலத் தொருங்கே அறிவித்தற்பொருட்டும் அசைவித்தற் பொருட்டும் வேண்டப்படுவதாகிய ஒருபேராற்றல் உடையனாதல்"[82] என்பது மறைமலையடிகள் தரும் விளக்கம். அஃதாவது இறைவனது ஆற்றல் அளவற்றது; எல்லையற்றது என்பதாம். இதனை, வடமொழியில் 'அநந்தசக்தி' என்பர்.

*ஊழி அளக்கவல் லானும்*"

"*அண்டமாய் ஆதியாய் அருமறையொடு ஐம்பூதப்*
*பிண்டமாய் உலகுக்கோர் பெய்பொருளாம் பிஞ்ஞகனை*"

"*சமைய மேல் ஆறு மாகித்*
*தானொரு சுயம்பு வாகி*
*இமையவர் பரவி யேத்த*
*இனிதில்அங் கிருந்த ஈசன்*"

"அரியானை அந்தணர்தம் சிந்தை யானை
அருமறையின் அகத்தானை அணுவை யார்க்கும்
தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத்
திகழொளியைத் தேவர்கள்தங் கோனை மற்றைக்
கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக்
கனைகடலைக் குலவரையைக் **கலந்து நின்ற**
**பெரியானைப்** பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே!"[83]

என்பன போல்வரும் அப்பர் தேவாரப் பாக்கள், இறைவனின் 'முடிவிலாற்றல் உடைமை'யை உரைப்பன.

மணிவாசகர்,

"எண்ணிறந்து எல்லை இலாதானே"

"இன்னுழை கதிரின் துன்அணுப் புரையச
சிறிய வாகப் பெரியோன்!"[84]

என்று அருளிச் செய்தமை ஒப்புநோக்கத்தகும்.

இனி, நாவுக்கரசர், '**எண்குணத்தான்**' என்ற தொடரையே எடுத்தாள்வதும் இங்குச் சுட்டத்தகும்.

"ஈசன் **எண்குணத்தர்**; அவர் சூடும் இனமலர்கள் - எட்டு; அவருக்குரிய தோள்கள் - எட்டு; அவரால் படைக்கப்பட்ட திக்கும் - எட்டு!" - இப்பொருள்பட அமைவது பின்வரும் பாட்டு :

"எட்டுகொ லாம்அவர் ஈறில் **பெருங்குணம்**
எட்டுகொ லாம்அவர் சூடும் இனமலர்
எட்டுகொ லாம்அவர் தோளிணை யாவன
எட்டுகொ லாம்திசை யாக்கின தாமே!"[85]

இதுதவிரத் திருவிடைமருதூர்ப் பதிகத்திலும்,

"**எண்குணத்தார்** எண்ணா யிரவர் போலும்
இடைமருது மேவிய ஈச னாரே!"[86]

என்று குறிப்பிடுகின்றார் நாவரசர்.

சுந்தரர்,

"இறையவனை மறையவனை
**எண்குணத்தி னானை**"[87]

என்று கூறுவது ஒப்புநோக்கத்தக்கது.

வள்ளுவரும்,

*"கோளில் பொறியிற் குணமிலவே* **யெண்குணத்தான்**
*றாளை வணங்காத் தலை".*

என மொழிந்ததும், இதற்குப் பரிமேலழகர்,

*"எண்குணங்களாவன . தன்வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கை உணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை என இவை. இவ்வாறு சைவாகமத்துக் கூறப்பட்டது"*[88]

என விளக்கமுரைத்ததும் இங்கு ஒப்புநோக்கத்தகும்.

இவற்றையெல்லாம் உள்ளடக்கியதாக விளங்குவது பின்வரும், சிவஞானபோதத்து ஆறாம் சூத்திரத்தில் வரும் 'மேற்கோள்' :

*". . வாக்கு மனாதீதகோசரமாய் நின்றவதுவே*
*சத்தாயுள்ள சிவமென் றுணரற்பாற்று"*[89]

இறைவனுக்குரிய இயல்புகள் இரண்டனுள், "பதி, உலகத்தை நோக்கி நிற்கும் நிலையில் காணப்பெறும் இயல்புகள், 'தடத்த இலக்கணம்' ஆகும்" என்பது முன்னர்க் குறிக்கப்பட்டது. 'தடத்த இலக்கணம்' என்பது 'பொது இயல்பு' ஆகும். அஃதாவது இறைவன், 'அருவம், அருவுருவம், உருவம்' ஆகிய நிலைகளைக் கொள்ளுதலும் ஐந்தொழில் செய்தலுமாம்.

'தடத்த இலக்கணம்', குணம் குறிகளோடு கூடியநிலை. தன்னையே நோக்கி நிற்கும் 'பரசிவம்' அந்த நிலையினின்றும் நீங்கி, உலகை நோக்குங்கால், தன் சிறப்பியல்புகளில் ஒன்றாகிய பெருங்கருணையினால், உயிர்கள் பொருட்டுத் தானே, தன் விருப்பத்தால் தனது **உத்தியைக்** கொண்டு பல்வேறு நிலைகளை உடையதாக விளங்கும். இந்த நிலைகளைச் சைவ சித்தாந்தம் 'பதியின் தடத்த இலக்கணம்' என்று இயம்பும்.

*"அருளுண்டாம் ஈசற் கதுசத்தி* **யன்றே**
*அருளும் அவனன்றி யில்லை!"*[90]

என்பது சிவஞானபோத உதாரண வெண்பா.

பதியானது, 'சொரூபநிலை'யில் 'சிவம்' என்றும்; 'தடத்தநிலை'யில் 'சத்தி' என்றும் இயம்பப்படும். சொரூப நிலையில் சத்தி செயற்படாது அடங்கியிருத்தலால், பதியானது 'சிவம்' என ஒன்றேயாக இருக்கும்; சத்தி செயற்படும் தடத்தநிலையில், சிவம், அதனோடு அச் செயலையெல்லாம் உடன் இயைந்து இயற்றி நிற்றலால், 'சிவமும் சத்தியும்', அம்மை அப்பனாய் மாதொரு பாகனாய்க் காட்சி நல்கும்.

**இவ்வுண்மையைச் சங்க இலக்கியத்தில் ஒன்றாகிய புறநானூறு சுட்டுவது இவண் எண்ணத்தகும்.**

*"பெண்ணுரு ஒருதிறன் ஆகின்று, அவ்வுருத்*
*தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்"*[91]

- இஃது இறைவனின் தடத்தநிலையைக் குறிப்பதாம்.

நாவரசர் எல்லாம்வல்ல எம்பெருமான், அம்மையப்பனாய்க் காட்சி நல்கும் திறத்தினைப் பல்வேறு பாக்களில் விதந்து பாடுகின்றார். அவற்றுட் சில வருமாறு :

*"கொம்பமரும் கொடிமருங்குற் கோல்வளையாள் ஒருபாகா"*

*"பால்ஒத்த மென்மொழியாள் பங்கனை"*

*"ஒருடம்பு இருவர் ஆகி"*

*"பாதியாம் உமைதன்னோடும்*

*பாகமாய் நின்று"*

*"மங்கையைப் பாகம் வைத்தார்"*

*"உமையலாது உருவம் இல்லை"*

*"மதுரவாய்மொழி மங்கையோர் பங்கினன்"*

*"மின்னின் நேரிடை யாளுமை பங்கனை"*

*"ஞானப்பூங் கோதையாள் பாகத்தான்காண்"*

*"மலைமகளை மாபாத் தணைத்தார் போலும்"*[92]

- இவ்வாறு உமைபாகனாக இறைவனை ஏத்தும் நாவரசர், திருவையாற்றுத் திருக்குளத்தில் எழுந்தபோது கயிலைக் காட்சி கண்டார்; இவ்வரலாறு முன் இயலிலும் சுட்டப்பட்டது. அந்தக் காட்சியும் அம்மையப்பனாகவே அமைந்திருந்தது.

*"மாதர்ப் பிறைக்கண்ணி யானை*
*மலையான் மகளொடும் பாடிப்*
*போதொடு நீர்சுமந்து ஏத்திப்*
*புகுவார் அவர்பின் புகுவேன்*
*யாதும் சுவடு படாமல்*
*ஐயாறு அடைகின்ற போது*
*காதல் மடப்பிடி யோடும்*
*களிறு வருவன கண்டேன்!"*[93]

என்று பாடும் இவ் அருமைத் திருப்பாட்டில், "பிடியும் களிறும் போன்று உமாதேவியுடன் இலங்கும் ஈசனைக் கண்டேன்" எனக் குறிப்பிடுவதும் இங்கு எண்ணி மகிழத்தக்கது.

சம்பந்தப் பெருமான்,

*"உண்ணாமுலை யுமையாளொடு முடனாகிய வொருவன்"*

*"உமை யாளொரு பாகம தாக"*[94]

என்றும்;

சுந்தரர்,

*"மங்கை பங்கனை மாசிலா மணியை"*[95]

என்றும்;

மணிவாசகர்;

*"மஙகைதன பஙகொடும்வந் தாண்டதிறம்"*[96]

என்றும்;

திருமூலர்,

*"சத்தி சிவமாம் இலிங்கமே தாபரம"*[97]

என்றும்;

காரைக்காலம்மையார்,

*"ஒருபால் உமையவளாம்"*[98]

என்றும் கூறுவன இவண் ஒப்புநோக்கி உணரத்தக்கன.

இறைவன், மூவகைத் திருமேனிகளைக் கொள்வன். அவை : உருவம், அருஉருவம், அருவம்.

> *"தனது உண்மைநிலையில் யாதொரு வடிவமும் இல்லாதிருக்கின்ற சிவன். உயிர்கள் படிமுறை யினாலே 'தூலம். சூக்குமம். அதிசூக்குமம்' ஆகிய மூவகைத் திருமேனிகளைக் கொள்வன்"*[99]

எனச் சி. அருணை வடிவேலு முதலியார் கூறுவர்.

**உருவம்** - கண்ணிற்குப் புலனாவது; முகம் முதலிய உறுப்புக்களுடன் விளங்கும். **அருஉருவம்** - ஒருகால் புலனாகியும், புலனாகாமலும் இருப்பது. இஃது, ஒளி வடிவம். இது, கண்ணிற்குப் புலனாகும்பொழுதும், முகம், கை, கால் முதலிய உறுப்புகளின்றிப் பிழம்பு மாத்திரமாய் இருப்பது. 'இலிங்கம்' இதனையே குறிக்கும். **அருவம்** - கண்ணுக்குப் புலனாகாதது. 'அருவம்', சத்தி வடிவமாய் இருந்தே செயல்களைச் செய்வது.[100]

திருநாவுக்கரசர், சிவபெருமானின் திருமேனியைக் கண்ணாற் கண்டு பேரின்பத்தில் திளைத்தவர். ஆதலின் பாடல்தோறும் பரமனின் திருக்காட்சியைப் பலவாறாக ஏத்திப் போற்றுகின்றார். இவண் சில தரப்படுகின்றன :

*"ஓடினேன் ஓடிச்சென்று **உருவம் காண்டலும்***
*நாடினேன் நாடிற்று நமச்சி வாயமே"*

*"சுண்ணவெண் சந்தனச் சாந்தும்*
*சுடர்த்திங்கட் சூளா மணியும்*
*வண்ண உரிவை யுடையும்*
*வளரும் பவள நிறமும்*
*அண்ணல் அரண்முரண் ஏறும்*
*அகலம் வளாய அரவும்*
*திண்ணன கெடிலப் புனலும்*
*உடையார் ஒருவர் தமர்நாம்*
*அஞ்சுவது யாதொன்றும் இல்லை!*
*அஞ்ச வருவதும் இல்லை!"*

*"வெந்த நீறுமெய் பூசுநன் மேனியா*
*கந்த மாமலர் சூடும் கருத்தினா*
*சிந்தை யார்சிவ னார்செய்ய தீவண்ணர்*
*அந்த ணாளர்கண் டீர்அன்னி யூரரே!"*[101]

- இவ்வாறு பாடும் நாவரசர், திருக்கழிப்பாலைத் திருப்பதிகத்தில், ஈசனின் திருமேனியைக் கண்டு களித்த நங்கை ஒருத்தியின் பத்திவயப்பட்ட தன்மையை, மற்றொருத்தியின் கூற்றாக வைத்துப் பாடுவது சிந்தித்தற்குரியது. அப்பதிகத்தில் ஒரு திருப்பாட்டு :

*'பழியிலான புகழுடையன பால்நீற்றன்*
*ஆனேற்றன் என்கின் றாளால்!*
*விழியுலாம் பெருந்தடங்கண் இரண்டல்ல*
*மூன்றுளவே என்கின் றாளால்!*
*சுழியுலாம் வருகங்கை தோய்ந்த*
*சடையவனே என்கின் றாளால்!*
*கழியுலாம் சூழ்ந்த கழிப்பாலைச்*
*சேர்வானைக் கண்டாள் கொல்லோ!'*[102]

- இவ்வாறு இறைவனின் 'உருவத்' திருமேனிபற்றிக் கூறும் நாவரசர், '**அருவமு**'ம் குறித்துக் குறிப்பிடுவதும் இங்கு எண்ணத்தகும்!

"உள்ளுமாய்ப் புறமுமாகி உருவுமாய் **அருவுமாகி**"

"**அருவனாய்**,சுத்தி யீருரி போர்த்துமை
உருவனாய் . . . ."

"தன்னுருவம் யாவர்க்கும் அறிய வொண்ணா
நிலையானை"[103]

ஞானசம்பந்தரும்,

"ஒருமை பெண்மை யுடையன். சடையன். விடையூரும்
இவன"[104]

என்றும்;

சுந்தரரும்,

"திருவுடையார் திருமா லயனாலும்
**உருவுடையார்** உமையாளை ஓர்பாகம்"[105]

என்றும்;

மணிவாசகரும்,

"**அருவாய் உருவமும்** ஆயபிரான்"[106]

என்றும்;

காரைக்காலம்மையாரும்,

"ஞான்ற குழற்சடைகள் பொனவரைபோல் மின்னுவன
போனற கறைமிடறறான் பொன்மார்பின் ஞான்றெங்கும்
மிககயலே தோனற விளங்கி மிளிருமே
அககயலே வைத்த அரவு"[107]

என்றும்;

சேக்கிழாரும்,

"நெற்றியிற கண்ணர் நாற்பெருந் தோளர் நீறணி மேனியர்"[108]

என்றும் கூறுவன, இறைவனின் உருவு, அருவத் திருமேனி பற்றியன.

நாவுக்கரசர் மொழியும் இறைவனின் 'உருவம்', 'அருவம்' பற்றியும்; 'அருவுருவம்' பற்றியும், சித்தியார், பின்வருமாறு புகலும் :

"அருவமோ வுருவா ரூப மானதோ வன்றி நின்ற
உருவமோ வுரைக்குங் கர்த்தா வடிவெனக் குணர்த்திங்
கென்னின்
அருவமு முருவா ரூப மானது மன்றி நின்ற
உருவமு மூன்றுஞ் சொன்ன வொருவனுக் குள்ள வாமே"[109]

இறைவன், பக்குவமுற்ற ஆன்மாக்களுக்குக் 'குரு' வடிவாக எழுந்தருளுவன் என்பதை மெய்கண்டார்,

"*தம்முதல்* ***குருவுமாய்த்*** *தவத்தினில் உணர்த்தவிட்டு*"[110]

என்பதால் தெளிவிப்பர்.

"அனைத்தும் பொய் என்ற நிலையில் உலக **ஊஞ்சற் கயிறு அற்றதும்** தாயாய் நின்ற பரம்பொருள், 'குரு'வாக வெளிப்பட்டுத் தன்னையும் ஆன்மாவையும் உணர்த்த"[111] முற்படும். இதனைச் சிவஞானபோதம்,

"*ஊசல் கயிறற்றாற் றாயதரையே யாந்துணையான*"[112]

என்று கூறும். இதன் விளக்கமாக ஆ. ஆனந்தராசன் கூறுவது வருமாறு :

> "*ஒருவன், ஊசலிலே அமர்ந்து ஆடுகின்றான். அந்த* ***ஊசலின் கயிறுகள் அறுந்து விடுமாயின் கீழே விழும்*** *அவனை அக்கணமே நிலமானது தாய் போலத் தாங்கிக் கொள்ளும். அதுபோலக் கருவிக் கூட்டங்களின் நீங்கிய ஆன்மாவை அப்பொழுதே இறைவனது திருவருள் தாங்கிக் கொள்ளும். ஊசலில் இருந்து விழுந்தவன் தரையை அடைவதற்கு என்ன முயற்சியைச் செய்தான்? ஒரு முயற்சியும் செய்தானில்லை. கருவிகளை வேறாகக் கண்டு நீங்கிய ஆன்மா இறைவன் திருவடியை அடைவதும் அதுபோன்றதேயாகும்*"[113]

திருநாவுக்கரசர்க்கு இத்தகைய பெருநிலை வாய்த்தது.

"**குருவனே**'*அடியேனைக் குறிக்கொளே*"

"**குருவ தாய** *குழகன்*"[114]

என்று கூறும் அடிகள், இறைவனே குருவாக எழுந்தருளி வந்து, அவன், தன் ஒப்பிலாத் திருவடியைத் தம் தலைமேல் வைத்துத் 'திருவடி தீக்கை' புரிந்த அருட்செயலைத் 'திருநல்லூர்த் திருப்பதிகத்'தில் விதந்து பாடுகின்றார். "நினைந்துருகும் அடியாரை நைய வைத்தார் . . . . நனைந்தனைய **திருவடிஎன் தலைமேல் வைத்தார்!**" என்னும் திருப்பாட்டு, முன்னரே சுட்டப்பட்டது.

மேலும் நாவரசர், 'உறுகயிறு ஊசல்' என்னும் தொடரையே பயன்படுத்தி ஓர் அழகான திருப்பாட்டும் பாடியுள்ளமை இவண் குறிக்கத்தகும் :

"**உறுகயிறு ஊசல் போல**
ஒன்றுவிட்டு ஒன்று பற்றி

*மறுகயிறு ஊசல் போல*
*வந்துவந்து உலவு நெஞ்சம்*
*பெருகயிறு ஊசல் போலப்*
*பிறைபுல்கு சடையாய் பாதத்து*
*அறுகயிறு ஊசல் ஆனேன்*
*அதிகைவீ ரட்ட னீரே!*"[115]

- இப்பாடலில், 'அறுகயிறு ஊசல் ஆனேன்' என அடிகள் மொழிவது, கருவிக் கூட்டங்களின் நீங்கிய ஆன்மாவை இறைவனது திருவருள் தாங்கிக் கொண்டதைக் குறித்தது தெளிவு. இத் திருப்பாட்டே, மெய்கண்டார் கூறும் 'ஊசல் கயிறற்றால்' என்பதற்கு அடிகோலியதாகக் கருதுவதும் தவறில்லை.

மணிவாசகப் பெருமானுக்குச் சிவபெருமானே, 'வான் பழித்து இம்மண் புகுந்து' குருவாக எழுந்தருளிவந்து அருள் புரிந்ததும் இங்கு எண்ணத்தகும்.

"*அருபரத் தொருவன் அவனியில் வந்து*
*குருபரன் ஆகி அருளிய பெருமை*"[116]

என்பார் அவர்.

இதனை உட்கொண்டே சித்தியாரும்,

"*மன்னுமருட்* **குருவாகி** *வந்து*"[117]

என்று கூறும்.

பதியாகிய முதற்பொருள், ஒருவகையாலும் உணரப்படாத பொருளும் அன்று; உலகம் போல உணரப்படும் பொருளும் அன்று. அதனால் அது, சிவமாகிய சத்தாய் உள்ளது. 'ஒருவகையால் உணரப்படாமை' என்பது, 'பாச ஞானம், பசு ஞானம்' இவற்றால் உணரப்படாமை என்று பொருள்; 'உணரப்படும் பொருள்' என்பது, 'பதி ஞானத்'தால் மட்டுமே உணரப்படுவது என்பதாம்.

சைவ சித்தாந்தத்தில் 'சத்து', 'அசத்து' என்னும் சொற்கள் அடிக்கடிப் பயன்படுத்தப்படும். இவை குறித்து ஆ. ஆனந்தராசன் கூறுவது வருமாறு :

> "*சைவ சித்தாந்தம், எவ்வித மாற்றமும் அடையாமல் என்றும் ஒருதன்மைத்தாய் நிற்கும் பொருளையே 'சத்து' என்று சிறப்பாகக் கொள்ளும். அவ்விலக்கணப்படி நோக்கினால், பதிப்பொருளாகிய இறை ஒன்றே 'சத்து' எனப்படுதற்கு உரியது என்பது புலனாகும் . . . இம்மும்மலங்களும் (ஆணவம், கன்மம், மாயை) 'அசத்து' என்றே கொள்ளப்படுகின்றன*"[118]

பாச ஞானம், பசு ஞானம் இவற்றால் அறியப்படாமையால், 'சித்தா'யும்; பதிஞானத்தால் அறியப்படுதலின் 'சத்தா'யும் விளங்கும் முதல்வன் **'சிவசத்து'** எனப்படுவன்.

> *"சித்து, சத்து என்னும்இரு தன்மைகளையும் ஒருங்கு உடைமையே பதிக்குச் 'சிறப்பு இயல்பு' அல்லது 'சொரூப இலக்கணம்.'* [119]

என்பர் சி. அருணைவடிவேலு முதலியார்.

இதனை மெய்கண்டார்,

> *"உணர்உரு அசத்தெனின் உணரா தின்மையின்*
> *இருதிற னல்லது சிவசத் தாமென*
> *இரண்டு வகையின் இசைக்குமன் னுலகே"* [120]

என்று அருளிச் செய்வாராயினர்.

உயிர், தன் உண்மை நிலையை அறியாமல், தனக்கு வேறாய அப்பொருள்களே தான் என்று மயங்கி அறியும் இவ்வறிவு **'பாச ஞானம்'** எனப்படும். இவ்வாறு பாசங்களையே தானாக மயங்கி அறிந்து வரும் உயிர், அறிவு முதிரமுதிரக் கருவியும் பொருளும் ஆகிய அனைத்தும் சடப்பொருள் ஆகும் என்பதன்றிச் சித்துப் பொருள் ஆகாமையையும் அறியும். மேலும், தான் சித்துப்பொருள் என்பதையும் அறிந்து, தன்னை அவை அனைத்திலும் வேறாகவும் காணும். இவ்வாறு காணும்போது, கருவி கரணங்களுக்குத் தான் முதல்வனாதலை உணரும். இவ்வுணர்வு, தன்னையே பதிப்பொருளாக மயங்கி அறியச் செய்யும். இதுவே **'பசுஞானம்'** எனப்படும்.[121]

இக்கருத்துக்களை விளக்குவதாக அமைவது, பின்வரும் நாவுக்கரசர் அருளிய திருப்பாட்டு :

> *"மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி*
> *மயானத்தான் வார்சடையான் என்னி னல்லான்*
> *ஒப்புடைய னல்லன் ஒருவ னல்லன்*
> *ஓரூர னல்லன்ஓ ருவம னில்லி*
> *அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும்*
> ***அவனருளே கண்ணாகக் காணின் அல்லால்***
> *இப்படியன் இந்நிறத்தன் இவ்வணத்தன்*
> *இவனிறைவன் என்றெழுதிக் காட்டொ ணாதே!"* [122]

இறைவனின் 'சொரூபநிலை'யை விளக்குவது இத்திருத்தாண்டகம். இதன்கண் வரும், "இப்படியன் . . . எழுதிக் காட்டொணாதே" என்னும்

பகுதி, "இறைவன், பாசஞான, பசுஞானங்கட்கு அகப்படாதவன்" என்பதைக் குறிக்க வந்தது.

உயிர், தான் அறிவுடைப் பொருள் என்பதை அறிந்தவுடன், தானே அறிவாய் இல்லாது. அறிவிப்பதொரு பொருளால் அறியும் அறிவாய் இருத்தலை உணரும். அப்போது உயிருக்கு ஓர் அறிவு உண்டாகின்றது. இஃது எவ்வாறு என்று ஊன்றி நோக்கினால், தன் அறிவுக்கு அறிவாய் நிற்கும் பதிப்பொருளினது அறிவு புலனாவதாகும். இதுவே '**பதிஞானம்**' எனப்படும். இப் 'பதிஞானத்'தால் இறைவனை அறிவதையே சைவ சமய அருளாளர்கள். '**அருட்கண்ணால் காணுதல்**' என்பர்.

மேலே கூறிய திருத்தாண்டகத்தில்,

"**அவனருளே** *கண்ணாகக் காணின் அல்லால்*"

என வருவதும் இக்கருத்துப்பற்றியே! அருளே கண்ணாகக் காணின் இறைவனைக் காணலாம்: அக்கண் இல்லாதார்க்கு எல்லாவற்றானும் காட்டொணாது என்பது தெளிவு.

"தஞ்சம் வேண்டி வருந்தியபோது, தாமதிக்காது வந்தவரை 'யார்?' என்றேன். அந்நிலையில், சிவபெருமான், 'அஞ்சேல்? உன்னை அழைக்க வந்தேன்!' என்றார். அதனைக் கேட்ட வளவிலே, 'யான் உய்ந்தேன்' என்று மகிழ்ந்து, ஓடத் தொடங்கினேன். திருவாய்மூர் எம்பெருமானின் திருக்குறிப்பு யாதோ அறிகிலேன்?" என்ற பொருளில், திருநாவுக்கரசர்,

*"தஞ்சே கண்டேன் தரிக்கிலா தார்என்றேன்*
*'அஞ்சேல்! உன்னை அழைக்கவந் தேன்'என்றார்*
*'உஞ்சேன்!' என்றுகந் தே. எழுந்து ஓட்டந்தேன்*
*வஞ்சே வல்லரே வாய்மூர் அடிகளே!"*[123]

என்று அருளிச் செய்வதும் இவண் எண்ணத்தக்கது. இறைவனின் பேரருட்டிறத்தை விளம்பும் அருமைத் திருப்பாட்டு இது!

*"உள்ள மார்ந்த அடியார்தொழு தேத்த உகக்கும்*
*அருள்தந்து"*[124]

எனச் சம்பந்தரும்;

*"சாதலும் பிறத்தலும் தவிர்த்து எனை வகுத்துத்*
*தன்னருள் தந்த எம்தலைவனை"*[125]

எனச் சுந்தரரும்;

*"சிவனவன்என சிந்தையுள் நின்ற அதனால்*
*அவனரு ளாலே அவன்தாள் வணங்கி"*[126]

என மணிவாசகரும்;

"அறிவானுந் தானே அறிவிப்பான் தானே"[127]

எனக் காரைக்காலம்மையும்;

"எந்தநாள் கருணைக் குரித்தாளு நாள்எனவும்
என்இதயம் எனை வாட்டுதே!"[128]

எனத் தாயுமானவரும் மொழிந்த அருளுரைகள் இங்கு ஒப்பிட்டு உணரத்தகுவன.

"ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி"[129]

என மெய்கண்டார் அருளிச் செய்வதும்;

"பாசஞா னத்தாலும் பசுஞானத் தாலும்
பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத் தாலே
நேசமொடு உள்ளத்தே நாடி"[130]

எனச் சித்தியார் கூறுவதும் இவை பற்றியேயாம்!

**அத்துவிதம்**

சைவ சித்தாந்தத்தின் அடிப்படையும் தனக்கு ஒப்பில்லா உயர்ந்ததுமாகிய கொள்கை '**அத்துவிதம்**' ஆகும். இறைவன், இறைவியோடும் உயிர்களோடும் உலகத்தோடும் வேறறக்கூடி நிற்கும் நிலையே 'அத்துவித இயைபு' எனப்படும். இச்சொல் குறித்து மறைமலையடிகள் கூறும் விளக்கம் இங்குக் குறித்தல் சாலும்:

"அத்துவிதம் என்பது 'அத்வைதம்' என்னும் வடசொற் றிரிபாகும். அச்சொல், 'ந', 'த்வைதம்' என்னும் இருசொற் புணர்ச்சியாலாயது. இவ்விரு சொல்லில், முன்நின்ற நகரம் 'அன்மை' என்னும் பொருளையும், பின் நின்ற த்வைதம் 'இருமை' என்னும் பொருளையும் தாம்நிற்கும், இரண்டுஞ் சேர்ந்து 'இருமை அன்மை' என்னும் பொருளை யுணர்த்தும். இருபொருள் தனித்தனி வேறு நிற்கு மாயின் அவைதம்மை இரண்டென்று உரைத்தல் வேண்டும்; அவை அங்ஙனம் நில்லாமல் ஒன்றோ டொன்று கலந்து நிற்குமாயின் அவற்றை இரண்டென் றுரைத்தலுமாகாது, ஒன்றென்றுரைத்தலுமாகாது. உயிரும் உடம்பும் பிரிந்து நிற்புழி அவைதம்மை இரண்டென்று கூறுதல் பொருத்தமாம்; மற்று அவை ஒருங்குகூடி நிற்புழி அவற்றை ஒன்றெனவாதல், இரண்டெனவாதல் கூறுதல் ஒவ்வாதாம். இங்ஙனமே, இறைவன் ஏனையெல்லாப் பொருள்களையும்

விட்டுத் தனித்து நிற்குமாயின் அவனை ஒரு பொருளாயும் ஏனையவற்றையெல்லாம் ஒருங்கு தொகுத்து அத்தொகையை மற்றொரு பொருளாயும் உரைத்தல் ஏற்புடைத்தாம். மற்று இறைவனோ அவ்வாறு தனித்து நிற்பான் அல்லனாய்ப் பாலுள் நெய் போன்றும், பழத்துட் சுவை போன்றும் எல்லாப் பொருள்களினும் வேற்றுமையின்றிக் கலந்து நிறைந்திருப்பனாதலின், அவனையும் அவனோடு ஒன்றுகூடி நிற்கும் பொருள்களையும் ஒன்றென வாதல் இரண்டெனவாத லுரைத்தல் அமையாது. அங்ஙனம் அவனும் அவையும வேறின்றி விரவி நிற்றலைத் தெரித்தல் வேண்டின், அதனை 'இருதன்மை அன்மை' என்றேதான் கூறல் வேண்டும்"[131]

இவ் 'அத்துவிதம்' பற்றி மெய்கண்டார் அருளிச் செய்யும் நூற்பா வருமாறு:

*"அவையே தானே யாய், இருவினையில்*
*போக்கு வரவு புரிய ஆணையின்*
*நீக்கம் இன்றி நிற்கும் அன்றே"*[132]

இச்சூத்திரத்தின் திரண்ட பொழிப்பு: "....முதற்கடவுள், உயிர்களின் பொருட்டு உலகத்தைப் படைத்தல் முதலியன செய்யுமிடத்து, உடலில் உயிர்போல, **கலப்பினால் அவ்வுயிர்களே ஆகியும்**; கண்ணில் அருக்கன் போல, **பொருள் தன்மையால் தான் வேறே ஆகியும்**; கண்ணொளியும் ஆன்ம போதமும் போல, உயிர்க்கு உயிராதல் தன்மையால் **அவையும் தானுமாக உடனாகியும் நின்று**, தனது சிற்சத்தியால் வருகின்ற இருவினைகட்கு ஈடாக அவ்வுயிர்கள் இறத்தல் பிறத்தல்களைப் புரியும் வண்ணம் அச்சத்தியினின்றும் வேறாதல் இன்றி, அதனோடு ஒன்றியே நிற்பன்."[133]

இதனைப் பின்வருமாறு மேலும் விளக்குதல் சாலும்: இறைவன், எல்லா இடங்களிலும் எல்லாப் பொருள்களிலும் கலந்து **ஒன்றாய்** நிற்பன். அஃது, உடலில் உள்ள உயிர்போல! உயிரானது, தன்னின் வேறாய உடலிற் பொருந்தியிருப்பினும், அவ்வேற்றுமை தோன்றாமல், அவ்வுடலே என்னும்படி ஒற்றுமைப்பட்டு நிற்கின்றது. அதுபோல, இறைவன், உயிர்களும் உலகமும் ஆகிய அனைத்திலும் கலந்து, அவையேயாக நிற்கின்றான். உயிரின் கலப்பு இல்லாமல் உடல் தனித்து நிற்றல் இயலாது; அதுபோல, இறைவனது கலப்பு இல்லாமல் எவ்வகைப் பொருளுக்கும் இருப்பு என்பது இல்லை. அவ்வப் பொருள்கள், அவ்வத் தன்மையோடு இருப்பதற்கு இறைவனது கலப்பே காரணம். எனவே எப்பொருளும் நிலைபெறுவதற்கு அதனோடு இறைவன், **ஒன்றாய்க்** கலந்து நிற்றல் இன்றியமையாததாகின்றது.

கண்ணொளி, தானே உருவத்தைக் காணமாட்டாது. சூரியஒளியானது, கண்ணொளியோடு கலந்து நின்று காட்டுகிறபோது, அக்கண் ஒளி காணவல்லதாகும். எனவே காட்சியின்போது அவ் இரண்டு ஒளியும் இயைந்து நிற்கும் என்பது தெளிவு. சூரியஒளி, கண்ணொளியில் ஒன்றாய்க் கலந்து நிற்பினும், கண்ணொளி பொருளைக் காண்பதாகச், சூரியஒளி கண்ணிற்குப் பொருளைக் காட்டுவதாய் நிற்கும் தன்மையால் வேறுபட்டு நிற்கும் கண் ஒளியோடு கலந்து நிற்கும் சூரியஒளிபோல, உயிரானது ஒரு பொருளை அறியுமிடத்து உயிரோடு இறைவனும் இயைந்தே நிற்பன். இறைவனும் உயிரும் பிரித்தறிய வாராமல் இயைந்து நிற்கும் அந்நிலையிலும், உயிரானது பொருளை அறிய, இறைவன் அவ் உயிருக்கு அறிவிப்பவனாய் நிற்கும் தன்மையால் **வேறுபட்டு** நிற்பன். இனி, ஏனைய உலகப் பொருள்களில் இறைவன் **வேறாயும்** நிற்பன். அஃதாவது இவை இயக்கப்படுவனவாகத் தான் இயங்குபவனாகி நிற்றலாம். எனவே சித்தாகிய உயிர்களின் அறிவை விளக்குதற்கும், சடமாகிய பிற பொருள்களை இயக்குதற்கும் இறைவன் **வேறாய்** நிற்றல் இன்றியமையாததாகின்றது.

கண் ஒளி, ஒரு பொருளைக் காண்பதற்கு உயிரறிவும் உடன் நின்று காணல் வேண்டும். அதுபோல, இறைவன், உடனிருந்து அறியவில்லையென்றால், உயிர்களும் அறியமாட்டா! எனவே, உயிர்கள், பொருள்களை அறிந்து நுகர்வதற்கு இறைவன் **உடனாய்** நின்று அறிதல் இன்றியமையாததாகின்றது.[134]

> *"பண்ணையும் ஓசையும் போலப் பழமதுவும்*
> *எண்ணுஞ் சுவையும்போ லெங்குமாம் அண்ணல்தான்*
> ***அத்துவித மாதல்*** *அருமறைக்கு ளொன்றென்னா*
> *தத்துவிதம் என்றறையும் ஆங்கு"*[135]

என்பது சிவஞானபோதத்து 2ஆம் நூற்பாவில் வரும் உதாரண வெண்பா. இதன் பொழிப்பு வருமாறு:

"பண்ணும் (அதனின் வேறன்றா யெண்ணப்படும்) இசையும் போலவும்; பழமும் (அதனின் வேறன்றாயெண்ணப்படும்) சுவையும் போலவும் யாங்கணும் வியாபகமாய முதல்வன் திருவருள் உயிர்களின் வேற்றுமையின்றி நிற்பதாகலான், வேதங்கள் ஏகமென்னாது (பிரமம்) அத்துவிதம் என்று அவ்விடங்களிற் கூறும்!"[136]

இங்ஙனம் 'அத்துவிதம்' என்ற சொல்லுக்கு உண்மைப் பொருள் கண்டு உலகுக்கு உணர்த்திய வித்தகச் செல்வர் மெய்கண்டாரேயாவர். சுத்தாத்துவித மெய்யைக் கண்டு இனிது விளக்கியமையாலேயே, 'மெய்கண்டார்' எனும் மெய்ம்மைத் திருப்பெயர் பெற்றார் எனத் தாயுமானவர் விதந்து போற்றுவர்!

*"**அத்துவிதம்** பெறும் பேரென்று அறியாமல்*
*யான்எனும்பேய் அகந்தை யோடு*
*மத்தமதி யினர்போல மனங்கிடப்ப*
*இன்னம் இன்னம் வருந்து வேனோ?"*[137]

என்பது அவர் வாக்கு.

- இவ்வாறு, 'ஒன்றாய் நிற்றல், வேறாய் நிற்றல், உடனாய் நிற்றல்' என்னும் மூன்று தன்மையும் ஒருங்கே விளங்க நிற்கும் நிலையே '**அத்துவிதம்**' எனச் சைவ சித்தாந்தத்தில் சிறப்பாகப் பேசப்படும்.

மெய்கண்டாருக்கு முன்பிருந்த திருக்கடவூர் உய்யவந்ததேவ நாயனார், தமது, திருக்களிற்றுப்படியாரில்,

*"ஈறாகி அங்கே முதலொன்றாய் ஈங்கிரண்டாய்*
*மாறாத எண்வகையாய் மற்றிவற்றின் வேறாய்*
*உடனாய் இருக்கும் உருவுடைமை யெனறுங்*
*கடனா யிருக்கின்றான் காண்"*[138]

என்று கூறியிருப்பதும் அறியத்தகும்.

சிவஞான சித்தியார், உவமை வாயிலாக இவ் 'அத்துவித'க் கொள்கையை விளக்கும்:

*"உருவொடு கருவி யெல்லா முயிர்கொடு நின்று வேறாய்*
*வருவது போல வீச னுயிர்களின் மருவி வாழ்வன்*
*தருமுயி ரவனை யாகா வுயிரவை தானு மாகான்*
*வருபவ னிவைதா னாயும் வேறுமாய் மன்னி நின்றே!"*[139]

இதற்கு மு. திருவிளங்கம் தரும் உரைவிளக்கம் வருமாறு: "இச் செய்யுள், முதல்வன், உயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்கும் முறைமையை ஓர் உவமையில் வைத்து விளககிற்று. அஃதாவது (அ) சாத்தன் என்பவனை அவனுடைய உடம்பிற்கிட்ட பெயரால் அழைத்தவிடத்து, அவ்வுடம்போடு கூடிய உயிர் 'என்னை?' என்று வருவதற்குக் காரணம், அவ்வுயிர் உடம்பு வேறு தான் வேறு என்னும் வேற்றுமையின்றி நிற்றலாலாம். இது, முதல்வன் உயிர்களோடு கலந்து ஒன்றாய் (அபேதமாய்) நிற்றற்கு உதாரணம். (ஆ) இங்ஙனம் உயிர் உடம்போடு கலந்து நிற்பினும் உயிர், உயிரே; உடம்பு, உடம்பே. உயிர், உடம்பாகமாட்டாது; உடம்பு, உயிராகமாட்டாது. இது, முதல்வனும் உயிர்களும் அபேதமாக நிற்பினும், முதல்வன் **வேறு** உயிர்கள் வேறு (பேதம்) என்பதற்கு உதாரணம். (இ) உயிர் உடம்போடு ஒற்றித்து நின்று அதனை இயக்கினாலன்றி உடம்பு இயங்கமாட்டாதவாறு போல, முதல்வன் உயிரோடு ஒற்றித்து நின்று அதனை இயக்கினாலன்றி உயிர் இயங்காதாம். இது

முதல்வன், உயிர்களோடு உடனாய் (பேதாபேதமாய்) நிற்றற்கு உதாரணம்!"[140]

கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியாரும் தமது 'சிவப்பிரகாசம்' நூலில்,

*"அறத்திறனால் விளைவதாய உடலுயிர்கள் அருக்கன்*
*அறிவொளிபோல் பிறிவரும் **அத் துவிதமாகும்***
*சிறபபினதாய் வேதாந்தத் தெளிவாம **சைவ***
***சித்தாந்தத் திறன்**............"[141]*

என்பாராயினர். "யாதாமொர்ன்றை அறியுமிடத்து உடலுமுயிருந் தன்னில் ஒன்றுபட்டறியும் அறிவைப் பிரிக்க வொண்ணாதாற் போலவும்; யாதாமொன்றைக் காணுமிடத்துக் கண்ணினொளியும் ஆதித்தப் பிரகாசமும் தன்னிலொன்றுபட்டு நிற்கும் தன்மையைப் பிரிக்கவொண்ணாதாற் போலவும்; கர்த்தாவையும் பிரபஞ்சத்தையும் தன்னிற் பிரித்தற்கரிதாய் அநந்நியமாயிருக்கிற சிறப்பினை யுடைத்தாகிய, வேதத்தின் முடிவில் தெளிவாயுள்ள **சைவ சித்தாந்தத்தின்** உண்மையாகிய **அத்தம்**" என்பது இதன் கருத்து.[142]

**திருநாவுக்கரசர் தேவாரத்தில்!**

திருநாவுக்கரசர், தாம் அருளிய தேவாரத் திருப்பதிகங்களில் சைவ சித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கையான இவ் 'அத்துவிதத்'தைக் குறிப்பிட்டுள்ளார்.

*"அண்டமாய் ஆதியாய் அருமறையொடு ஐம்பூதப்*
*பிண்டமாய் உலகுக்கோர் பெய்பொருளாம் பிஞ்ஞகனை"*

*"நீரானே தீயானே நெதியானே கதியானே*
*ஊரானே உலகானே உடலானே உயிரானே"*

*"நீரவன் தீயினோடு நிழலவன் எழில தாய*
*பாரவன்"*

*"தானலாது உலகமில்லை சகமலாது அடிமையில்லை"*

*"நீருமாய்த் தீயுமாகி நிலனுமாய் விசும்பு மாகி"*

*"ஞாலமே விசும்பே!"*

*"நீரும் பாரும் நெருப்பும் அருக்கனும்*
*காரும் மாருதம் கானூர் முளைத்தவன்"*

*"எல்லாம் சிவனென்ன நின்றாய் போற்றி"*

"இறையவன்காண் ஏழுலகு மாயி னான்காண்
ஏழ்கடலுஞ் சூழ்மலையு மாயி னான்காண்!"

"எண்ணானாய் எழுத்தானாய் கடல் ஏழானாய்!"

"வானமிது வெல்லா முடையான் தன்னை"

"ஊரானை உலகேழாய் நின்றான தன்னை"

"நீதியாய நிலனாகி நெருப்பாய் நீராய
நிறைகாலாய் இவையிற்றின நியமமாகி"

"ஒருகாலத் தொன்றாகி நின்றார் போலும்!"

"பரந்தவனகாண் பல்லுயிர்க ளாகியெங்கும்"

"ஊனவனை உடலவனை உயிரா னானை
உலகேழு மானானை"

"**ஒன்றா** வுலகனைத்து மானார் தாமே"

"தடவரைகள் ஏழுமாய்க் காற்றாய்த் தீயாய்த்
தண்விசும்பாய்த் தண்விசும்பி னுச்சியாகி"

"இருநிலனாய்த் தீயாகி நீருமாகி
இயமான னாயெறியுங் காற்று மாகி
அருநிலைய திங்களாய் ஞாயி றாகி
ஆகாச மாயட்ட மூர்த்தி யாகிப்
பெருநலமுங் குற்றமும் பெண்ணும் ஆணும்
பிறருருவுந் தம்முருவுந் தாமே யாகி
நெருநலையாய் இன்றாகி நாளை யாகி
நிமிர்புன் சடையடிகள் நின்ற வாறே!"[143]

இவ்வாறு பல்வேறு பாடல்களிலும், எல்லாப் பொருள்களிலும் எம்பெருமான், '**ஒன்றாய்**' நிற்கும் நிலையினை நாவரசர் குறித்துச் செல்கின்றார். இங்கே சிலவே காட்டப்பட்டன.

"உயிரானது, பொருளையறிய, இறைவன் அவ் உயிருக்கு அறிவிப்பவனாய் நிற்கும் தன்மையால் **வேறுபட்டு** நிற்பன், அஃதாவது **வேறாய்** விளங்குவன்" என்னும் கருத்து மேலே சுட்டப்பட்டது.

திருநாவுக்கரசர் பாடல்களில், சிவபெருமான் '**வேறாய்**' நின்று விளங்கும் தன்மை இயம்பப்பட்டுள்ளது.

இறைவன் உலகத்தோடு கலப்பினால் ஒன்றாய் இருப்பினும் பொருள் தன்மையால் வேறாய் நிற்பன் என்பதனை, நாவரசர்,

"விரிகதிர் ஞாயிறும்அல்லர் மதியல்லர் வேத
விதியல்லர் விண்ணும் நிலனும்
திரிதரு வாயுஅல்லர் செறிதீயும் அல்லர்
தெளிநீரும் அல்லர் ..".

என்றும்,

'மண்ணலலை விண்ணலலை வலய மலலை
மலையல்லை கடலலலை வாயு வலலை
எண்ணல்லை யெழுத்தலலை யெரியு மல்லை
யிரவலலை பகலலலை யாவு மலலை
பெண்ணல்லை யாணல்லை பேடு மல்லை
பிறிதல்லை..............'[144]

என்றும் கூறும் பகுதிகளால் தெளியலாம்.

உயிர், இறைவனைப் போல அறிவுப்பொருளே; எனினும் அது, தானாக அறியும் தன்மையுடையதன்று. **இறைவன் அறிவிக்கவே** எதையும் அறியும்; அவ்வாறே இறைவன் செலுத்தவே அது செயற்படும். பக்குவம் பெற்ற அடியார்களுக்கு, ஆண்டவன் அறிவிக்க, அவர்களும் அறிவார்கள்.

நாவரசர், இத்தகு உணர்வைத் தமக்கு அருளவேண்டும் என இறைவன்பால் வேண்டுகின்றார்:

"மனமெனும் தோணி பற்றி
மதியெனும் கோலை யூன்றிச்
சினமெனும் சரக்கை யேற்றிச்
செறிகடல் ஓடும் போது
மனன்எனும பாறை தாககி
மறியுமபோது அறிய வொண்ணாது
உனையுனும **உணர்வை நல்காய்**'
ஒற்றியூர் உடைய கோவே'"[145]

இறைவன், தமக்கு உணர்த்தத் தாம் உணர்ந்தமையை நாவரசர், தம் திருப்பாடல்களில் விதந்து ஓதுகின்றார்:

"வெண்ணிலா மதியந் தன்னை
விரிசடை மேவ வைத்து
உண்ணிலாப் புகுந்து நின்றங்கு
உணர்வினுக்கு உணரக் கூறி"[146]

என்பது அவற்றுள் ஒன்று!

"உயிர்கள், பொருள்களை அறிந்து நுகர்வதற்கு, இறைவன், உடனாய் நின்று அறிதல் இன்றியமையாதது" எனுங்கருத்து முன்னர் உரைக்கப்பட்டது.

நாவரசர் பாடல்கள் பலவற்றிலும் இவ் 'உடனாதல்', சிறப்பாகச் சொல்லப்பட்டுள்ளது. ஈண்டும் சில சான்றுகள்:

"கண்ணினார் கண்ணின் உள்ளே
சோதியாய் நிறை எந்தை"

"ஆதியும் அறிவுமாகி அறிவினுள் செறிவு மாகிச
சோதியுள் சுடருமாகி"

"எண்ணுடை இருக்குமாகி இருக்கினுட் பொருளுமாகி"

"............மொட்டின்
மலர்வழி வாசத் தேனர்
கறவிடைப் பாலின் நெய்யர்"

"பண்ணினார் பாடலாகிப் பழத்தினில் இரதமாகிக
கண்ணினார் பார்வையாகிக் கற்பொடு கற்பமாகி
எண்ணினார் எண்ணமாகி......"

"உள்குவார் உள்கிற் றெல்லாம்
**உடனிருந்து** அறிதி"

"பண்ணில் ஓசை பழத்தினில் இன்சுவை"

"விறகில் தீயினன் பாலிற் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட்டு உணர்வு கயிற்றினில்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே!"

"சிந்தையாய் நின்ற சிவனே போற்றி"

"என்சிந்தை மேவி யுறைகின் றானை"

"........பாலின் நெய்யாம்
பழத்தின் இரதமாம் பாட்டிற் பண்ணாம்!"

"பூத்தானாம் பூவின் நிறத்தானுமாம்
பூக்களால் வாசமாய் மன்னி நின்ற
கோத்தானாம்....."

"உள்ளிருந்தங் குள்நோய் களைவான் தானாய்"

"..........மனத்துள் நின்ற
கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான்தன்னை"

"உகப்பார் மனத்தென்றும் நீங்காய் போற்றி"

"பூவினில் நாற்றமாய் நின்றாய் நீயே!"

"ஓங்காரத் துட்பொருளாய் நின்றான் கண்டாய்"

"ஆலைப படுகரும்பின் சாறுபோல........"[147]

- இவ்வாறு, திருநாவுக்கரசர், தம்மை ஆட்கொண்ட வள்ளலாம் சிவபெருமானின் '**அத்துவித**' நிலையைப் பல்வேறு பாடல்களிலும் சுட்டிச் செல்வது, அறிந்தறிந்து மகிழ்தற்குரியதாம்.

இவ் 'அத்துவித நிலை' பற்றிய கருத்துக்களைப் பிற திருமுறைகளிலும் கண்டு இன்புறலாம். அத்தகைய பாடல்களிற் சில வருமாறு:

*ஈறாய்முத லொன்றா யிருபெண்ணாண குணமூன்றாய*
*மாறாமறை நான்காயவரு பூதம்மவை ஐந்தாய*
*ஆறார்சுவை யேழோசையொ டெட்டுத்திசை தானாய்*
*வேறாயுட னானானிடம் வீழிம்மிழ லையே!*"[148]

என்னும் சம்பந்தர் தேவாரத்தில், இறைவன், உயிர்களோடு ஒன்றாய், வேறாய், உடனாய் நின்று விளங்கும் இயல்பு இயம்பப்பட்டுள்ளமை காணலாம்.

"**பூவில் வாசத்தைப்** *பொன்னினை மணியைப்*
*புவியைக் காற்றினைப் புனலனல் வெளியைச்*
*சேவின்மேல்வருஞ் செல்வனைச் சிவனைத்*
*தேவதேவனைத் தித்திக்கும் தேனை........*"[149]

என்னும் சுந்தரர் தேவாரத்தில், 'பூவில் வாசத்தை' என்பது இறைவனின் '**உடனாதல்**' இயல்பும்; 'பொன்னினை.......' என்பது '**ஒன்றாதல்**' இயல்பும் இடம்பெற்றுள்ளன.

"*பூதங்கள் ஐந்தாகிப் புலனாகிப் பொருளாகி*"

"*இணையன்நான் என்றுன்னை* **அறிவித்து**
*என்னை ஆட்கொண்டு*"

"*இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான்*"[150]

என்னும் மணிவாசகர் அருளிய திருவாசகத்தில் முறையே, 'ஒன்றாதல், வேறாதல், உடனாதல்' வந்துள்ளமை காணலாம்.

"*மாணிக்கத் துள்ளே மரகதச் சோதியாய்*"[151]

எனத் திருமூலரும்;

"*அவனே இருசுடர்தீ ஆகாசம் ஆவான்*
*அவனே புவிபுனல்காற் றாவான்!*"[152]

எனக் காரைக்காலம்மையாரும் கூறுவன ஒப்புநோக்கத்தகும்.

*"அருள்பழுத்த பழச்சுவையே"*[153]

என்று தாயுமானவர் கூறுவதும் எண்ணத்தக்கது.

**இவ்வகையில் திருநாவுக்கரசர், சைவ சித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கையாம் 'அத்துவித' நிலையைப் பல பாடல்களிலும் எடுத்தியம்பி, மனித்தப் பிறவியின் மாண் பயனுக்கு வழி வகுத்துள்ளார் எனலாம்.**

**முடிபுகள்**

இவ் 'இயல்' வாயிலாக அறியத்தகும் முடிபுகளாவன:

1. சைவ சித்தாந்தத்தில் சிறப்பாகப் பேசப்படும் பொருள் மூன்று. அவை: பதி, பசு, பாசம் என்பன. இம் மூன்றும் அநாதி;
2. முத்திதரும் பரசிவனே முதல்வன்; அவனை நாவுக்கரசர், "அம்மான், தலைவன், தத்துவன், தழலன், அப்பன், நின்மலன், உலகினுக்கு ஒருவன், பராபரன்" எனப் பலவாறு குறிப்பிடுவர்;
3. சிவபெருமானை 'அம்மையப்பனா'கக் காணும் அப்பர், "ஈன்றாளுமாய், எனக்கு எந்தையுமாய்" என்றதனோடமை யாது, 'உடன் தோன்றினராய்' என்று குறிப்பிடுவது, பொருள் பொதிந்தது;
4. பிரமன், விட்டுணு முதலானோர்க்கும் முதல்வன் சிவபெருமானே என்பதை நாவரசர் தம் பாடலால் புலப்படுத்துகின்றார்;
5. ஈசன், மகாசங்கார காரணனாக இருந்து, மயானத்துச் சாம்பல், என்பு அணிபவன்;
6. ஊழி முதல்வனாக உள்ள ஈசனே, 'ஆதி'யாகவும் உள்ளான்;
7. 'பதி'யாம் இறைவன் ஒருவனே 'சத்து'; இப் 'பதி'க்குச் 'சொரூப இலக்கணம்', 'தடத்த இலக்கணம்' எனும் இரு இயல்புகள் உண்டு;
8. இறையாம் முதல்வனுக்குத் 'தன்வயத்தன் ஆதல்' முதலான எண்குணங்கள் உண்டு;
9. நாவரசர் பாடல்களில் இவை விளக்கமாகச் சொல்லப்பட்டுள்ளன;
10. சைவ சமய குரவர் நால்வரில், நாவரசர் மட்டுமே, சைவம் விட்டுச் சமணம் சார்ந்து, மீண்டும் சிவனருளால் சைவத்திற்கு வந்தவர்;
11. தாம் புறச்சமயத்திலிருந்தபோது நிகழ்ந்த செயல்களைக் கூறுகின்றார் நாவரசர்;
12. இறைவன். தம்மை ஆட்கொண்ட பேரருட்டிறத்தை வியந்து போற்றுகின்றார்;

13. பதியானது, சொரூப நிலையில் 'சிவம்' எனவும்; தடத்தநிலையில் 'சத்தி' எனவும் சொல்லப்படும்;

14. நாவரசர், இறைவனை, 'உமைபாகனா'கவும் கண்டு ஏத்துகின்றார்;

15. இறைவன் உயிர்கள் பொருட்டுக் கொள்ளும் 'உருவம், அருஉருவம், அருவம்' எனும் மூவகைத் திருமேனிகள் குறித்து நாவரசர் பாடுகின்றார்;

16. நாவுக்கரசர், 'அறுகயிறு ஊசல்' ஆன நிலை குறித்தும் குறிப்பிடுகின்றார்;

17 ஞானம் மூவகைப்படும்: அவை: பாசஞானம், பசுஞானம், பதிஞானம்;

18 இறைவனைப் 'பதிஞானத்'தால் அறிவதைச் சைவ சமயம், 'அருட்கண்ணால் காணுதல்' என்று கூறும்;

19. சைவ சித்தாந்தத்தின் அடிப்படையான - முதன்மையான கொள்கை 'அத்துவிதம்' ஆகும். இறைவன், 'ஒன்றாய் வேறாய் உடனாய்' நிற்கும் நிலை இது;

20. இம் மூவகை நிலைகள் குறித்து நாவுக்கரசர், பல பாடல்களிலும் எடுத்து மொழிகின்றார்;

21. நாவுக்கரசர், தம் தேவாரத் திருப்பாக்களில் கூறியனவும்; பிற சமயாசாரியார்கள் கூறியனவும் உட்கொண்டு மெய்கண்டார், தம் 'சிவஞானபோத'த்தை அருளிச் செய்வாராயினர்; அவரை அடியொற்றிச் சிவஞான சித்தியார் போன்ற பிற சாத்திர நூல்கள் தோன்றியன என்று கூறுவது தவறாகாது.

## சான்றெண் விளக்கம்


1. ப. இராமநாதபிள்ளை (உ.ஆ.), 'முன்னுரை', தேவார அருள்முறைத் திரட்டு, ப.11.
2. தொல்காப்பியம், கற்பியல், 47
3. சிவப்பிரகாசம், 13 1
4. திருமந்திரம் 114-1-2
5. சோமசுந்தரத் தம்பிரான், 'தலைமையுரை', சைவ சமயச் சொற்பொழிவுகள், ப.198.
6. R. Ramanujachari, 'Saiva Siddhanta', **Collected Lectures on Saiva Siddhanta**, p.6.
7. வ.ஆ. தேவசேனாபதி, சைவ சித்தாந்தத்தின் அடிப்படைகள், ப.58.
8. சிவானந்த தேசிகர், சைவ சித்தாந்த சாரம், 7.
9. ந. சுப்புரெட்டியார், சைவ சமய விளக்கு, பக். 52 54.
10. தாயுமானசுவாமிகள் பாடல், 30.
11. மேலது, எந்நாட்கண்ணி, குருமரபின் வணக்கம், 4
12. மறைமலையடிகள், சிவஞானபோத ஆராய்ச்சி, பக்.242 - 244.

13. திருநாவுக்கரசர் தேவாரம், 4:924.
14. மேலது, 4:328.
15. சிவஞானபோதம், சூத்.1.
16. ஆ. ஆனந்தராசன், சிவஞானபோதம் வழித்துணை விளக்கவுரை, ப.16.
17. திருநாவுக்கரசர் தேவாரம், 4:913.
18. மேலது, 6:929:1.
19. சம்பந்தர் தேவாரம், 1:1:1.
20. சுந்தரர் தேவாரம், 17:7:1.
21. திருவாசகம், 538:1.
22. வை. இரத்தினசபாபதி, திருமுறைத் தெளிவே சிவஞான போதம், ப.128.
23. திருக்குறள், 349.
24. சிவஞானபோதம், 1: அதிகரணம் 3: மேற்கோள், ஏது.
25. சி. அருணைவடிவேலு முதலியார், சிவஞானபோத மாபாடியப் பொருள் நிலை விளக்கம், ப.272.
26. திருநாவுக்கரசர் தேவாரம், 4:135:3-4.
27. மேலது, 4:136:1, 3-4.
28 திருவாசகம், 11:3:1-2.
29. ஆ. ஆனந்தராசன், மு.கா.நூல், ப.15.
30. திருநாவுக்கரசர் தேவாரம், 4:36:1; 4:190:2; 315:1-2; 6:243:1; 6:250:1; 6:265:1; 6:288:1; 6:500:1.
31. திருவாசகம், 5:8:2-4.
32. சிவஞானபோதம், சூத்.1: அதிகரணம் 2: உதாரணம்.
33. சிவஞான சித்தியார் சுபக்கம், 68:2.
34. திருநாவுக்கரசர் தேவாரம், 4:235; 4:65:1; 4:255:4; 4:261:4; 4:372:3.
35. திருக்குறள், 1.
36. திருநாவுக்கரசர் தேவாரம், 6:283:4.
37. சம்பந்தர் தேவாரம், 2:26:7:1.
38. சுந்தரர் தேவாரம், 97:1.
39. திருவாசகம், 9:20:4.
40. திருநாவுக்கரசர் தேவாரம், 4:306:2; 5:7:1; 5:322:1; 5:620:1; 4:358:1; 6:462:1; 6:342:1.
41. சிவஞானபோதம், 1: அதிகாரம்:3.
42. ந. சுப்புரெட்டியார், மு.கா.நூல், பக். 52,53.
43. சிவஞானபோதம், சூத்.6: மேற்கோள்.
44. ஆ.ஆனந்தராசன், மு.கா.நூல், ப.141.
45. மறைமலையடிகள், மு.கா.நூல், பக்.2-12.

46. திருநாவுக்கரசர் தேவாரம், 4:64:1-2; 4:112:1; 4:183:4; 229:3-4; 4:155:1; 4:234:2; 4.358:2; 4:436:4; 4:584:2; 5:796:1; 5:898:3; 6:2:3; 6.802.

47. மறைமலையடிகள், மு.கா.நூல், ப.3.

48. திருநாவுக்கரசர் தேவாரம், 4:398:1; 4:439; 4:705:2; 5:491:2; 6:3.

49. மேலது, 4.783.

50. திருத்தொண்டர் புராணம், திருநாவுக்கரசு சுவாமிகள், 195:3-4.

51. திருநாவுக்கரசர் தேவாரம், 6:137.

52. திருத்தொண்டர் புராணம், திருஞானசம்பந்த சுவாமிகள், 64.3-4.

53. திருநாவுக்கரசர் தேவாரம், 4:287·1

54. மேலது, 5:258:1-2.

55. ·மேலது, 5:896.

56. திருத்தொண்டர் புராணம், மு.கா.நூல், 70.

57. திருவாசகம், 1:38.

58. திருநாவுக்கரசர் தேவாரம், 5:120:1; 4:250:2.

59. திருவாசகம், 3:49.

60. திருநாவுக்கரசர் தேவாரம், 6:445:2-3; 6:835:3.

61. திருவாசகம், 1:64.

62. மறைமலையடிகள், மு.கா.நூல், ப.8.

63. திருநாவுக்கரசர் தேவாரம், 4:38:1; 4:73:3; 4:247:3.

64. மேலது, 5:153.

65. மேலது, 4:195.

66. மேலது, 5:331.

67. திருத்தொண்டர் புராணம், திருநாவுக்கரசு சுவாமிகள், 37:2-4.

68. சிவஞான சித்தியார் சுபக்கம், 265.

69. மேலது, மு. திருவிளங்கம் உரை, ப.448.

70. தாயுமான சுவாமிகள், காடுங்கரையும், 2.

71. திருவாசகம், 4:74:87.

72. சிவஞானபோதம், அவையடக்கம்.

73. ஆ.ஆனந்தராசன், மு.கா.நூல், பக்.13,14.

74. திருநாவுக்கரசர் தேவாரம், 4:5.

75. மேலது, 4:45.

76. சம்பந்தர் தேவாரம், 1:2:18:2-3.

77. சுந்தரர் தேவாரம், 58:1:1.

78. திருவாசகம், 20:2:4:4.

79. காரைக்காலம்மையார், அற்புதத் திருவந்தாதி, 9:1.

80. தாயுமான சுவாமிகள், பரசிவ வணக்கம், 1:1.

81. திருநாவுக்கரசர் தேவாரம், 5:5:3; 5:23:1-2; 6:462:3.

82. மறைமலையடிகள், மு.கா.நூல், ப.10.

83. திருநாவுக்கரசர் தேவாரம், 4:36:1; 4:65:1-2; 4:448:1-2; 6:1.

84. திருவாசகம், 1:24; 3:5-6.

85. திருநாவுக்கரசர் தேவாரம், 4:184.

86. மேலது, 6:162.4

87. சுந்தரர் தேவாரம், 40:3.1

88. திருக்குறள், 9. பரிமேலழகர் உரை.

89. சிவஞானபோதம், சூத்.6: அதிகரணம் 2: மேற்கோள்.

90. மேலது, சூத்.5 உதாரணம்.

91. புறநானூறு, 1:7-8

92. திருநாவுக்கரசர் தேவாரம், 4:125:2; 4:187:3; 4:223:1; 4:255:2; 4:329:4; 4:402:1; 5:11:1; 5:460:1; 6:84.2, 6:216:1

93. மேலது, 4:21.

94. சம்பந்தர் தேவாரம், 1.10:1:1; 1:36:5:1.

95. சுந்தரர் தேவாரம், 68:5:1.

96. திருவாசகம், 11:6:2.

97. திருமந்திரம், 1755:1.

98. காரைக்காலம்மையார், மு.கா. நூல், 41:2.

99. சி. அருணைவடிவேலு முதலியார், மு.கா.நூல், ப.653

100. ச. கங்காதரன், சைவ சித்தாந்த அடிப்படைக் கொள்கைகளும் வரலாறும், ப.76.

101. திருநாவுக்கரசர் தேவாரம், 4:110:3-4; 4:11; 5:79.

102. மேலது, 4:56.

103. மேலது, 4:472:1, 5:347:1-2, 6:663:1-2.

104. சம்பந்தர் தேவாரம், 1:5:1.

105. சுந்தரர் தேவாரம், 11.1:1-2.

106. திருவாசகம், 11:2:3

107. காரைக்காலம்மையார், மு.கா.நூல், 26.

108. திருத்தொண்டர் புராணம், திருமலைச்சிறப்பு, 11:1.

109. சிவஞான சித்தியார் சுபக்கம், 58.

110. சிவஞானபோதம், சூத்.8:2.

111. வை. இரத்தினசபாபதி, மு.கா.நூல், ப.166.

112. சிவஞானபோதம், சூத்.8: அதிகரணம்:4, ஏது.

113. ஆ.ஆனந்தராசன், மு.கா.நூல், ப.213.

114. திருநாவுக்கரசர் தேவாரம், 5:129:4; 5:195:2.

115. மேலது, 4:264.

116. திருவாசகம், 4:75-76.

117. சிவஞான சித்தியார் சுபக்கம், 253.4.

118. ஆ. ஆனந்தராசன், மு.கா.நூல், பக்.129, 130

119. சி. அருணைவடிவேலு முதலியார், மு.கா.நூல், ப.561.

120 சிவஞானபோதம், சூத்.6.

121. ந. சுப்புரெட்டியார், மு.கா.நூல், பக்.113 - 114.

122. திருநாவுக்கரசர் தேவாரம், 6:959.

123. மேலது, 5:501.

124. சம்பந்தர் தேவாரம், 1:2:18.2

125. சுந்தரர் தேவாரம், 7:58:1:1.

126. திருவாசகம், 1:17-18.

127. காரைக்காலம்மையார், மு.கா.நூல், 20.1.

128. தாயுமான சுவாமிகள், சுகவாரி: 11:1.

129. சிவஞானபோதம், சூத்.9:1-2.

130. சிவஞான சித்தியார் சுபக்கம், 292:1-2.

131. மறைமலையடிகள், மு.கா.நூல், பக்.189 - 190.

132. சிவஞானபோதம், சூத்.2.

133. சி.அருணைவடிவேலு முதலியார், மு.கா.நூல், ப.290.

134. ஆ.ஆனந்தராசன், மு.கா.நூல், பக்.37,39.

135. சிவஞான போதம், சூத்.2: அதிகரணம்:1. உதாரணம்.

136. ப. இராமநாதபிள்ளை (ப.ஆ.), சிவஞான போதமும் சிவஞான முனிவர் அருளிச்செய்த சிற்றுரையும், ப.25.

137. தாயுமான சுவாமிகள், எந்நாட்கண்ணி, 'ஆசையெனும்':9.

138. திருக்களிற்றுப்படியார், 86.

139. சிவஞான சித்தியார் சுபக்கம், 93.

140. மேலது, மு. திருவிளங்கம் உரை, பக்.167,168.

141. சிவப்பிரகாசம், 7:3-4.

142. மேலது, உரை, பக்.167 - 168.

143. திருநாவுக்கரசர் தேவாரம், 4:65:1-2; 4:129:1-2; 4:357:1-2; 4:394:1; 4:525:1; 5:127:1; 5.766:1-2; 6:44:1; 6:85:1; 6:121:2; 6:193:1; 6:194:1; 6:268:1; 6:288:1; 6:641:1; 6:698:1; 6:774:1; 6:824:1; 6:919.

144. மேலது, 4:73:1-2; 6:456:1-3.

145. மேலது, 4:455.

146. மேலது, 4:249:1-2.

147. **மேலது,** 4:328:3; 4:467:1-2; 4:468:1; 4:623:1-2; 4:682:1-3; 4:728:3; 5:474:1; 5:893; 6:52: 6:124:1; 6:148:2; 6:150:1-2; 6:157:1; 6:197:1; 6:327:1; 6:387:2; 6:400:1; 6:521:1.

148. **சம்பந்தர் தேவாரம்,** 1:11:2.

149. **சுந்தரர் தேவாரம்,** 68:3:1.

150. **திருவாசகம்,** 31:10.1, 5:22.2; 1:2.

151. **திருமந்திரம்,** 131 1

152. **காரைக்காலம்மையார்,** மு.கா.நூல். 21 1-2

153 **தாயுமான சுவாமிகள்,** ஆகாரபுவனம், சிதம்பர ரகசியம். 7 1



# 4

# திருநாவுக்கரசர் தேவாரத்தில் 'பசுவியற் கொள்கை'

## முன்னுரை

> *"இறைவன் ஒருவனைத்தவிர,* ***உயிர்களும்*** *உலகமுதற் காரணங்களும் அவனைப்போல அனாதிநித்தமாக இருப்பவை என்பது முறையன்று. அஃது இறைவனது எல்லாம்வல்ல தன்மைக்கு இழுக்கு என்று கொண்டு, இறைவனே எல்லாவற்றிற்கும் முதற்காரணமும் நிமித்த காரணமுமாவான என்று கூறும் தத்துவ சமயங்களுமுண்டு. ஒருகாரணத்திலிருந்து இரண்டு மாறுபட்ட இயல்புடைய காரியங்கள் பிறவா என்ற முறையும் பிறவும் அடிப்படையாகக் கொண்டு, அக்கொள்கையை ஏற்காது விலக்கும் வகையில்* ***சைவம் சிறந்து நிற்கிறது.*** *இல்லதினின்றும் உலகும்,* ***உயிர்களும்*** *தோற்றுவிக்கப் பட்டன என்னும் சமயமும் உண்டு 'இல்லது தோன்றாது, உள்ளதே தோன்றும்' என்னும் சற்காரிய முறையால்* ***சைவம் மேன்மையுறுகிறது"***[1]

எனச் சைவ சித்தாந்தக் கொள்கையின் தனிச் சிறப்புக் குறித்து ஒளவை சு. துரைசாமிப்பிள்ளை கூறுவர். இத்தகு சைவ சித்தாந்தம் நுவலும் முப்பொருள்களுள் 'பசு' அல்லது 'உயிர்' என்பதும் ஒன்று என முன்னரும் குறிக்கப்பட்டது. திருநாவுக்கரசர் தேவாரத்தில் 'பசுவியற் கொள்கை' எவ்வாறு இடம்பெற்றுள்ளது என ஒருசிறிது ஆராய்வது, இவ்வியலின் நோக்கம்.

## 'பசு' - ஒரு விளக்கம்

'பதி, பசு, பாசம்' எனும் முப்பொருள் குறித்துச் சி.அருணைவடிவேலு முதலியார் கூறும் விளக்கம் இங்குக் கருதத்தகும்:

"இம்மூன்று பொருள்களும் தனித்தனி முதல்களே. அதனால் இவற்றிடையே காரண காரியத் தொடர்பிற்கு இடமில்லை; இம் முப்பொருள்களும் காலத்திற்கு உட்படாதவை. அஃதாவது, தோற்றம் என்பதும் அழிவு என்பதும் இன்றி, என்றும் உள்ள பொருள்கள். அதனால் இவை, 'அனாதி நித்தியம்' என வடமொழியில் சொல்லப்படுகின்றன. இம முப்பொருள்கட்கு இடையே உள்ள தொடர்பு, 'வியாபக வியாப்பிய வியாத்தித' தொடர்பேயாகும். வியாபகம் - பெருநிறைவு; வியாப்பியம் அதறகு உள்ளடங்கிய நிறைவு; வியாத்தி சமநிறைவு .... கடல் ஆழமான இடம். இது 'வியாபகம்'. நீர் அந்த இடம் முழுவதிலும் உள்ளடங்கி இருத்தலால் 'வியாப்பியம்'; உபபு நீர் முழுவதிலும் கலந்திருத்தலால் 'வியாத்தி' 'கடல்' போன்றது பதி; அதில் உள்ள 'நீர்' போன்றது பசு. அந்த நீர் முழுவதிலும் கலந்துள்ள 'உப்பு'ப் போன்றது பாசம்."[2]

'பசு' என்பது வடசொல்; இதனைப் 'பச்' 'உ' எனப்பிரித்துப் 'பச்-பந்தித்தல்; உ-செயப்படுபொருள் விகுதி' என்று கூறிப் 'பாசத்தாற் பந்திக்கப்பட்டது' என்பர்.[3]

"பசுத்துவ முடைய னாகிப் பசுவென நிற்கு மான்மா"[4]

எனச் சித்தியார் கூறும். இதற்குச் சிவாக்கிரயோகியர், பின்வருமாறு உரை கூறுவர்:

"நித்தியமாகிய ஆன்ம ஞானக் கிரியைகளை அநாதியே தடுத்து நிற்கும் ஆணவமல சக்தியை உடைத்தாகையால் 'பசு' என்னும் பெயரையுடைத்தாய் நிற்கும்."[5]

"உயிர் எனத் தனி இருப்பு உடைய பொருள் உண்டா?" என்பது மெய்யுணர்வுத் துறையில் பல வகைகளில் ஆராயப்பெற்றுள்ளது; முடிபுகள் பலவாகும்.

"ஆன்மா என்பது சூனியம்; பருவுடம்பே ஆன்மா; இந்திரியங்களே ஆன்மா; சூக்கும தேகமே ஆன்மா; பிராண வாயுவே ஆன்மா; பிரமமே ஆன்மா; அனைத்தும் கூடிய தொகுதியே ஆன்மா" என மாறுபட்ட கருத்துக்கள் கூறுவோர் உளர் இவற்றையெல்லாம் அருளாளராம் மெய்கண்டார்,

"உளதில தென்றலின் எனதுட லென்றலின்
ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் கண்படில்

*உண்டிவினை யின்மையின் உணர்த்த வுணர்தலின்*
*மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா"*[6]

எனும் நூற்பாவாலும், இதன் தொடர்ச்சியாக அடுத்தடுத்து வரும் மேற்கோள், ஏது, எடுத்துக்காட்டு இவற்றாலும் மறுத்துரைப்பர். இதற்கு மாதவச் சிவஞானமுனிவர், பல்வேறு விளக்கங்களைத் தமது 'மாபாடிய'த்துள் கூறி, மெய்கண்டார் கூற்றுக்கு அரண் செய்வர்.[7]

'உயிர்கள் எண்ணில் பலவாம்' என்பதை நாவுக்கரசர்,

*"மல்லை ஞாலத்து வாழும் உயிர்கட்கெலாம்"*

*"உலகத்தின உயிர்கட்கெலாம்"*[8]

*"பல்லுயிர்கட்கோர் தந்தை யாகி"*

*"பல்லுயிராய்........"*

*"புல்லுயிர்க்கும் பூட்சி புணர்த்தாய"*

*"பல்லுயிர்க்கும் பரிவோன்தன்னை"*

*"தொல்லுலகில் பல்லுயிரை"*[9]

என்று பல்லுயிர்த் தொகுதியைக் குறிப்பிடுபவர்,

*"புல்லாகிப் புதலாகிப் பூடுமாகி"*

*"உற்றுலவு பிணியுலகத் தெழுமை வைத்தார்"*

*"பலபிறவி யறுத்தருளும்"*[10]

எனப் 'புல்', எழுபிறப்பு', 'பலபிறவிகள்' ஆகியன பற்றியும் குறிப்பிடுவது எண்ணத்தக்கது.

மேலும் நாவரசர், 'பசு' என்ற சொல்லையே பயன்படுத்தியுள்ளார் என்பதும் இவண் எண்ணத்தக்கது:

*"பாலனார் **பசுபதி**யார்"*

*"**பசுபதீ**! பாவநாசா!"*

*"எம்மை ஆளும் **பசுபதி**யே!"*

*"**பசுபதி**யைப் பாவகனை"*

*"**பசுபதீ**! பண்டரங்கா"*

*"**பசுபதி**யைப் பவளக்குன்றை"*

*"**பசுபதி**யைப் பத்தர்க்கு முத்திகாட்டும் வரத்தானை"*

*"**பசுபதி**யைப் பாசுபத வேடத்தானை"*[11]

என்று பல்வேறிடங்களிலும் 'பசு'க்களுக்குப் 'பதி'யாகும் பரமனைக் கூறுபவர்,

*"இழிப்பரிய* **பசுபாசப் பிறப்பை**"[12]

எனப் 'பசு'வோடு 'பாசத்'தையும் சுட்டுவது எண்ணுதற்குரித்து.

'பசு' என்னும் சொல் தவிர, 'ஆன்மா' எனும் சொல்லையும் எடுத்தாள்கின்றார் நாவுக்கரசர்.

*"அருந்தவத்தால்* **ஆன்மா***வின் இடமதாகி"*[13]

என்பது சான்று.

**முதல்வனும் உயிரும்**

உயிர்கள், ஒரு காலத்தில் தோன்றியனவல்ல; இறைவனால் படைக்கப்பட்டனவுமல்ல. முதல்வனைப் போல அநாதியாகக் காலங் கடந்து உள்ள பொருள்களேயாம்.

*"பதியினைப் போல் பசுபாசம் அநாதி"*[14]

என்பது மீண்டும் நினைக்கத்தகும்.

'உயிர்' அறிவுப்பொருள்; எனினும், இறைவனது அறிவு போன்று பேரறிவுடையதன்று; அது, சிற்றறிவுடையதாய் உள்ள பொருள். அனைத்தையும் முற்ற அறிதல் - இறைவனின் அறிவு; ஆனால், சிறுகச் சிறுக அறிதல், அறிவிக்க அறிதல், அழுந்தி அறிதல் ஆகியன - உயிர்க்குரியன. என்றும் இறைவனின் அறிவை வரையறை செய்தல் அத்துணை எளிதன்று. அதனாற்றான் வள்ளுவரும், இறைவனை 'வாலறிவன்'[15] என்பாராயினர். உயிரின் அறிவும் செயலும், இறைவனைச் சார்ந்தே அமையும்.

'பிறத்தல், இறத்தல்' என்று கூறுவனவெல்லாம், உடம்பைப் பற்றியனவே. உயிரானது உடம்போடு கூடியமைதல் 'பிறத்தல்' ஆம்; அஃது உடம்பை விட்டு நீங்குதல் 'இறத்தல்' ஆம். இதனையே வள்ளுவர்,

*"குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே*
*உடம்போ டுயிரிடை நட்பு"*[16]

எனும் ஓர் அழகான உவமை வாயிலாக உணர்த்தலானார்.

நாவுக்கரசரும்,

*"பிறத்தலும் பிறந்தாற் பிணிப்பட*
*வாய்ந்து அசைந்து உடலம் புகுந்துநின்று*
*இறக்குமாறு உளதே!"*[17]

என்பர்.

"இருளில் உள்ள கண், அவ்விருளை நீக்கிக் கொள்வதற்குச் சூரியவொளி வேண்டும்: பின் பொருளைக் காண்பதற்கும் சூரியவொளியின் உதவி வேண்டும். அதுபோல, உயிர், தன்னைப் பிணித்துள்ள அறியாமையாகிய இருளை நீக்கிக் கொள்வதற்கு மட்டுமன்றி, இறைவனைக் கண்டு அனுபவிப்பதற்கும் இறைவனது உதவி இன்றியமையாத தாகும். இவ்வாறு பலவகையிலும் உயிர், இறைவனுக்கு அடிமையாயே நிற்கும்"[18]

இதனை மெய்கண்டார் பின்வரும் எடுத்துக்காட்டால் விளக்குவர்:

"ஒன்றலா வொன்றால் உளதாகி நின்றவா
றொன்றலா வொன்றிலவை யீறாதல் - ஒன்றலா
ஈறே முதலதனின் ஈறலா வொன்றுபல
வாறே தொழும்பாகும் அங்கு"[19]

"உயிர்த்தொகுதி யாவும் ஒப்பற்ற ஒரு முதல்வனால் உடம்போடு கூடித் தோற்றம் எய்தி, நிலைபெற்றுப் பின், அவ் ஒருவனால் இறுதியை எய்தும். இறுதியைச் செய்யும் ஒருவனாகிய அந்தச் சங்காரகாரணனே முதல் ஆவதன்றிப் பிறர் முதல் ஆகார்! அவ் ஒரு தனி முதல்வனைப் போல அழிவில்லாததாகிய உயிர், முத்தி பெற்ற அவ்விடத்தும் அம் முதல்வனுக்கு அடிமையேயாய் நிற்கும்" என்பது இதன் பொருள்.

அறிவைப் போலவே இறைவனுக்குரிய தலைமைக் குணம் 'அருள்' ஆகும்; அத்தகைய பேரருளை, உயிர்களிடத்துக் காண்டல் இயலாது.

இறைவனின் பேரறிவையும் பேரருளையும் இணைத்துப் பாடுகின்றார் நாவரசர்.

"திருவின் நாதனும் செம்மலர் மேலுறை
உருவ னாய்,உல கத்தின் உயிர்க்கெலாம்
கருவ னாகி முளைத்தவன் கானூரில்
பரம னாய பரஞ்சுடர் காண்மினே!"[20]

இறைவன், உயிர்கட்கெல்லாம் 'கரு' என மூலமாய் முளைத்து நின்ற பரம்பொருள்; அதுவே பரஞ்சுடர். 'பரம்பொருள்' என்றதால், அதற்கு மேலான வேறொன்று இல்லை என்பது போதரும்; அறிவினுக்கும் அறிவாக உள்ள பரம்பொருள் என்பது கருத்து. 'பரஞ்சுடர்' என்பது அருள்நிலையால் ஒளிப்பொருளாக விளங்குவதைச் சுட்டும்.[21]

இறைவன், 'கரு'வாக நின்று, அனைத்துப் பொருட்களையும் நிலைபெறுத்துபவன்; எல்லாப் பொருள்களும் அறிவைப் பெறுமாறு

செய்திட்டவன். அவன், உயிரோடும் சிந்தை முதலான அறிகருவிகளோடும் செறிவு செய்திட்டிருப்பவன். இப்பொருள்பட இதே பதிகத்தில்,

"செறிவு செய்திட்டு இருப்பதென் சிந்தையே?"[22]

என மொழிகின்றார் வாக்கின் மன்னவனார்.

எல்லா உயிர்க்கும் முதல்வனாம் சிவபெருமான், உயிரினுள் அறிவாய்ச் செறிந்து நின்றதோடன்றி, அதனை உணர்த்தவும் செய்கின்றான்; அவ்வுணர்வை உயிரானது அறிய முற்பட்டபோது உணர்தலுக்கு உரிய விடயமாகவும் நிற்கின்றான். அவனது அருட்டிறம் இது! நாவுக்கரசர், பின்வரும் பாடலால் இதனைத் தெளிவுறுத்துவர்:

*"ஏறொப் பானை,எல் லாவுயிர்க் கும்இறை*
*வேறொப் பானை,விண் ணோரும் அறிகிலா*
*ஆறொப் பானை அரத்துறை மேவிய*
*ஊறொப் பானைக் கண்டீர்நாம் தொழுவதே!"*[23]

ஆனால், இறைவன், பக்குவமுறை ஆன்மாக்களுக்கே அருள் புரிபவன். அத்தகைய பக்குவத்தை அடைவது யாங்ஙனம் என்பதற்கும் வழி கூறுகின்றார் நாவுக்கரசர்:

*"விறகில் தீயினன் பாலிற் படுநெய்போல்*
*மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்*
*உறவு கோல்நட்டு உணர்வு கயிற்றினால்*
*முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே!"*[24]

என்னும் பாட்டு முன்னரும் சுட்டப்பட்டது. இறைவன் - சோதி வடிவினன்; அதுவும், 'மாமணிச் சோதி வடிவினன்' எனினும் அச்சோதி அனைவர்க்கும் புலனாகாத பெருமையினது. விறகில் மறைந்திருக்கும் நெருப்புப் போலவும்; பாலில் மறைந்திருக்கும் நெய் போலவும் கட்புலனுக்குத் தெரியாது மறைந்து நிற்பவன். அப்பெருமானை, அன்பாகிய உறவு கொண்டு, 'யான் எனது' எனும் செருக்கற்று, 'அவனுக்கு யான் அடிமை' எனும் உணர்வு கொண்டு, ஞானமாகிய கயிற்றினால், மனம் எனும் கலயத்தில் கடைந்தால், அவன் அமிழ்தமாகத் தோன்றுவன்.

*"துன்பம் இன்றித் துயரின்றி என்றும்நீர்*
*இன்பம் வேண்டில் இராப்பகல் ஏத்துமின்!*
*என்பொன் ஈசன் இறைவன்என்று உள்குவார்க்கு*
*அன்பன் ஆயிடும் ஆனைக்கா அண்ணலே!"*[25]

என்பதும் அவர் திருமொழியே.

"உயிரின் இணைப்பால் உடம்பு அறிவுடையதாகத் தோன்றுகிறது. இயல்பாகவே உடம்பு அறிவுடையதன்று. அவ்வாறே இறையின் இணைப்பால் உயிர் அறிவுடை-யதாய்த் தோன்றுகிறது. உயிரானது இணையாதபோது, மெய் வாய் கண் மூக்குச் செவி போன்றவை அறியும் தன்மையைப் பெறா. உயிரானது இணைந்து அறியச் செய்யும்போது, அறியும் தன்மையோடு இயங்கும் ஐம்புலன்களும் கீழே குறிப்பிடப்பெற்ற மூன்று செய்திகளை அறியா:

(1) கண்ணானது, காணும் செயலுக்கு அப்பாற்பட்டதாய்க் கேட்கும் செயலுக்கு உரியதை அறியாது;

(2) காணும் தன்மையை உயிரின் இணைப்பால் பெற்ற கண்ணானது கண்ணாகிய தன்னைப்பற்றி அறியாது;

(3) கண்ணானது தன்னைக் காணும் செயலுக்கு உட்படுத்தும் உயிரையும் காணாது.

இவ்வாறே உயிரும் இறைவனால் காணும் செயலை மேற்கொண்டாலும், கீழ்க்கண்ட மூன்றையும் காண இயலாது;

(1) ஐம்புலன்களில் துணை கொண்டு கண்டாலும், கருவிகளின் துணையில்லாமல் காணப்பெறும் பொருள் ஒன்று இருப்பின் அதனை உயிரானது காண இயலாது. கருவிகளின் எல்லைக்கு உட்பட்ட பொருளையே அறியும்; (2) உயிர், தன்னையே அறிய இயலாது; (3) உயிரானது தன்னை இயக்கும் இறைவனையும் அறிய இயலாது!"[26]

என உயிரின் இயல்பை விளக்குவர் வை.இரத்தினசபாபதி

திருநாவுக்கரசரது தேவாரத்தில் இக்கருத்துக்கள் அமைந்திருப்பன காணலாம்:

"பொத்தல் மண்சுவர்ப் பொல்லாக் குரம்பையை
மெய்த்தன் என்று வியந்திடல் ஏழைகாள்!
சித்தர் பத்தர்கள் சேர்திருக் கானூ ரில்
அத்தன் பாதம் அடைதல் கருமமே!"[27]

இப்பாடலில், 'பொத்தல் மண்சுவர்ப் பொல்லாக் குரம்பையை, மெய்த்தன் என்று வியந்திடல்' என்பது, 'இவ்வுடம்பும், உடம்பிலுள்ள கருவிகளும் பொய்யானவை', அஃதாவது 'அசத்து' ஆதலின் இவற்றை 'மெய்யானவை' என்று வியந்து பெருமை கொள்ளலாகாது என்பதாம்.

எனினும், இறைவன் திருவடியைச் சார்ந்துவிட்டால், அனைத்தும் அறியமுடியும்; அஃது அவனது அருட்செயல். 'அத்தன் பாதம் அடைதல் கருமமே' எனும் தொடர் இதனைக் குறிக்கும்.

"பழியுடை யாக்கை தன்னில்
பாழுக்கே நீர்இ றைத்து
பழியிடை வாழ மாட்டேன்
மாயமும் தெளிய கில்லேன்!
அழிவுடைத் தாய வாழ்க்கை
ஐவரால் அலைக்கப் பட்டுக்
கழியிடைத் தோணி போன்றேன்
கடவூர்வீ ரட்ட னீரே!"

"பிணமுடை யுடலுக் காகப்
பித்தராய்த் திரிந்து நீங்கள்
புணர்வெனும் போகம் வேண்டா!"

"......பிறவி மாயப்
புரையிலே யடங்கி நின்று
புறப்படும் வழியும் காணேன்!"

".........பாங்கிலா மனிதர் வாழ்க்கை
கெடுவதிப் பிறவி சீசீ!"

"நீப்பரிய பல்பிறவி நீக்கும்வண்ணம்
நினைந்திருந்தேன்!"[28]

எனப் பல்வேறு பதிகங்களிலும், 'யாக்கை நிலையாமை' பற்றிக் குறிப்பிடும் நாவுக்கரசர்,

"பிறப்பறுத்து அருள்செய் வானே!"

"என்னைப் பிறப்பறுத்து"

"பிணித்த நோய்ப்பிற விப்பிரி வெய்துமாறு
உணர்த்த லாம்,இது கேண்மின் உருத்திர
கணத்தி னார்தொழு து ஏத்தும் கருவிலிக்
குணத்தி னான்,உறை கொட்டிட்டை சேர்மினே!"[29]

என இறைவன் அருட்டிறத்தையும் எடுத்துரைப்பது எண்ணிப் பின்பற்றத்தக்கது.

இவற்றையெல்லாம் உட்கொண்டே மெய்கண்டாரும்,

"விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்
களந்தறிந் தறியா ஆங்கவை போலத்

*தாந்தம் உணர்வின் தமியருள்*
*காந்தங் கண்ட பசாசத் தவையே!"*[30]

என்று அருளிச் செய்தார் எனலாம்.

சித்தியாரும்,

*"தெரிந்துகொண் டொரோவொன் றாகச் சென்றைந்து*
*புலனும் பற்றிப்*
*புரிந்திடு முணர்வி னோடு போகமுங் கொடுத்தி யோநி*
*திரிந்திடு மதுவுஞ் செய்து செய்திகண் டுயிர்கட் கெல்லாம்*
*விரிந்திடு மறிவுங் காட்டி வீட்டையு மளிப்பன் மேலோன்!"*[31]

என, முதல்வனின் அருட்டிறத்தை இயம்பும்.

ஞானசம்பந்தர்,

*"மன்னானவன் னுலகிற்கொரு மழையானவன் பிழையில்*
*பொன்னானவன் முதலானவன்"*

*"மெய்யாகிப் பொய்யை நீக்கி வேதனையைத் துறந்து*
*செய்யரானார் சிந்தையானே தேவர்குலக் கொழுந்தே!*
*நைவனாயே னுன்றனாம நாளும்நவிற்று கின்றேன்*
*வையம முன்னே வந்து நல்காய் வலிவல மேயவனே!"*[32]

என்றும்;

சுந்தரர்,

*"மேவியவெந் நரகத்தி லழுந்தாமை நமக்கு*
*மெய்ந்நெறியைத் தான்காட்டும் வேதமுதலானை!"*[33]

என்றும்;

மணிவாசகர்,

*"யானை முதலா எனும்பீ றாய*
*ஊனமில் யோனி"*

*"மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச் சுடரே!"*[34]

என்றும் மொழிவன ஒப்புநோக்கத்தகுவன.

முதல்வன், தானே எல்லாம் அறிந்து அறிவிக்கும் இயற்கை முற்றுணர்வு உடையவன். உயிர்களோ, இறைவன் உணர்த்த, உணரும் இயல்பின; மேலும் ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு பொருளைமட்டுமே சுட்டி அறிவன; அவ்வாறு அறியுமிடத்தும் 'மெய், வாய், கண், மூக்கு, செவி, மனம்' போன்ற கருவிகளின் உதவியால், பொருட்களின் ஒவ்வோரியல்பையே

சுட்டி அறியும். மேலும், முதல்வன் எல்லாப் பொருள்களையும் ஒருங்கே தனித்து நின்று அறிவன்; உயிர்களோ, அறியப்பட்ட பொருள்களில் அழுந்தி அதுவேயாய் நின்று அறியும்.

திருநாவுக்கரசர்,

*"காண்டலே கருத்தாய் நினைந்திருந்தேன்*
*மனம்புகுந்தாய் கழலடி*
*பூண்டுகொண்டு ஒழிந்தேன்!"*

*"பப்போதிப் பவணனாய்ப் பறித்ததொரு*
*தலையோடே திரிதர்வேனை*
*ஒப்போட ஓதவித்துஎன் **உள்ளத்தின்***
***உள்ளிருந்துஅங்கு உறுதிகாட்டி***
*அப்போதைக்கு அப்போதும் அடியவர்கட்கு*
*ஆரமுதாம் ஆரூரரை*
*எப்போதும் நினையாதே இருட்டறையின்*
*மலடுகறந்து எய்த்தவாறே!"*

*"........**போதுநீக்கித்** தனைநினைய வல்லோர்க் கென்றும்*
*பெருந்துணையை"*[35]

என்று கூறுவது எண்ணத்தகும்.

*"ஒருகாலத்தில் ஒருபொருளையே அறிந்தும், மற்றொரு காலத்தில் மற்றொரு பொருளை அறிய முற்பட்டும், முன்பு அறிந்ததைப் பின்பு மறந்தும், ஒன்றையறியும் போதும் இடைவிடாமல் தொடர்ச்சியாய் அறிய மாட்டாது பற்றியும் விட்டும், இவ்வாறு வேறுபட்ட பலவகையில் திரிபுற்று அறிந்துவரும் பொருள் யாது எனச் சித்தாந்த உண்மையை உணர்ந்தோன், மனம் ஒன்றி ஆராய்வானாயின், அறியப்படும் பொருளின் வேறு நில்லாது அது அதுவேதானாய் அதன்கண் அழுந்திநின்று அறிவதாகிய ஆன்மா என்பது புலனாகும்"*[36]

என்ற பொருள்பட அமைவது பின்வரும் சிவஞானபோத உதாரணம்:

*"அறிந்தும் அறிவதே யாயு மறியா*
*தறிந்ததையும் விட்டங் கடங்கி அறிந்த*
*தெதுஅறிவும் அன்றாகும் மெய்கண்டான் ஒன்றின்*
*அதுவதுதான் என்னும் அகம்"*[37]

உயிரானது, தானே அறிந்தும் அறிவித்தும் நிற்பதாகிய 'பதி'யும் அன்று; அறிவித்தாலும் அறியமாட்டாத 'பாசமு'ம் அன்று; அறிவித்தால்

அறியும் அறிவுடைய ஓர் இடைநிலைப் பொருள். அறிவே வடிவாகிய பதிப்பொருள் 'சித்து' ஆகும்; அறிவே இல்லாத சடப்பொருள்களாகிய பாசங்கள், 'அசித்து' ஆகும்; எனவே அவ்விரண்டிற்கும் இடைப்பட்டதாகிய 'பசு'வானது 'சிதசித்து' எனப்படும். சித்தாகிய 'பதி' என்றும் ஒருபெற்றியதாய் இருத்தல் பற்றிச் 'சத்து' என்றும்; அசித்தாகிய பாசங்கள் நிலைமாற்றத்தை அடைதல்பற்றி 'அசத்து' என்றும் சொல்லப்படுமாதலால், இடைப்பட்டதாகிய 'பசு'வுக்குச் 'சதசத்து' என்று பெயர். எனவே பதி - சித்து, சத்து; பாசம் - அசித்து, அசத்து; பசு - சிதசித்து, சதசத்து எனப்படும் என்பது தெளிவு.

'சிதசத்து' என்பதற்குச், 'சித்துத் தன்மை', 'அசித்துத் தன்மை' என்ற இரு தன்மைக்கும் இடைப்பட்ட மற்றொரு தன்மை என்பதே பொருள். அஃதாவது சித்துப் பொருளை நோக்கச் 'சித்து' என்னும்படியும் நின்று, சித்தோடு கூடிச் சித்தாயும்; அசித்தோடு கூடி அசித்தாயும் நிற்கும் என்பதாம்.

உயிர், 'சதசத்து' என்பதற்குச் சத்தும் அன்றாய், அசத்தும் அன்றாய், சத்தை நோக்க அசத்தாயும்; அசத்தை நோக்கச் சத்தாயும் நின்று, சத்தோடு கூடிச் சத்தாயும், அசத்தோடு கூடி அசத்தாயும் நிற்பதொரு தன்மை எனல் வேண்டும்.

சித்தாயும் சத்தாயும் நிற்கும் பதிக்கும், அசித்தாயும் அசத்தாயும் நிற்கும் பாசத்திற்கும் சிறந்த தொடர்பு உண்டாவதில்லை. இதனால் இவற்றுள் ஒன்றால் மற்றொன்றிற்கு வருவது ஒன்றுமில்லை. இடையில் நிற்கும் 'பசு'வே, இரண்டனோடும் சிறந்த வகையில் தொடர்புடையதாய் உள்ளது. இதனால் இஃது இரண்டாலும் வரும் நன்மை தீமைகளை எய்துகின்றது.[38] இதுபற்றியே மெய்கண்டாரும்,

> *"யாவையுஞ் சூனியம் சத்தெதி ராகவிற்*
> *சத்தே யறியா தசத்தில தறியா*
> *திருதிறன் அறிவுள திரண்டலா ஆன்மா"*[39]

என்பாராயினர்.

ஆன்மா, தான் சார்ந்த பொருளின் தன்மையையே தன் தன்மையாகக் கொண்டு நிற்பதாகிய இது, 'சார்ந்ததன் வண்ணம் ஆதல்' எனப்படும்.

'கண்', இருளில் இருக்கும்போது, இருளைச் சார்ந்து இருளாய் நிற்கும்; ஒளி வந்த காலத்தில், அந்த ஒளியோடு கூடி ஒளியாய் நிற்கும். அதுபோன்றது 'ஆன்மா'.

ஆன்மா, அசத்தாகிய உடம்பைச் சார்ந்து நிற்கின்ற பெத்த காலத்தில், உடம்பின் தன்மையையே தன் தன்மையாகக் கொண்டு, 'வளர்தல், தேய்தல், விழிப்பு, உறக்கம், பிறப்பு, இறப்பு' முதலியன கொண்டு நிற்கும். உயிருக்கு

இவை இல்லை. எனினும், உடம்போடு கூடியிருப்பதனால், உடம்பின் தன்மைகளாகிய இவற்றைத் தன் தன்மைகளாகக் கொண்டு நிற்கும். பின்னர்ச் சத்தாகிய சிவத்தை உணர்ந்து, அதனைக் கூடி நிற்கின்ற முத்திக் காலத்தில், சிவத்தின் தன்மையையே தன் தன்மையாகக் கொண்டு நிற்கும். சிவத்தின் நிலைமையாவது, பிறப்பு இறப்பின்றி என்றும் ஒருதன்மைத்தாய் நிற்றல். சிவத்தைச் சார்ந்த உயிர், சிவத்திற்குரிய அந்நிலைமையே தன் நிலைமையாகப் பெற்று இன்புறும். இதுவே 'சிவமாம் தன்மைப் பெருவாழ்வு' என்பதாம்.[40]

மாணிக்கத்தைச் சார்ந்த படிகத்தை மாணிக்கமெனல் பொருந்தும்; ஆனால், மாணிக்கத்தைப் படிகம் எனல் அமையாது. அதுபோலச் சிவத்தைச் சார்ந்த ஆன்மாவும் சிவமாகாது; படிகம் போலச் சார்ந்ததன் வண்ணமாய் நிற்கும் ஆன்மா, 'மலம்' நீங்கித் தன்னறிவு வியாபகமாய் விளங்கியபோதும், தன்னாற் சாரப்பட்ட சிவத்தை மாத்திரம் அறிதலன்றி மற்றொன்றை அறிதல் செல்லாது; எனவே சிவனுக்கு அடிமை நிலையில் ஆன்மா இருக்கும்.[41]

'சார்ந்ததன் வண்ணமாதல்' என்பது, உயிர்களின் உண்மை எனப்படும், 'சொரூப இலக்கணம்' ஆகும்.

> *"நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்
> கினத்தியல்ப தாகு மறிவு"*[42]

என வள்ளுவரும் கூறுவர். உயிரின் தன்னியல்புகளில் இதுவே முதன்மையானது.

திருநாவுக்கரசர், அமண் சமயம் சார்ந்து, அச்சார்பினால் தம் வாழ்க்கையைப் பாழாக்கி விட்டதாகவும்; பின்னர் இறையருளால் உய்வு பெற்றதாகவும் பல திருப்பாடல்களில் குறிப்பிடுகின்றார்:

> *"பெருகுவித்து என்பாவத்தைப் பண்டெலாம்*
> *குண்டர்கள்தம் சொல்லே கேட்டு*
> *உருகுவித்துஎன் உள்ளத்தின் உள்ளிருந்த*
> *கள்ளத்தைத் தள்ளிப் போக்கி*
> *அருகுவித்துப் பிணிகாட்டி ஆட்கொண்டு*
> *பிணிதீர்த்த ஆரூரர்தம்*
> *அருகிருக்கும் விதியின்றி அறம்இருக்க*
> *மறம்விலைக்குக் கொண்ட வாறே!"*

> *"அமணர்கள்தம் அறவுரை கேட்டு அமைந்தேன்"*

> *"பாசிப்பல் மாசு மெய்யர்*
> *பலமிலாச் சமண ரோடு*
> *நேசத்தால் இருந்த நெஞ்சை*
> *நீக்குமாறு அறிய மாட்டேன்!"*[43]

எனத் தாம், சமணரோடு இருந்து கெட்ட அவலநிலையினைக் கூறுபவர்,

> "பண்ணிய சாத்திரப் பேய்கள்
> பறிதலைக் குண்டரைவிட்டு
> எண்ணில் புகழீசன் றன்னருள்
> பெற்றேற்கும் உண்டுகொலோ?"

> "குண்டு பட்டுக் குறியறி யாச்சமண்
> மிண்ட ரோடு படுத்துய்யப் போந்துநான்
> கண்டங் கார்வயல் சூழ்நதபைஞ் ஞீலியெம்
> அண்ட வாணன் அடியடைந்து உய்ந்தனே!"

> "வெஞ்சொற் சமண்சிறையி லென்னை மீட்டார்
> வீழிமிழலையே மேவி னாரே!"[44]

என இறைவனின் திருவருளால் உய்ந்தமையும் கூறுகின்றார் நாவரசர்.

தாம் இதுகாறும் சிவபெருமானை நினையாமலிருந்தமைக்கு இரங்கவும் செய்கின்றார் நாவரசர்:

> "கையெலாம் நெய்பாயக் கழுத்தே கிட்டக்
> கால்நிமிர்த்து நின்றுண்ணுங் கையர் சொன்ன
> **பொய்யெலாம் மெய்யென்று** கருதிப் புகுகுப
> புள்ளுவரா லகப்படா துய்யப் போந்தேன்
> செய்யெலாஞ் செழுங்கமலப் பழன வேலித்
> திருப்புன்கூர் மேவிய சிவ லோகனை
> நெய்தல்வாய்ப் புனற்படப்பை நீடூ ரானை
> **நீதனேன் என்னேநான் நினையா வாறே!**"[45]

என்பார் அவர். அவ்வாறிருந்தும் எம்பெருமான் தன் பெருங்கருணையால் மாயப்படுகுழியினின்றும் காத்தாட் கொண்டான் என்பதை,

> "இம்மாயப் பிறப்பென்னுங் கடலாந் துன்பத்
> திடைச்சுழிப்பட் டிளைப்பேனை இளையாவண்ணம்
> கைம்மான மனத்துதவிக் கருணை செய்து
> காதலரு ளவைத்தாய் காண நில்லாய்
> வெம்மான மதகரியி னுரிவை போர்த்த
> வேதியனே தென்னானைக் காவுள்மேய
> அம்மான்நின் பொற்பாதம் அடையப் பெற்றால்
> அல்லகண்டங் கொண்டடி யேனென் செய்கேனே!"[46]

என்பதால் தெளிவுறுத்துவர் நாவரசர்.

"நான், என்னை அறியாதவனாக இருந்து அஞ்ஞானத்ததில் மூழ்கியிருந்தேன்; ஆதலின் என் தலைவனாகிய இறைவனை அறிந்து

கொள்ள இயலாதவனாகவுமிருந்தேன். பின்னர், இறைவன், என்னையும் தன் அடியவனாக நினைத்துக் கருணை புரிந்தான்; அப்போதுதான், 'நான் யார் ? என் உள்ளம் ஆர் ? ஞானங்கள் ஆர் ?' என்று உணர்ந்து கொண்டேன்; எனக்கு 'இவனே தலைவன்' என்று அறிந்து அவனுக்கு ஆட்பட்டேன்" என்ற பொருளில் வருவது பின்வரும் பாடல் :

*"என்னை ஏதும் அறிந்திலன் எம்பிரான்*
*தன்னை நானுமுன் ஏதும் அறிந்திலேன்!*
*என்னைத் தன்னடி யான்என்று அறிதலும்*
*தன்னை நானும் பிரான்என்று அறிந்தெனே!"*[47]

நாவுக்கரசர், இவ்வாறு புறச்சமயம் சென்று, தம் வாழ்நாளை வீழ்நாள் ஆக்கியதையும், சிவனருளால் உய்தி பெற்றதையும் உளங்கொண்டு, இவ் உலகத்தவரும் இறையருளுக்கு ஆளாகி உய்வுபெற வேண்டும் எனும் கருணையால்,

*"மனிதர் காள்! இங்கே வம் ஒன்று சொல்லுகேன்!*
*கனிதந் தால், கனி உண்ணவும் வல்லிரே!*
*புனிதன் பொற்கழல் ஈசன் எனுங்கனி*
*இனிது சாலவும் ஏசற்ற வர்கட்கே!"*[48]

என மனிதர்களை, ஈசன் எனும் இன்பக்கனியை உண்ண அழைக்கின்றார்.

"உடம்பு என்னும் மனையில், உள்ளத்தை அகல்விளக்காகவும், உணர்வினை நெய்யாகவும் கொண்டு, உயிர் என்கிற திரியை வைத்து, ஞானமாகிய நெருப்பால் எரியுமாறு செய்து நோக்கினால், கடப்பமலர் மாலையணிந்த முருகக்கடவுளின் தாதையாகிய சிவபெருமானின் திருக்கழலடி காணலாம்" என்ற பொருளில் வருவது பின்வரும் பாடல் :

*"உடம்பெனும் மனைய கத்து*
*உள்ளமே தகளி யாக*
*மடம்படும் உணர்நெய் யட்டி*
*உயிரெனும் திரி மயக்கி*
*இடம்படு ஞானத் தீயால்*
*எரிகொள இருந்து நோக்கில்*
*கடம்பமர் காளை தாதை*
*கழலடி காண லாமே!"*[49]

என்று இறைவனின் திருவருளைப் பெறுதற்கான வழிமுறைகளைக் கூறும் நாவரசர்,

*"உள்குவார் உள்ளத் தானை*
*உணர்வெனும் பெருமை யானை*

*உன்கினேன் நாளும் காண்பான்*
*உருகினேன் ஊறி யூறி*
*எள்கினேன் எந்தை பெம்மான்*
*இருதலை மின்னு கின்ற*
*கொள்ளிமேல் எறும்பென் உள்ளம்*
*எங்ஙனம் கூடு மாறே!"*[50]

என இறைவன், தம் உள்ளத்துட் புகுந்து ஆண்ட திறத்தையும் கூறுகின்றார்.

சீவபோதம் முனைத்திருக்கும்போது, சிவபோதம் புலப்படாது; சிவபோதம் மேம்பட்டிருந்தால், சீவபோதமானது விளக்கின்முன் இருள் போல ஆற்றல் கெட்டொழியும். உயிரறிவு முனைத்திருக்குங்கால், ஆண்டுப் புலப்படாமல் இருந்த இறைவனது வியாபகநிலை, பண்டைத் தவத்தால் விளக்கமுற, அடியார்தம் உள்ளத்தே புகுந்தருளும். இவ் அருட்டிறம் உணர்ந்த அடிகள், 'உருகினேன் ஊறியூறி எள்கினேன்' என்று வியந்துரைக்கின்றார்.

எனவே, உலக வாழ்க்கையில் ஈடுபடும்போது, உயிரானது அத்தன்மையதாகவும்; இறையருளில் மூழ்கித் திளைக்கும்போது அதன் இயல்பிற்றாகவும் விளங்கும் எனும் உண்மை புலனாகும்.

அன்றியும், அப்பர் பெருமான்,

*"பழியுடை யாக்கை தன்னில்*
*பாழுக்கே நீர்இ றைத்து*
*வழியிடை வாழ மாட்டேன்*
*மாயமும் தெளிய கில்லேன்!*
*அழிவுடைத் தாய வாழ்க்கை*
*ஐவரால் அலைக்கப் பட்டுக்*
*கழியிடைத் தோணி போன்றேன்*
*கடவூர்வீ ரட்ட னீரே!"*

*"ஓம்பினேன் கூட்டை வாளா*
*உள்ளத்தோர் கொடுமை வைத்துக்*
*காம்பிலா மூழை போலக்*
*கருதிற்றே முகக்க மாட்டேன்!*
*பாம்பின்வாய்த் தேரை போலப்*
*பலப்பல நினைக்கின் றேனை*
*ஓம்பிநீ உய்யக் கொள்ளாய்*
*ஒற்றியூர் உடைய கோவே!"*

*"கால்கொடுத்து எலும்பு மூட்டிக்*
*கதிர்நரம்பு ஆக்கை யார்த்துத்*

*தோலுடுத்து உதிரம் அட்டித்*
*தொகுமயிர் மேய்ந்த கூரை*
*ஓலெடுத்து உழைஞர் கூடி*
*ஒளிப்பதற்கு அஞ்சு கின்றேன்!*
*சேலுடைப் பழனஞ் சூழ்ந்த*
*திருக்கொண்டீச் சரத்து ளானே!"*[51]

என மொழிவதும் இவண் கருதத்தகும்.

இவற்றையெல்லாம் உட்கொண்டே, மெய்கண்டாரும்,

*"யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலிற்*
*சத்தே யறியா தசத்தில தறியா*
*திருதிறன் அறிவுள திரண்டலா ஆன்மா"*[52]

என்று அருளினாராதல் வேண்டும்.

*"அறியாமை. உயிர்களுக்கு இயற்கையன்று! அஃது 'ஆணவம்' என்னும் இயற்கை மலத்தால் உயிர்களுக்குள்ள செயற்கையாகும். உடம்போடு கூடி உலகத்தில் வாழ்ந்துவரும் பிறப்பு நிலையில், உடம்பும் உலகும் அவ்வறியாமையை நீக்கி, அறிவை வளர்த்து வருவனவாக உள்ளன. இவ்வாறு அறியாமையினையும், முறையே வளர்ந்துவரும் சிற்றறிவு சிறுதொழில் என்பவற்றையும் உடையனவாய், 'யான், எனது' என்னும் செருக்கோடு கூடி, வினைகளைச் செய்து, அவற்றின் பயன்களை முதல்வன் ஆணையால் பெற்றனவே உயிர்கள்"*[53]

என்பர் க.வச்சிரவேல் முதலியார்.

உயிர்கள், வினைக்கு ஈடாக எடுக்கும் பிறப்புக்கள், நால்வகைத் தோற்றம், எழுவகைப் பிறப்பு, எண்பத்துநான்கு நூறாயிரம் யோனி பேதத்தையும் உடையன. எழுவகைப் பிறப்புக்களில் 'மனிதப் பிறவி'யே சிறந்தது. ஏனெனில், அதுவே, முதல்வனை அறிந்து, வழிபட்டு, வீடுபேறு அடைதற்குக் கருவியாக உளது.

இயற்கையிலே ஆணவ மலத்தால் பிணிப்புண்டு, அறிவும் செயலுமின்றிச் சடம் போலக் கிடந்த அனைத்துயிர்கட்கும் இறைவன், மாயையினின்றும் சூக்குமசரீரத்தைப் படைத்துக் கூட்டுவிப்பன்.

*"அந்தச் சூக்கும சரீரத்தைப் பெற்ற உயிர்கள். படலத்தால் மறைக்கப்பட்டு ஒளியிழந்த கண்களையுடைய குருடர். ஒருகோலைப் பெற்றது போன்ற நிலைமையை அடைந்து, மனம் ஒன்றே கருவியாக, விரும்புதல் வெறுத்தல்களைச்*

*செய்து, அதனானே முதற்கண் வினையைத் தேடிக் கொள்ள. அந்த வினைதான் உயிர்கள்தோறும் அவ்வவற்றிற்குள்ள அறிவுநிலை காரணமாகப் பலவகைப் படுதலான், அவற்றிற்கு ஏற்ற தூலசரீரங்களையும், புவன போகங்களையும், இறைவன் பின்னர்ப் படைத்துக் கொடுக்கப்பெற்று, மீண்டும் இறப்பும் பிறப்பும் ஆகிய சுழலிற் பட்டுச் சுழல்வவாயின"*[54]

என உயிர்களின் முதற் பிறப்பு முறை பற்றி விளக்கந் தருவர் சி. அருணை வடிவேலு முதலியார்.

'வினைப் பயனாலே பிறவி உண்டாதல்' குறித்து நாவரசர்,

*"கழித்திலேன் காம வெந்நோய்*
*காதன்மை என்னும் பாசம்*
*ஒழித்திலேன் ஊன்கண் நோக்கி*
*உணர்வெனும் இமைதி றந்து*
*விழித்திலேன் வெளிறு தோன்ற*
**வினையெனும் சரக்குக் கொண்டேன்**
*அழித்திலேன் அயர்த்துப் போனேன்*
*அதிகைவீ ரட்ட னீரே!"*

*"பிணிவிடா ஆக்கை பெற்றேன்*
*பெற்றம்ஒன்று ஏறு வானே*
*பணிவிடா* **இடும்பை என்னும்**
**பாசனத்து அழுந்து கின்றேன்**!"[55]

என்பனவற்றால் குறிப்பிடுவர். வினையால் நிகழும் செயலினைக் குறித்து நாவரசர்,

*"பத்தனாய் வாழமாட்டேன் பாவியேன் பரவிவந்து*
*சித்தத்துள் ஐவர்தீய செய்வினை பலவும் செய்ய*
*மத்துறு தயிரே போல மறுகும்என் உள்ளம்தானும்*
*அத்தனே! அமரர்கோவே! ஆரூர்மூ லட்டனீரே!"*

என்று கூறுவதனோடமையாது, இவ்வினைத்துன்பம் தீர்த்தருளிய பெருந்தகையும் இறைவனே என்கின்றார்:

*"பண்டைஎன் வினைகள் தீர்ப்பார்"*

*"உடலின் வினைகள் அறுப்பாய் போற்றி"*

*"வெய்ய வினைப்பகையும் பைய நையும்"*[56]

என்பன அவர் அருள்மொழிகள்.

மனித்தப் பிறப்பு ஒன்றினாலேயே, முதல்வனை அறிந்து, வழிபட்டு, அவனடி அடைய முடியும் என்பதை நாவுக்கரசர்,

*"வாய்த்தது நந்தமக்கு ஈதுஓர்*
*பிறவி மதித்திடுமின்!"*

*"மனித்தப் பிறவியும் வேண்டுவ*
*தேஇந்த மாநிலத்தே!!"*[57]

என்று கூறுபவர், ஒருகால் மனித்தப் பிறவியின்றி வேறு பிறவி கிடைத்தாலும், 'இறைவா! உன் திருவடி என் மனத்தே பதிந்திருக்க வேண்டும்' என முறையிடுகின்றார்:

*"புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா*
*உன்னடி என்மனத்தே*
*வழுவா திருக்க வரந்தர*
*வேண்டும்!"*[58]

என்பது அவரது வேண்டுகோள்!

இங்குக் கூறிய அனைத்தும் உள்ளடக்கியனவாக விளங்குவன, பின்வரும் சைவசித்தாந்தச் சாத்திரநூற் பகுதிகள்:

*"இருவினையின் போக்குவரவு புரிய"*

*"வித்துண்டா மூலம் முளைத்தவா!"*[59]

*"..............வினையிரண்டும்*
*காட்டி, அதனால் பிறப்பாக்கி....."*[60]

*"அண்டசஞ் சுவேத சங்க ஞற்பிச்சஞ் சராயு சத்தோ*
*டெண்டரு நாலெண் பத்து நான்குநூ றாயிரத்தால்*
*உண்டுபல் யோநி யெல்லா மொழித்துமா நுடத்து தித்தல்*
*கண்டிடிற் கடலைக் கையா னீந்தினன் காரி யங்காண்!"*[61]

*"எண்ணரிதாய் நித்தமாய் இருள்மலத்தின் அழுந்தி*
*இருவினையின் தன்மைகளுக் கீடான யாக்கை"*[62]

*"அன்றளவும் ஆற்றும்உயிர் அந்தோ அருள்தெரிவ(து)*
*என்றளவொன் றில்லா இடர்"*[63]

## மூவகை அவத்தைகள்

உயிர், தூல சித்தாதலால், அஃது இயல்பாகவே, பாசத்தால் கட்டுண்டு கிடத்தல் அதனின் 'பொது இயல்பு' ஆகும். இந்நிலை, ஒரு காலத்தில் நீங்கக்கூடியதே. உயிரானது, ஆணவமலத்தோடு மட்டும் இருக்கும் நிலை; பின்பு, மாயை, கன்மங்களோடு இருக்கும் நிலை; அடுத்து,

இம் மும்மலங்களும் நீங்கப்பெற்று, இறைவன் திருவடியில் இன்புற்றிருக்கும் நிலை எனும் இம் மூவித நிலைகளை யுடையது. இந்நிலைகளை 'அவத்தைகள்' என்று கூறுவர்.

உயிரானது, ஆணவமலத்தோடு மட்டும் இருக்கும் நிலை, 'கேவலம்' எனப்படும்; கேவலம் - தனிமை. இந்நிலையில் உயிருக்கு, 'அறிவு, இச்சை, செயல்' இல்லை; உடம்பும் இல்லை; உட்கருவி செயல்களாகிய 'மனம்' முதலியனவும் இல்லை. எனவே வினைகளை ஈட்டுதல் என்பதுவுமில்லை; இன்ப துன்பங்களை நுகர்வதுமில்லை. அறியாமையே வடிவமாய்க் கிடக்கும் இந்நிலைக்கு 'இருள்நிலை' என்று பெயர்.

இருள்நிலையாகிய 'கேவலத்'தில் மூழ்கிக் கிடக்கும் கொடுமை கண்டு, முதல்வன், கழிவிரக்கங் கொண்டு கருணை காட்டுவன். ஆணவ மலத்தைப் போக்குதற்பொருட்டு, 'மாயை, கன்மம்' எனும் மலங்களைக் கூட்டுவிப்பன். அதனால், உயிரானது, உடல் - பொறி - கரணங்கள் ஆகியன பெற்று, 'விண், மண், பாதலம்' என்னும் மூவுலகங்களிலும் பல்வகைப் பிறப்பு மெடுத்து உழலும். இந்நிலைக்குச் 'சகலம்' என்று பெயர். சகலம் - கலையோடு கூடுதல். இதனை 'மருள்நிலை' என்றும் கூறுவர்.

இவ்வாறு பிறக்கும் உயிரானது, இன்ப துன்பங்கட்கு ஆட்பட்டு, விருப்பு வெறுப்புக்களை அடைகின்றது. பழநிலைகளால் உயிர் மேம்படும் நிலை வருங்கால், முதல்வனே குருவாகி வந்து, மெய்யுணர்வு நல்குவன். இதனால், உயிரானது, 'மலபரிபாகம்' பெற்று, முதல்வனது திருவடிப்பேறு எய்துகிறது. இந்த நிலையைச் 'சுத்தம்' அல்லது 'அருள்நிலை' என்பர்.

இங்ஙனம் அளவற்ற உயிர்கள் பலவும், மூன்று வகையினவாய் உள்ளன என்பது சித்தாந்தம்.[64]

**மூவகை உயிர்கள்**

உயிர்களுள், 'ஆணவம், கன்மம், மாயை' ஆகிய இம்மூன்று மலங்களும் உடைய உயிர்கள் 'சகலர்' என்றும்; 'ஆணவம், கன்மம்' எனும் இரண்டு மட்டுமே உடைய உயிர்கள், 'பிரளயாகலர்' என்றும், 'ஆணவம்' ஒன்று மட்டுமே உடைய உயிர்கள் 'விஞ்ஞானகலர்' என்றும் கூறப்பெறும்.

இவ்வாறு உயிர்கள் பல நிலைகளை அடைவதற்கு, 'மலத்' தொடர்பே காரணம்; எனவே மேற்கூறியனவனைத்தும் அவற்றின் 'பொதுவியல்பு' ஆகிய 'தடத்த இலக்கணம்' எனப்படும்.[65]

இதனைத் திருநாவுக்கரசர்,

"**மலந்தாங் குயிர்ப்பிறவி** *மாயக்காய*
*மயக்குளே விழுந்தழுந்தி நாளும் நாளும்*
*அலந்தேன்!*"[66]

என்று குறிப்பிடும் அருமைத் திருப்பாட்டால் உணரலாம். 'மலம்' என்பது ஈண்டு 'ஆணவமலத்'தைக் குறிப்பதாகும்.

"**மலங்களை** *மாற்ற வல்லார்*"[67]

எனப் 'பன்மை'யில் கூறுவது கொண்டு, மும்மலங்களையுடைய 'சகலரை'க் குறித்ததாகக் கருத இடமுண்டு.

"*தீவினைச் சுற்றம்*"[68]

என்றும்; 'அருவினை, வல்வினை, மேல்வினை, பழவினை' என்றும் பல்வேறு பாடல்களில் 'கன்மமா'கிய வினையைக் குறிப்பிடுகின்றார் நாவரசர்.

மேலே கூறிய மூவகை உயிர்களில், 'விஞ்ஞானகலர்', 'பிரளயாகலர்' இவ்விருவர்க்கும் சிவபெருமான், தானே 'தீக்கை'யைச் செய்தருளுவன். அதனால், அதற்கு 'நிராதர தீக்கை' என்று பெயர். இவருள்ளும், விஞ்ஞானகலருக்குப் புறத்துத் தோன்றுதலின்றி, உயிர்க்குயிராய் உள்நின்றே செய்வன். அவ்வாறு செய்தல், 'தன்மையில் நின்று அருள்புரிதல்' எனப்படும். உண்மை ஞானத்தை அருளுவதாகிய தீக்கையைச் சிவபெருமான் அதனைப் பெறுதற்குரியோரது 'சத்தி நிபாதநிலை'யை நோக்கியே செய்வன். சத்தி - அருட்சத்தி; நிபாதம் - பதிதல். விஞ்ஞானகலர், பிரளயாகலர் இவ்விருவர்க்கும், 'சத்தி நிபாதம்', 'தீவிரம், தீவிரதரம்' என்ற வகையில் நிகழும். இவற்றுள், 'தீவிரதர சத்தி நிபாதம்' உடையவர்க்குச் செய்யும் 'ஞான தீக்கை' அனைத்துலகங்களையும் கடந்து, பரமசிவனோடு இரண்டறக் கலக்கும் பரமுத்தினையே கொடுக்கும்.[69]

நாவுக்கரசர், தொடக்கத்தில், புறச்சமயம் சார்ந்தமையால் சிவபெருமானின் ஞானப்பேறு கிட்டவில்லை. இதனை அவரே,

*"பற்றிலா வாழ்க்கை வாழ்ந்து*
*பாழுக்கே நீர் இறைத்தேன்!*
*உற்றலால் கயவர் தேறார்*
*என்னும்கட் டுரையோடு ஒத்தேன்!*
*எற்றுளேன் என்செய் கேனான்*
*இடும்பையால்* **ஞானம் ஏதும்**
**கற்றிலேன்** *களைகண் காணேன்*
*கடவூர்வீ ரட்டனீரே!"*[70]

என்று வருந்துவதால் அறியலாம். பின்னர் இறைவன், நாவுக்கரசர்பால் பேரருள் கொண்டு ஞானநிலை காட்டினன்.

*"நங்கையைப் பாகம் வைத்தார்*
**ஞானத்தை** *நவில வைத்தார்"*

"ஞானம் காட்டுவர் நன்னெறி காட்டுவர்"

"முன்னை ஞான முதல்தனி வித்தினைப்
பின்னை ஞானப் பிறங்கு சடையனை
**என்னை ஞானத்து இருள்அறுத்து ஆண்டவன்**
தன்னை ஞானத் தளையிட்டு வைப்பனே!"[71]

- இவ்வாறு கூறும் நாவரசர் இறைவன் தமக்குத் 'திருவடி தீக்கை' அருளிச் செய்த பான்மையை நினைந்து நினைந்து உருகிப் பாடுகின்றார்.

நாவரசர், தமக்குத் 'திருவடி தீக்கை' புரிந்தருளுமாறு இறைவனை வேண்டினார்; ஆண்டவனும், 'திருநல்லூருக்கு வா' என்று பணித்தனன். அவ்வாறே திருநல்லூரில் ஈசன், திருநாவுக்கரசரின் தலைமீது தன் திருவடித் தாமரை மலர்களைச் சூட்டியருளினன்.

"கோவாய் முடுகி அடுதிறற்
கூற்றம் குமைப்பதன்முன்
பூவார் அடிச்சுவடு என்மேற்
பொறித்துவை! போகவிடில்
மூவா முழுப்பழி மூடும், கண்
டாய்'முழங் கும்தழற்கைத்
தேவா! திருச்சத்தி முற்றத்து
உறையும் சிவக்கொழுந்தே!"[72]

என்பது நாவரசரின் வேண்டுகோட் பதிகம்.

"பாம்புரிஞ்சி மதிகிடந்து திரைக ளேங்கப்
பனிக்கொன்றை சடைவைத்தார் பணிசெய்வானோர்
ஆம்பரிசு தமக்கெல்லாம் அருளும் வைத்தார்
அடுசுடலைப் பொடிவைத்தார் அழுதும் வைத்தார்
ஓம்பரிய வல்வினைநோய் தீர வைத்தார்
உமையொரு பால்வைத்தார் உகந்து வானோர்
**நாம்பரவும் திருவடியென் தலைமேல் வைத்தார்**
நல்லூ ரெம் பெருமானார் நல்ல வாறே!"[73]

என்பது, இறைவனின் திருவடி சூட்டப்பெற்ற விந்தையைக் கூறும் பாட்டாம்.

அந்நிலையினும், தனது **வன்மையான** தலையின்மீது, இறைவனின் தாமரை போன்ற **மென்மையான** திருவடி பட்டதனால், அப்பெருமானின் மென்மலரடி வருந்துமே என்று தாம் வாடினதாகவும் அப்பர் உரைக்கின்றார்.

"............மூர்த்திஎன் உச்சி தன்மேல்
வைத்தகால் வருந்தும் என்று
வாடிநான் ஒடுங்கி னேனே!"[74]

என்று கூறுவது, இறைவன்பால் அப்பர் கொண்டிருந்த அளவிலாப் பத்திநிலையைப் புலப்படுத்துவதாம்.

மேலே கூறிய கருத்துக்களுக்கு அரண் செய்வனவாக அமைந்துள்ளன, பின்வரும் சாத்திரநூற் கருத்துக்கள்:

*"கேவல சகல சுத்த மென்றுமூன் றவத்தை யான்மா*
*மேவுவன் கேவ லத்தின் னுண்மைமெய் பொறிக ளெல்லாங்*
*காவலன் கொடுத்த போது சகலனா மலங்க ளெல்லாம்*
*ஓவின போது சுத்த முடையனுற் பவந்து டைத்தே!"*

*"உரைதருமிப் பசுவர்க்க முணரின் மூன்றா*
*முயரும்விஞ் ஞானகலர் பிரளயாகலர் சகலர்*
*நிரையின்மல மலங்கன்ம மலங்கன்ம மாயை*
*நிற்குமுத லிருவர்க்கு நிராதார மாகிக்*
*கரையிலருட் பரன்றுவிதா சத்திநிபா தத்தாற்*
*கழிப்பன்மலஞ் சகலர்க்குக் கன்ம வொப்பிற்*
*றரையிலா சான்மூர்த்தி யாதார மாகித்*
*தரித்தொழிப்பன் மலஞ்சதுர்த்தா சத்திநிபா தத்தால்!"*[75]

என்பன சித்தியாரில் வருவன.

திருவருட்பயனில் வரும்,

*"திரிமலத்தா ரொன்றதனிற் சென்றார்க ளன்றி*
*யொருமலத்தா ராயு முளர்"*

*"மூன்றுதிறத் துள்ளா மூலமலத் துள்ளார்கள்*
*தோன்றலர்தொத் துள்ளார் துணை"*[76]

எனும் பாடல்களும்;

சிவப்பிரகாசத்தில் வரும்,

*"மூவகையா ருயிர்வருக்க மலத்தார் கன்ம*
*மூலமலத் தார்மூன்று முடையா ரன்றே!"*[77]

எனும் பகுதியும் இவண் ஒப்புநோக்கத்தக்கன.

மெய்கண்டாரும்,

*"மெய்ஞ்ஞானந் தானே விளையும்விஞ் ஞானகலர்க்*
*கஞ்ஞான அச்சகலர்க் கக்குருவாய் - மெய்ஞ்ஞானம்*
*பின்னுணர்த்து மன்றிப் பிரளயா கலருக்கு*
*முன்னுணர்த்துந் தான்குருவாய் முன்!"*[78]

என்று அருளிச் செய்தார்.

ஞானசம்பந்தர்,

*"அவ்வினைக் கிவ்வினை யாமென்று சொல்லுமஃதறிவீர்
உய்வின்ன நாடாதிருப்பது முந்தமக் கூனமன்றே
கைவினை செய்தெம் பிரான்கழல் போற்றுதும் நாமடியோம்
செய்வினை வந்தெமைத் தீண்டப்பெறா திருநீலகண்டம்"*[79]

என்றும்;

சுந்தரர்,

*"உறையுமா றறிகிலேன் எம்பெருமானை
உலகறி பழவினையற வொழித்தானை"*[80]

என்றும்;

மணிவாசகர்,

*"வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று
போதுநான் வினைக்கேடன் என்பாய் போல"*[81]

என்றும் கூறுவன, இவண் ஒப்பிடத்தகுவன.

## முதல்வன் செய்யும் 'உபகாரம்'

முதல்வன், உயிர்களோடு என்றும் பிரிப்பின்றி இயைந்து நிற்கின்றான். பிரிந்து நில்லாத அவ்வுறவே 'அத்துவிதம்' எனப்படும். முதல்வன், உயிர்களோடு அத்துவிதமாய் நின்று, இவை, பொருள்களை அறிந்து நுகரும்படிச் செய்கின்றான். அவ்வாறு செய்யும் அவனது செயல் 'காட்டும் உபகாரம்' என்றும், 'காணும் உபகாரம்' என்றும் இருவகையில் வைத்துப் பேசப்படும்.

### (அ) காட்டும் உபகாரம்

கண்ணொளி, தானே சென்று பொருள்களைக் காணமாட்டாது; தனியே சென்று காணும் ஆற்றலிருப்பின், அஃது, இருளின்கண்ணும் பொருளைக் காணுதல் வேண்டும்; அஃது இயலாது. ஆதலின், கண்ணொளி, தானாக ஒரு பொருளைக் காணமாட்டாது என்பது தெளிவு. எனவே, 'விளக்கொளி' போன்ற வேறோர் ஒளியின் துணை வேண்டப்படும். வேறோர் ஒளியோடு கூடியபோதே, கண்ணொளி விளங்கிப் பொருளைக் காணும் நிலை பெறுகிறது. கண்ணுக்குக் கூறுவது உயிருக்கும் பொருந்தும். உயிரினது அறிவும், கண்ணொளி போல, ஒரு துணையைப் பெற்றே அறியவல்லது. அதனாலேயே இறைவன், உயிரோடு இயைந்து நின்று, அதன் அறிவை விளக்கி வருதல் இன்றியமையாததாகின்றது. முதல்வனது அறிவு, உயிரினது அறிவில் கலந்து நின்று, அதனது அறியாமையை நீக்கி, அதனை

விளக்கி, எத்னையும் அறியும் தகுதியைப் பெறச் செய்கிறது. இதனையே, 'காட்டும் உபகாரம்' என்பர்.

## (ஆ) காணும் உபகாரம்

விளக்கொளி, கண்ணொளியில் மட்டும் பொருந்தி நின்றாற் போதாது; கண்ணாற் காணப்படும் பொருளிலும் அவ்வொளி சென்று பொருந்துதலும் வேண்டும். அஃதாவது, விளக்கின் ஒளி, பார்க்கப்படும் பொருளிலும் பொருந்தி நிற்றல் இன்றியமையாததாம். அப்போதுதான், கண்ணொளி, பொருளைக் காண முடியும். அதைப்போல, இறைவன், உயிரினது அறிவை விளக்கி, அறியும் நிலைமையை உண்டாக்குதற்குரிய 'காட்டும் உபகாரத்'தை மட்டும் செய்தாற்போதாது; அவ் அறிவு சென்ற பொருளை அறிதற்கு, இறைவன் தானும் உடனாக நின்று, அப்பொருளை அறிதல் வேண்டும். இவ்வாறு உயிரினது அறிவு, பொருள்களை அறியும்படி இறைவனும் அதனோடு உடன்நின்று அவற்றை அறிதலே 'காணும் உபகாரம்' எனப்படும்.[82]

திருநாவுக்கரசர், இவ்விரண்டு 'உபகாரங்கள்' பற்றியும் ஆங்காங்கே குறிப்பிடுகின்றார் :

*"...........என் உள்ளம் மகாயில் ஆக்கி*
*அன்பிருத்தி அடியேனைக் கூழாட் கொண்டு*
*... செய்த ஆரூரர்"*

*.... ஈல்தலையில்*
*தெளித்துத்தன் பாதம் காட்டிடத்*
*தொண்டெலாம் இசைபாடத் தூமுறுவல்*
*அருள்செய்யும் ஆரூரரை"*

*"காட்டுவித்தால் ஆரொருவர் காணாதாரே!"*

*"............கள்வனேன்தன்*
*ஆவியைப் போகாமே தவிர்த்தென்னை*
*ஆட்கொண்ட ஆரூரரை"*

*"அடுக்கற்கீழ்க் கிடக்கினும் அருளின் நாம்உற்ற*
*நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சி வாயமே!"*

*"வஞ்சனைப் பாற்சோ றாக்கி*
*வழக்கிலா அமணர் தந்த*
*நஞ்சமுது ஆக்குவித்தார்*
*நனிபள்ளி அடிகளாரே!"*

*"குறுவித்த வாகுற்ற நோய்வினை*
*காட்டிக் குறுவித்த நோய்*

உறுவித்த வாவுற்ற நோய்வினை
திர்ப்பான் உகந்தருளி
அறிவித்த வாறடி யேனைஐ
யாறன் அடிமைக்களே
செறிவித்தவா தொண்ட னேனைத்தன்
பொன்னடிக் கீழ்எனையே!"[83]

என நாவுக்கரசர் நவில்வன, இறைவனின் 'காட்டும் உபகாரத்'தைக் குறிப்பனவாம்.

"பந்தமாய் வீடும் ஆகிப்
பரம்பர மாகி நின்று
சிந்தையுள் தேறல் போலும்
திருச்சோற்றுத் துறைய னாரே!"

"ஈசன் ஈசன்என் றென்றும் அரற்றுவன்
ஈசன் தான்என் மனத்திற் பிரிவிலன்
ஈசன் தன்னையும் என்மனத்துட் கொண்டு
ஈசன் தன்னையும் யான்மறக் கிற்பனே!"

"ஆரொருவர் உள்குவார் உள்ளத் துள்ளே
அவ்வுருவாய் நிற்கின்ற அருளுந் தோன்றும்!"

"உள்குவார் உள்கிற் றெல்லாம்
உடனிருந்து அறிதி!"[84]

என்று அடிகள் அருளிச் செய்தவை, 'காணும் உபகாரத்'திற்குச் சான்றுகளாம்.

இங்குக் கூறிய 'காட்டும் உபகாரம்', 'காணும் உபகாரம்' இவற்றை அருளாளர்களும் எடுத்துக் கூறியுள்ளனர்.

"பண்ணும்பத மேழும்பல வோசைத் தமிழவையும்"[85]

என ஞானசம்பந்தரும்;

"முத்தியும் ஞானமும் வானவ ரறியா
முறைமுறை பலபல நெறிகளும் காட்டிக்
கற்பனைக் கற்பித்த கடவுளை யடியேன்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே!"[86]

எனச் சுந்தரரும்;

"காட்டா தனவெல்லாங் காட்டிப் பின்னும்
கேளா தனவெல்லாம் கேட்பித்து"

*"எவ்வெவர் தன்மையும் தன்வயிற் படுத்துத்*
*தானே யாகிய தயாபரன்"*[87]

என மணிவாசகரும்;

*"அறிவானுந் தானே அறிவிப்பான் தானே*
*அறிவாய் அறிகின்றான் தானே அறிகின்ற*
*மெய்ப்பொருளுந் தானே விரிசுடர்பார் ஆகாயம்*
*அப்பொருளும் தானே அவன்!"*[88]

எனக் காரைக்காலம்மையாரும் கூறியன ஒப்புநோக்கத் தகும்.

இவ் உபகாரங்கள் குறித்து மெய்கண்டார்,

*"காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம்போற்*
*காணஉள் ளத்தைக் கண்டு காட்டலின்....."*[89]

என்பதால் குறிப்பிடுவர்.

*"காயமொழிந் தாற்சுத்த னாகி யான்மாக்*
*காட்டக்கண் டிருந்தன்மை யுடைய கண்ணுக்*
*கேயுமுயிர் காட்டிக்கண் டிடுமா போல*
*ஈசனுயிர்க் குக்காட்டிக் கண்டிடுவன்!"*
*"......சிவனே யெல்லா மறிந்தறி வித்து நிற்பன்!"*[90]

எனச் சித்தியாரில் வருவனவும் நோக்கத்தகும்.

**கடல் கடந்தேறிய காவலர்**

'சம்பந்தர், அப்பர், சுந்தரர், மணிவாசகர்' இந்நால்வரினும், இவ்வுலகத்தே நீண்டநாள் வாழ்ந்து, பெருந்துன்பத்திற் காளானவர் நாவுக்கரசர். திருஞானசம்பந்தர், தமது மூன்றாம் வயதிலேயே 'ஞானப்பால்' அருந்தியவராதலின், அவரது வாழ்க்கை முழுவதுமே இன்பமாய்ப் பிறங்கியது; சுந்தரர், இரு மனைவியரைக் கொண்டு இல்லறமேற்றவரேயாயினும், இறைவன் திருமுன்னர்ச் 'சூள்' பொய்த்தமையால் கண்ணொளி இழந்து, சிறிது காலம் துன்பப்பட நேர்ந்தது. மணிவாசகர், பாண்டியனது கட்டளைக்கு மாறாகக் குதிரை வாங்குதற்குரிய பொருளை, இறைவனது திருப்பணிக்காகச் செலவிட்டமையால், அரசனின் சினத்திற்கு ஆளாகிச் சிறிது துன்பமுறலானார். ஆனால் நாவுக்கரசரோ, இளமையில் தம் பெறற்கரிய பெற்றோர்களை இழந்த துன்பம்; தம்முடன் தோன்றிய தமக்கையாராம் திலகவதியாருக்கெனப் பேசப்பெற்ற மணமகனாம் கலிப்பகையாரும் போர்க்களத்திற்குச் சென்றவர் புகழுடம்பு எய்தினார்; எனினும் திலகவதியார் அவரையே கணவராகக் கருதிய உள்ளத்தவராயிருந்தமையால், 'அம்பொன் மணிநூல் தாங்காது', தம்

தம்பிக்காக உயிர் வாழ்ந்தார். எனினும் அக்காலத்தில், பெண்ணாகப் பிறந்தவா, அதுவும் தனித்த வாழ்க்கையினா், தம் தம்பிக்காக எவ்வுதவியும் செய்ய இயலாத நிலை. இந்தச் சூழலில், நாவுக்கரசருக்கு 'வாழ்க்கை நிலையாமை' தோன்றியது; ஆதலின் 'சமயங்கள் ஆனவற்றின் நல்லாறு' தெரிந்துணரும் வேட்கை கொண்டார்; 'சிவபெருமானின் அருள்' இல்லாமையால், 'கொல்லாமை மறைந்துறையும் அமண் சமயம் குறுகினார்'. பின்னர் இறைவனதருளால் 'சூலை' நோய் வரப்பெற்றுத் தமக்கையாரை நாடிவரத் திருவதிகை வீரட்டானத்துறை அம்மான் கருணையால் நோய் நீக்கம் பெற்றார்.

தாம் புறச்சமயம் சார்ந்தமைக்கான காரணங்களைத் தம் பாடல்களில் குறிப்பிட்டுள்ளார் நாவுக்கரசர்.

*"காத்தாள்பவர் காவல் இகழ்ந்தமையால்"*

*"மனைவாழ்க்கையும் ஒண்பொருளும்*
*ஒருவர்தலை காவல் இலாமையினால்"*

*"ஒருவர்துணை யாரும் இல்லை!"*

*"விதியின்றி மதியிலியேன்!"*[91]

என்று பலவிடங்களிலும் தம் முன்னைய வரலாற்றை மொழிகின்றார்.

இவ்வாறு, மீண்டும் சைவ சமயத்திற்குத் திரும்பிய நிலை கண்ட சமணர்கள், தம் அரசனது உதவியால், சொல்லொண்ணாத் துன்பங்களை நாவரசருக்கு இழைத்தனர். அனைத்தினின்றும் சிவபெருமான் திருவருட்டுணையால் உய்வு பெற்றார் நாவரசர். மனம் பொறுக்காத மாற்றுச் சமயத்தினர், மன்னனின் துணைகொண்டு, நாவரசரைக் கல்லோடு இறுகப் பிணித்து ஆழ்கடலில் தள்ளினர். நாவரசரோ, பற்றற்றான் பற்றினை இறுகப் பற்றி நின்றவராதலின், அவனின் திருவைந்தெழுத்தினை ஓதிக் கொண்டே அக்கடலினின்றும் கரையேறினார். உலகத்தில் வேறெங்கும் காணமுடியாத அரிய விந்தைச் செயல் இது!

*"சொற்றுணை வேதியன் சோதி வானவன்*
*பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்*
*கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்*
*நற்றுணை யாவது நமச்சி வாயவே!"*[92]

என்பது நாவரசர் பாடி உய்ந்த திருப்பதிகம்!

இவ் அரிய நிகழ்ச்சி குறித்து வை.இரத்தினசபாபதி கூறுவது இங்குச் சுட்டத்தகும்:

"கல்லிற் கட்டிக் கடலில் இட்டபோது. அவைகள் தெப்பமாக மாறி அவரை (நாவரசரை)க் கரையேற்றின. இதனால் அவர், சிவபரம்பொருளைத் தன்னுட் கொண்ட காரணத்தால், தன்னை மாற்றிக் கொண்டார் என்பதோடு நிறுத்திவிடாமல், திருநாவுக்கரசரைச் சார்ந்த தீயபொருளுங்கூடத் தீமை நீங்கி நனமையாந் தன்மையுடன் விளங்கும் மாற்றத்தை அருளும் அற்புதப் பேராற்றலைக் 'கைத்திருத்தொண்டு' ஒன்றனாலேயே அமைத்துப் பெரும் பேறு பெற்றார் இககருத்தை உணர்ந்து கொள்ளும் நிலையிலேயே அவாதம் பெற்றோர் அவருககிடட இயற்பெயர் அமைகிறது. 'மருள் **நீக்கியார்**' என்ற பெயரின் மூலம் அவர் தம்முடைய மாசுதனை நீக்கினார் என்று மட்டுமே கொள்ள முடியாது. 'மருள் **நீங்கியார்**' என்றில்லாமல். பிற பொருள்களின் மாசுதனையும் தீர்க்கும் நீக்கும; நீககியதோடன்றி நன்மையுடையதாக ஆக்கும் நிலை பெற்றவர் என்ற போக்கிலேயே 'மருள் நீக்கியார்' என்ற பெயர் அமைக்கப் பெறுகிறது'"[93]

"அப்பர் பெருமானைக் கடலில் தள்ளினார்" என்று தம் திருவாயால் கூறுதற்குக் கூசிய சேக்கிழார்,

"பவ்வத்தில் மன்னவன் **சொன்ன படிமுடித் தார்**.அப் பதிதர்'"[94]

என்பர். ஆழ்கடலில் தள்ளப்பட்ட அப்பர் பெருமானோ, சிறிதும் மனம் கலங்காதவராய்,

"எப்பரி சாயினும் ஆக ஏத்துவன் எந்தையை என்று
செப்பிய **வண்டமிழ்** தன்னால் **சிவன்அஞ் செழுத்தும்**
துதிப்பார்'"[95]

ஆயினர். நாவரசர், கல்லையே தெப்பமாகக் கொண்டு கரையேறிய விந்தை நிகழ்ச்சியைச் சேக்கிழார் சொல்லும் திறம் வருமாறு:

"இருவினைப் **பாசமும் மலக்கல்** ஆர்த்தலின்
வருபவக் கடலில்வீழ் மாக்கள் ஏறிட
அருளுமெய் அஞ்செழுத் தரசை இக்கடல்
ஒருகல்மேல் ஏற்றிடல் உரைக்க வேண்டுமோ?"[96]

இதற்குக் கி.வா. சகந்நாதன் கூறும் உரை வருமாறு:

"புண்ணியம். பாவம் என்னும் இரண்டு வினைகளாகிய பாசபந்தமும். ஆணவம் கன்மம் மாயை என்னும் மூன்று மலங்களாகிய கருங்கல் கட்டுவதனால், இந்த உலகத்தில்

*வரும் பிறவியாகிய சமுத்திரத்தில் விழுந்த அறிவில்லாத மனிதர்கள் கரையேறத் திருவருளை வழங்கும் உண்மையாகிய 'ந.ம.சி.வா.ய' என்னும் ஐந்து எழுத்துக்களும் அடங்கிய பஞ்சாட்சரம். திருநாவுக்கரசு நாயனாரை இந்தச் சமுத்திரம் ஒரு கருங்கல்லின் மேல் ஏறுமாறு புரிதலைச் சொல்லவும் வேண்டுமோ!"*[97]

நாவுக்கரசர் பல்வேறு திருத்தலங்கட்கும் சென்று பரமனின் புகழ் பாடிப் பரவுகின்றார். அவர் அருளிய பதிகங்கள் அனைத்திலுமே, சைவ சித்தாந்தக் கருத்துக்கள் சுடர்விட்டு மிளிர்கின்றன எனலாம்.

இறைவனின் பேரருளுக்கு ஆட்பட்ட வித்தகராம் நாவுக்கரசர், "இனி உன்னை விடமாட்டேன்; அன்பால் அணைத்துக் கொண்டேன்" என்பாராய்,

> *"நிழலார் சோலை நெடுங்களத்து நிலாயநித்த மணாளனை*
> *அழலார் வண்ணத்து அம்மானை அன்பில்*
> *அணைத்துவைத்தேனே!"*[98]

என்பர். சுவைமிக்க உணவை உட்கொள்ளுதலைப் போல, ஈசனைத் தம் நெஞ்சிற் பதிய வைத்துக் கொண்ட மாண்பினைக் குறிப்பிடுங்கால்,

> *"மேலை வானோர் பெருமானை*
> *விருபபால் விழுங்கி இட்டேனே!"*[99]

என்பர். 'இடுதல்' என்பது உயிர்க்குப் பேரின்பத்தை உண்டாக்கிய சிறப்பினைக் குறிப்பதாம்.

இத்தகு இறைவனின் திருவடி தொழாமல் காலத்தை வீணாகக் கழித்தமைக்கு இரங்கிப் பாடும் பாட்டொன்று.

> *"மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த*
> *மேனியான் தாள் தொழாதே*
> *உய்யலாம் என்றெண்ணி உறிதூக்கி*
> *உழிதந்தென் உள்ளம் விட்டுக்*
> *கொய்யுலா மலர்ச்சோலை குயில்கூவ*
> *மயில்ஆலும் ஆரூ ரரைக்*
> *கையினால் தொழாதுஒழிந்து கனியிருக்கக்*
> *காய்கவர்ந்த கள்வ னேனே!"*[100]

என்பது அது!

இறைவன், 'தலை' முதலான உறுப்புக்களைத் தந்தருளியதன் நோக்கம், அவனை 'வணங்குதல்' முதலாயின செய்வதற்கே என்பதைத்,

> *"தலையே நீவணங்காய்"*[101]

எனும் பதிகத்தின் மூலம் உணர்த்துகின்றார் நாவரசர்.

'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்பதற்கேற்ப நாவரசர், தாம் பெற்ற இறையருளை உலகவரும் பெறவேண்டும் என்ற எண்ணத்தால், மக்களை விளித்துப் பல பாடல்கள் பாடுகின்றார். அவற்றுள் ஒன்று:

*"ஊனையே கழிக்க வேண்டில்*
*உணர்மின்கள் உள்ளத் துள்ளே*
*தேனைய மலர்கள் கொண்டு*
*சிந்தையுள் சிந்திக் கின்ற*
*ஏனைய பலவு மாகி*
*இமையவர் ஏத்த நின்று*
*ஆனையின் உரிவை போர்த்தார்*
*அதிகைவீ ரட்ட னாரே!"*[102]

"பிறவி நீங்க வேண்டுமானால், ஈசனைச் சிந்தித்து ஏத்த வேண்டும்; அவனே சிந்தையில் தோன்றுகின்ற எல்லாமாயும் விளங்குபவன்!" என்ற கருத்து இதில் உணர்த்தப்பட்டுள்ளது.

இறைவனை வணங்குதற்குரிய எளிய வழியையும் கூறுகின்றார் நாவரசர்:

*"காயமே கோயி லாகக்*
*கடிமனம் அடிமை யாக*
*வாய்மையே தூய்மை யாக*
*மனமணி இலிங்க மாக*
*நேயமே நெய்யும் பாலா*
*நிறையநீர் அமைய ஆட்டிப்*
*பூசனை ஈச னார்க்குப்*
*போற்றவிக் காட்டி னோமே!"*[103]

என்பது அகப்பூசனை வழிபாடாம்.

உயிரானது, ஈசனின் திருவடியிற் கலந்து மேவி நிற்கும் ஆரா அன்பின் திறத்தை, அகப்பாடல்கள் வாயிலாக நாவுக்கரசர் உணர்த்துவர். அவற்றில் ஓர் அருமையான திருப்பாட்டு:

*"முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள்*
*மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்*
*பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்*
*பெயர்த்தும் அவனுக்கே பிச்சி யானாள்*
*அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்*
*அகன்றாள் அகலிடத்தார் ஆசா ரத்தைத்*

*தன்னை மறந்தாள். தன் நாமம் கெட்டாள்*
*தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே!"*[104]

திருவெண்காட்டுத் திருப்பதிகத்தில், தலைவி கூற்றாக வைத்து,

*"நெடுந்தெருவே வந்தெனது நெஞ்சங் கொண்டார்"*

*"அருகே வருவார்போல் நோக்குகின்றார்"*

*"பரிசழித்தென் வளை கவர்ந்தார்"*

*"கள்ள விழிவிழிப்பர்"*

*"கருத்தழித்து வளைகவர்ந்தார்"*

*"பாலைப் பரிசழியப் பேசு கின்றார்"*[105]

என்றெல்லாம் கூறுவது, கற்பார்க்குக் கழிபேரின்பந் தருவதாம்.

இவ்வாறெல்லாம் எல்லாம்வல்ல பரம்பொருளாம் சிவபெருமானை ஏத்தும் நாவரசர், இவ்வுலக வாழ்வை முடித்துக் கொண்டு, இறைவனின் திருவடியில் உயிரைச் சேர்ப்பிக்க விழைகின்றார்!

*"ஒருவனையும் அல்லா துணரா துள்ளம்*
*உணர்ச்சித் தடுமாற்றத் துள்ளே நின்ற*
*இருவரையும் மூவரையும் என்மேல் ஏவி*
*இல்லாத தரவறுத்தாய்க் கில்லேன் ஏலக்*
*கருவரைசூழ் கானல் இலங்கை வேந்தன்*
*கடுந்தேர்மீ தோடாமைக் காலாற் செற்ற*
*பொருவரையாய்!* **உன்னடிக்கே போது கின்றேன்***!*
*பூம்புகலூர் மேவிய புண்ணியனே!"*[106]

இத்திருப்பாட்டின் பொருள் வருமாறு: "திருப்புகலூரில் எழுந்தருளியுள்ள புண்ணிய மூர்த்தியே! ஒப்பிலாத் தலைவனாகிய உன்னையன்றி, எனதுள்ளம், வேறொன்றை உணராது; உணர்வுகளைத் தடுமாறச் செய்வன 'நல்வினை, தீவினைகள்'; பந்திப்பன 'ஆணவம், கன்மம், மாயை' என்பன; இவை, என்னை வருத்தாதவாறு காத்து அருள்புரிந்த தலைவனும் நீயே! நான், மீளவும் ஒரு தாயின் கருவுக்குள் புகலாகாது காத்தருள்வாயாக! இராவணனைக் காலால் செற்ற கயிலைநாதா! உன் திருவடிக்கே போதுகின்றேன்! அடியேனை ஏற்று அருள்வாயாக!"

இவ் அரிய வரலாற்றைத் தெய்வச் சேக்கிழார் கூறுவது வருமாறு :

*"மண்முதலாம் உலகேத்த மன்னுதிருத் தாண்டகத்தைப்*
*'புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்' எனப்புகன்று*
*நண்ணரிய சிவானந்த ஞானவடிவே யாகி*
*அண்ணலார் சேவடிக்கீழ் ஆண்டஅர சமர்ந்திருந்தார்!"*[107]

இவற்றையெல்லாம் உள்ளடக்கி,

*"அயரா அன்பின் அரன்கழல் செலுமே"*[108]

என மெய்கண்டார் அருளிச் செய்தார்.

*"மாயமெலா நீங்கியரன் மலரடிக்கீ ழிருப்பன்*
*மாறாத சிவாநுபவ மருவிக் கொண்டே"*[109]

என்பது அருணந்தி சிவாசாரியார் வாக்கு.

தவமேதும் புரியாமல், தழல் ஏதும் ஒம்பாமல், 'திருநாவுக்கரசு' எனும் ஓர் திருப்பெயரைச் சொல்லிய அவ்வளவிலேயே, துன்பில்பதமாம் முத்திநிலை பெற்றார் அப்பூதியடிகள் எனின், நாவரசரின் மேன்மைக்கு வேறு சான்று வேண்டா! இதனால்தான், சிவப்பிரகாச சுவாமிகள்,

*"திரைகடல் நீந்திய பாவல! இவ்வுலகில், பிள்ளையைப் பெற்றவர்கள் என்ற பெரும் புகழைப் பெறவேண்டினால் உன்னைப் பெற்ற தாய்தந்தையராகிய புகழனார் மாதினியார் இவர்களைப் போல விளங்க வே[illegible]டும்! இவ்வுலகில் பிறப்பு என்பது உண[illegible]ாயின், [illegible]னைப் போலவே பிறக்க வேண்டும்!"*[110]

என்ற பொருளில்,

*"பெற்றால் நினைப்பெற் றவர்போற் பெறலும் பிறப்பதுண்டேல்*
*நற்றா ரணியில் நினைப்போற் பிறப்பதும் நல்லகண்டாய்!*
*செற்றார் புரம்எரி செய்தலில் வீரன்திருப் பெயரே*
*பற்றா மறிவெண் டிரைக்கடல் நீந்திய பாவலனே!"*[111]

என்று போற்றுகின்றார்.

## முடிபுகள்

இவ் இயலின் வாயிலாக அறியத்தகும் முடிபுகளாவன :

1. சைவ சித்தாந்தம் கூறும் முப்பொருள்களுள் ஒன்றான, 'பசு'வைப் பற்றித் திருநாவுக்கரசர் பல பாடல்களில் கூறுகின்றார்; 'உயிர்', 'ஆன்மா' என்ற சொற்களையும் எடுத்தாள்கின்றார்;

2. உயிர்கள் எண்ணில் பலவாம்; திருநாவுக்கரசர், 'பல்லுயிர்' என்பர்;

3. உயிர்களின் அறிவும் செயலும் இறைவனைச் சார்ந்தே அமையும்;

4. இறைவன், உயிரோடும், சிந்தை முதலான அறிகருவிகளோடும் செறிவு செய்திட்டிருப்பவன்; அதனை உணர்த்தவும் செய்பவன்; நாவுக்கரசர், இத்தன்மைகளைத் தம் பாடலில் இயம்புகின்றார்;

5. 'என் பொன் ஈசன்' என்று ஏத்துபவர்க்கு அவன் அருள் செய்வன்;

6. இறைவனருள் இருப்பின், உயிரானது, அனைத்தும் அறியும்;

7. இறைவன் அறிவிக்கவே உயிர்கள் அறியும்;

8. பதிப்பொருள் 'சித்து'; உயிர் 'சதசத்து'. இது, சார்ந்ததன் வண்ணமாகச் செயல்படும்; அதுவே 'சொரூப இலக்கணம்' ஆகும்;

9. நாவுக்கரசர், சமண சமயம் சார்ந்தபோது, அச்சார்பினால் தம் வாழ்க்கை பாழாகி விட்டதையும், பின்னர் இறைவனருளால் சைவம் மீண்டு அச்சார்பால் உய்வு பெற்றதையும் பல பாடல்களில் குறிப்பிடுகின்றார்;

10 நாவுக்கரசர், தாம் பெற்ற இவ் அனுபவத்தை உலகவர்க்கும் உணர்த்துகின்றார்;

11 உலக வாழ்வில் ஈடுபடும்போது உயிரானது அதற்கேற்பவும், இறையருளில் திளைக்கும்போது அதன் இயல்பிற்றாகவும் விளங்குவதை நாவரசர் எடுத்து விளக்குகின்றார்;

12 வினைப்பயனால் ஏற்படும் பிறவிகள் குறித்தும் மொழிகின்றார்;

13. உயிர்கள், 'கேவலம், சுத்தம், சகலம்' என மூவகையில் வைத்து விளக்கப்படும்; இவை, மலங்களின் சேர்க்கையால் சொல்லப்படுபவை. இவை குறித்தும் நாவரசர் ஆங்காங்கே சுட்டுகின்றார்;

14. இறைவன், நாவுக்கரசர்பால் கருணை கொண்டு 'ஞானதீக்கை' அருளினன்;

15. உயிர்கட்கு இறைவன் செய்யும், 'காட்டும் உபகாரம், காணும் உபகாரம்' ஆகியன பற்றிய கருத்துக்கள் நாவரசர் தேவாரத்தில் இடம் பெற்றுள்ளன;

16. சம்பந்தர், அப்பர், சுந்தரர், மணிவாசகர் - இந் நால்வரினும் தாம் பிறந்த சூழலால் புறச்சமயம் சார்ந்து, பின் இறைவனருளால் 'சூலை' நோயால் ஆட்கொள்ளப்பட்டுச் சைவம் மீண்டமையால், புறச்சமயத்தாரால் பல துன்பங்கட்கும் ஆட்பட்டு உய்ந்தவர். கல்லோடு பிணித்துக் கடலில் தள்ளப்பட்டபோதும் 'திருவைந்தெழுத்து' ஓதியே கரையேறிய காவலர்;

17. நாவுக்கரசர், அகப்பாடல்கள் வாயிலாகவும் இறையியல்பை உணர்த்துகின்றார்;

18. 'நண்ணரிய சிவானந்த ஞான வடிவேயாக' வேண்டும் என விரும்பி அதனைப் பெற்றவர் நாவரசர்;

19. நாவரசரின் திருப்பெயரைச் சொல்லியே முத்திநிலை பெற்றவர் அப்பூதியடிகள்;

20. திருநாவுக்கரசர் அருளிய 'பசுவியற் கொள்கை' பற்றிய பாக்கள், 'சிவஞான போதம்' முதலான சாத்திரங்கள் தோன்றுவதற்கு வழிவகுத்தன;

## சான்றெண் விளக்கம்

1. ஒளவை சு. துரைசாமிப்பிள்ளை. தலைமைப் பேருரை. தூத்துக்குடி சைவ சித்தாந்த சபை 65ஆம் ஆண்டு நிறைவு (தனி வெளியீடு), ப.31.
2. சி. அருணைவடிவேலு முதலியார். சிவஞான போத மாபாடியப் பொருள்நிலை விளக்கம். பக்.179, 180.
3. மு. திருவிளங்கம் (உ.ஆ.), சிவஞான சித்தியார் சுபக்கம், ப.334.
4. சிவஞான சித்தியார் சுபக்கம், 210:4.
5. சிவாக்கிரயோகியர் உரை, (ஆதாரம்) வ.ஆ.தேவசேனாபதி, சைவ சித்தாந்தத்தின் அடிப்படைகள், ப.81.
6. சிவஞானபோதம், சூத்.3.
7. சி. அருணைவடிவேலு முதலியார். மு.கா.நூல், பக்.477-479.
8. திருநாவுக்கரசர் தேவாரம், 5:200:1: 5:760:2.
9. மேலது. 6:459:2: 6:499:2: 6:556:2: 6:802:2: 6:830:2.
10. மேலது, 6:921:2: 6:142:1: 6:188·2.
11. மேலது, 4:425:2: 4:497:1: 6:295:1: 6:375:1: 6:462:3: 6:507:2-3: 6:898:1.
12. மேலது, 6:407:2.
13. மேலது, 4:445:3.
14. திருமந்திரம், 115:2.
15. திருக்குறள், 2.
16. மேலது. 338.
17. திருநாவுக்கரசர் தேவாரம். 4:205:1-2.
18. ஆ.ஆனந்தராசன். சிவஞான போதம் வழித்துணை விளக்கவுரை. பக்.34-35.
19. சிவஞானபோதம். சூத்.1: அதிகரணம் 3: உதாரணம்.
20. திருநாவுக்கரசர் தேவாரம். 5:760.
21. வை.இரத்தினசபாபதி, திருமுறைத் தெளிவே சிவஞானபோதம், ப.132.
22. திருநாவுக்கரசர் தேவாரம். 5:763:4.
23. மேலது, 5:24.
24. மேலது. 5:893.
25. மேலது. 5:308.
26. வை.இரத்தினசபாபதி. மு.கா.நூல். பக்.136,137.
27. திருநாவுக்கரசர் தேவாரம், 5:764.
28. மேலது, 4:309: 4:450:1-2; 4:649:1-2: 4:745:3-4; 6:315:1.

29. மேலது, 4:727:1: 4:1009:3: 5:697.
30. சிவஞானபோதம். சூத்.5.
31. சிவஞான சித்தியார் சுபக்கம், 238.
32. திருஞானசம்பந்தர் தேவாரம், 1:16:6:1-2: 1:50:4.
33. சுந்தரர் தேவாரம், 40:10:2.
34. திருவாசகம், 4:11-12: 1:38.
35. திருநாவுக்கரசர் தேவாரம், 4:198:1-2: 4:47: 6:5:3-4.
36. ஆ. ஆனந்தராசன். மு.கா.நூல். ப.80.
37. சிவஞானபோதம், சூத்.3: அதிகரணம் 6: உதாரணம்.
38. ந. சுப்புரெட்டியார், சைவ சமய விளக்கு. பக்.145-147.
39. சிவஞானபோதம், சூத்.7.
40. ஆ.ஆனந்தராசன், மு.கா.நூல். பக்.164-165.
41. வ.ஆ.தேவசானாபதி, மு.கா.நூல், ப.89.
42. திருக்குறள். 452.
43. திருநாவுக்கரசர் தேவாரம், 4:44: 4:124:2: 4:387:1-2.
44. மேலது, 4:982:1-2: 5:411:1-2: 6:516:4.
45. மேலது. 6:115.
46. மேலது, 6:624.
47. மேலது, 4:901.
48. மேலது, 4:900.
49. மேலது, 4:729.
50. மேலது. 4:731.
51. மேலது, 4:309: 4:454: 4:651.
52. சிவஞானபோதம். சூத்.7.
53. க.வச்சிரவேல் முதலியார். 'சைவம்', சைவமும் வைணவமும், ப.64.
54. சி.அருணைவடிவேலு முதலியார். மு.கா.நூல். ப.289.
55. திருநாவுக்கரசர் தேவாரம், 4:265: 4:267:1-2.
56. மேலது, 4:506: 6:565:1: 6:930:1.
57. மேலது, 4:784:1: 4:783:4.
58. மேலது, 4:920:1-2.
59. சிவஞானபோதம், சூத்.2:1-2: சூத்.2: அதிகரணம்:2 உதாரணம்
60. போற்றிப் பஃறொடை, கண்ணி:13.
61. சிவஞான சித்தியார் சுபக்கம், 179.
62. சிவப்பிரகாசம், 19:1.
63. திருவருட்பயன், 20.

64. ந.சுப்புரெட்டியார். மு.கா.நூல். பக்.162-164.

65. வ.ஆ.தேவசேனாபதி. மு.கா.நூல், ப.92.

66. திருநாவுக்கரசர் தேவாரம், 6:476:3-4.

67. மேலது, 4:322:3.

68. மேலது. 4:262:1.

69. சி.அருணைவடிவேலு முதலியார். மு.கா.நூல். பக்.80.81.

70. திருநாவுக்கரசர் தேவாரம். 4:311.

71. மேலது. 4:294:1: 5:258:1: 5 895.

72 மேலது. 4:933.

73. மேலது. 6:146.

74 மேலது. 4:753:3-4.

75. சிவஞான சித்தியார் சுபக்கம். 227.254.

76. திருவருட் பயன். 2:2-3.

77. சிவப்பிரகாசம். 8:1

78. சிவஞானபோதம். சூத்.8: அதிகரணம் 2: உதாரணம்.

79. திருஞானசம்பந்தர் தேவாரம். 1:116:1

80. சுந்தரர் தேவாரம். 75:7:4.

81. திருவாசகம். 5:3:22:1.

82. ஆ.ஆனந்தராசன். மு.கா.நூல். பக்.234.237.

83. திருநாவுக்கரசர் தேவாரம், 4:43:2-3: 4:45:2-3: 6:931:4: 4:49:2-3: 4:107:3-4: 4:683:3-4: 4:873.

84. மேலது. 4:408:3-4: 5:916: 6:189:1: 4:728:3.

85. திருஞானசம்பந்தர் தேவாரம். 1:12:4:1.

86. சுந்தரர் தேவாரம். 58:2:3-4.

87. திருவாசகம். 5.3:28:2-3: 2:95-96.

88. காரைக்காலம்மையார். அற்புதத் திருவந்தாதி, 20.

89. சிவஞானபோதம். சூத்.11:1-2.

90. சிவஞான சித்தியார் சுபக்கம். 310:1-2: 231:4.

91. திருநாவுக்கரசர் தேவாரம். 4:5:1: 4:7:1: 4:8:2. 4:48:4.

92. மேலது. 4:104:1.

93. வை. இரத்தினசபாபதி, மு.கா.நூல், ப.120.

94. திருத்தொண்டர் புராணம். திருநாவுக்கரசு சுவாமிகள். 124:4.

95. மேலது. 125:3-4.

96. மேலது, 129.

97. கி.வா.ஜகந்நாதன் (உ.ஆ.), பெரியபுராண விளக்கம் பகுதி6, பக். 205-206.

98. திருநாவுக்கரசர் தேவாரம். 4:151:3-4.

99. மேலது, 4:152:4

100. மேலது. 4:42.

101. மேலது. 4:82.

102. மேலது. 4:251.

103. மேலது. 4:739.

104. மேலது. 6:258.

105. மேலது. 6:350-356.

106. மேலது. 6:980.

107. திருத்தொண்டர் புராணம். திருநாவுக்கரசு சுவாமிகள். 427

108. சிவஞானபோதம். சூத். 11:3.

109. சிவஞான சித்தியார் சுபக்கம். 310:4.

110. ச. சாம்பசிவனார். தெய்வத்தமிழ் அலங்கல். ப.89.

111. நால்வர் நான்மணிமாலை. 30



5

# திருநாவுக்கரசர் தேவாரத்தில் 'பாசவியற் கொள்கை'

## முன்னுரை

> "முழு **இருளில்** மூழ்கிஉள்ள உயிர். அவ் இருளினின்றும் வெளிவர இயலாததாய் இருக்கிறது. அதன **கட்டை** (தளை) அவிழ்க்க இறைவன் திருவருள் (இடைவிடாது) சுரக்கிறான். இறைவன் முற்றறிவு உடையவன்; ஆதலின் அவன்பால் இரக்கம் இயல்பாகவே அமைந்து இருக்கின்றது. அழுககாறு எழும்போது இரக்கம் ஒடுங்குதலையும், அழுக்காறு ஒடுங்கும்போது இரக்கம் எழுதலையும் அநுபவத்தால் உணர்கிறோம். அழுக்காறு, வன்கண் முதலியன அறியாமைக் கூறுகள். இரக்கம். ஒப்புரவு முதலியன அறிவுக்கூறுகள். இறைவன் முற்றறிவு உடையனாய் இருத்தலின், அவன்மாட்டு இரக்கம் இயல்பாகவே அமைந்து இருத்தலை விளக்க வேண்டுவது இல்லை. நீரில் தண்மை (குளிர்ச்சி) இருப்பது போலவும், நெருப்பில் வெம்மை (சூடு) இருப்பது போலவும் இறைவனிடத்தில் இரக்கம் இயல்பாய் இருக்கிறது. இரக்கத்தின் தன்மை என்ன? துன்பம் கண்ட இடத்தில் அஃது எழுந்து துன்பத்தைப் போக்க முயல்வது அதன் தன்மை. உயிர். தன் நிலை அறியாது **இருளில்** மூழ்கிக் கிடக்கிறது. அதைக் காணும் இறைவனது இரக்கம் வாளா கிடக்குமோ? அவ் இரக்கம் உயிரைத் துன்பத்தினின்றும் விடுதலை செய்ய முனைகிறது. இறைவன் இரக்கத்தால் உயிரின் **கட்டை** அவிழ்த்து. அதைத் தன்னைப் போல் ஆக்கத் திருவுளம் கொள்கிறான்!"[1]

எனப் 'பாசம்' அல்லது 'கட்டு' அல்லது 'தளை' பற்றியும், அக் கட்டினை அவிழ்த்து உயிர்க்கு இன்பம் தரும் இறையருள் பற்றியும் திரு.வி.க. கூறுவர்.

திருநாவுக்கரசர் தேவாரத்தில் இத்தகைய 'பாசவியற் கொள்கை' பற்றிய கருத்துக்கள் இடம்பெற்ற பான்மைபற்றி இவ்வியல் ஆராய்கின்றது.

**'பாசம்' - ஒரு விளக்கம்**

> *"பாசம் என்னும் இச்சொல், 'கட்டு' என்னும் பொருளை உணர்த்தும். 'பச்' என்னும் பகுதி யடியாகப பிறந்து, சீவான்மாவைக் கட்டி நிற்பது என்னும் பொருட்டாம்!"*[2]

என்பர் மறைமலையடிகள்.

வ.ஆ.தேவசேனாபதி, இப் 'பாசம்' என்னும் சொல்லுக்குத் தரும் விளக்கமும் இங்குக் குறிக்கத்தகும் :

> *"பாசம் என்னும் சொல்லுக்கு நேரான தமிழ்ச சொல் 'கயிறு' என்பதாம கயிறு கொண்டு 'பசு'வைக் கட்டுவது போல, உயிர்கள், 'ஆணவம், கன்மம், மாயை' என்னும் கயிறறால் கட்டப் பெற்றுள்ளன. இதே பொருளில், 'தளை, தடை' என்னும் சொற்கள் ஆளப்பெற்றுள்ளன.....குற்றவாளிகளின் கைகால்களில் 'தளை' அதாவது 'விலங்கு' இடம்பெறுவதைப் போல, உயிர்களின் 'அறிவு, ஆற்றல், விழைவு' ஆயவை தளையிடப் பெற்றுள்ளன. இவ்வாறு தடுக்கப்படுவதைக் குறிப்பதற்காகத் 'தடை'யென்னும் சொல்லும் ஆளப்பெறுகிறது!"*[3]

"பாசம், கயிறு, தளை, கட்டு, தடை, மாசு, மலம், அழுக்கு" என்பன ஒருபொருட்சொற்கள். வடமொழியில் இதனை 'நிகளம்' என்பர்.

> *"ஆசா **நிகளம்** துகளா யினபின்*
> *பேசா அனுபூதி பிறந்ததுவே!"*[4]

என்பது அருணகிரிநாதர் வாக்கு.

திருநாவுக்கரசர், தம் தேவாரத்தில் இப் '**பாசம்**' என்ற சொல்லையே எடுத்தாள்கின்றார்.

> "**பாசமும்** *கழிக்க கில்லா!"*
>
> "**பாச**மற்றுப் *பரம!நான் பரவ மாட்டேன்!"*
>
> "**பாசம்** *ஒன்றில ராயபல பத்தர்கள்"*
>
> "**பந்த பாசம்** *அறுத்து"*
>
> "**பாசத்தைப்** *பற்றறுக்க லாகு நெஞ்சே!"*

*“அலையார் வினைத்திறஞ்சே ராக்கை யுளளே*
*யகப்பட்டு ளாசையெனும்* **பாசந் தன்னுள்**
*தலையாய்க் கடையாகும் வாழ்வி லாழ்ந்து”*

*“***பாச வினைகள்** *தீர்க்கும மன்னவனே!”*[5]

எனப் பல பதிகங்களிலும் ‘பாசம்’ பற்றிக் குறிப்பிடுகின்றார்.

ஞானசம்பந்தப் பெருமானும்,

*“பாசம் அறுப்பீர்காள்! ஈசன் அணி ஆரூர்*
*வாச மலர்தூவ நேச மாகுமே!”*[6]

என்றும்;

மணிவாசகப் பெருமான்,

*“பாசமாம் பற்றறுத்து”*[7]

என்றும் மொழிவன இங்கு ஒப்புநோக்கத்தகுவன.

**மும்மலங்கள்**

சைவ சித்தாந்தம் கூறும் ‘மலங்கள்’ மூன்று. அவை: ஆணவம், கன்மம், மாயை என்பன. இவை, உயிர்களைப் பந்தித்து நிற்கும் ‘தளைகள்’ ஆகும். இம் மூன்றும் ‘சடசக்திகள்’ எனப்படும்; அஃதாவது ‘அறிவற்ற சக்திகள்’ என்பதாம். இறைவனது சக்தி, ‘சிற்சக்தி’; அறிவு வடிவமான சக்தி. அதனால்தான் தாயுமானவரும்,

*“சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே!”*[8]

என்று கூறலானார். இம் மூன்று மலங்களும், உயிர்களின் ஆற்றலைத் தடைசெய்து துன்புறுத்தும்; அன்றியும் உயிர்களின் பிறப்பு நிலைக்கும் இவையே காரணமாம்.

இம் மூன்று மலங்களில், ‘ஆணவத்’தால் மட்டும் கட்டுற்றுப் பிறவற்றால் தாக்குண்ணாதவரை ‘விஞ்ஞானகலர்’ என்றும்; ‘ஆணவம், கன்மம்’ எனும் இரண்டின் வயப்பட்டோரைப் ‘பிரளயாகலர்’ என்றும்; மும்மலத்தாலும் கட்டுப்பட்டுள்ளோரைச் ‘சகலர்’ என்றும் கூறுவர் என்பது முன்னரே சுட்டப்பட்டது.

‘ஆணவத்’தைப் ‘பிரதிபந்தம்;’ ‘கன்மமலத்’தை ‘அநுபந்தம்’; ‘மாயாமலத்’தைச் ‘சம்பந்தம்’ என்றும் கூறுவதுண்டு.[9]

‘பதி’, ‘பசு’ இவற்றைப் போல இப் ‘பாசமா’கிய மும்மலங்களும் அநாதியேயாம்.

*“பதிபசு* **பாசம்** *எனப்பகர் மூன்றில்*
*பதியினைப் போற்பசு பாசம் அனாதி*

*பதியினைச் சென்றணு காப்பசு* **பாசம்**
*பதியணு கிற்பசு பாசநில் லாவே"*

*"தாயினும்* **மும்மலம்** *மாற்றி"*[10]

என்பர் திருமூலர்.

நாவரசர், 'மலங்களை'[11] என்று கூறுவதனால், 'மும்மலங்களை'யும் குறித்தார் எனலாம்.

*"விளையாத தொரு பரிசில் வரு பசு*பாச **வேதனையொண்**
**டளை***யாயின"*[12]

என ஞானசம்பந்தர் கூறுவர். மணிவாசகப் பெருந்தகை,

*"மும்மலங்கள் பாயும்"*

*"மயக்க மாயதோர் மும்மலம்"*

*"உள்ள மலமூன்றும்"*

*"மும்மை மலம்"*[13]

என்று 'மும்மலங்கள்' பற்றி மொழிவர்.

சைவ சித்தாந்த சாத்திர நூல்கள், இம் 'மும்மலங்கள்' குறித்து விரிவாகப் பேசும். மெய்கண்டார்,

*"ஊனக்கண் பாசம் உணராப் பதியை"*[14]

என்று கூறியதனோடன்றி,

*"நெல்லின்கண் உமியும் செம்பின்கண் களிம்பும், ஏககாலத்துள்ளவாயினவென்று ஆராய்ந்து சொல்லுங்கால் அந்நெல்லும் செம்பும் உளவாயினவன்றே உள்ளனவன்றி இடையே வந்தனவல்ல, அதுபோல 'மாயை, மலம், கன்மம்' என்னும் மும்மலங்களும் அநாதியே யுள்ளனவாம்; முன்னேயுள்ளதாய தாமரைப்பூ, அலர்தலும் கூம்புதலும் ஞாயிற்றினாற் செய்யப்படுமாறு போல, அவை தத்தம் காரியங்களைச் செய்தல் முதல்வனாலேயாம்!"*[15]

என்னும் பொருள்பட,

*"நெல்லிற் குமியும் நிகழ்செம்பி னிற்களிம்பும்*
*சொல்லிற் புதிதன்று தொன்மையே — வல்லி*
*மலகன்மம் அன்றுளவாம் வள்ளலாற் பொன்வாள்*
*அலர்சோகஞ் செய்கமலத் தாம்"*[16]

என்று திருவாய் மலர்ந்தருளினார்.

**இதற்கு ஆ.ஆனந்தராசன் அளிக்கும் விளக்கம் வருமாறு:**

"நெல்லில் உள்ள உமியாகிய குற்றமும், செம்பில் உள்ள களிம்பாகிய குற்றமும், புதியனவாய் வந்தனவல்ல; நெல்லும் செம்பும் உள்ளவன்றே அவையும் உள்ளன. அதுபோல, 'மாயை, ஆணவம், வினை' ஆகிய மும் மலங்களும் அநாதியே உள்ளன. ஆயினும் சூரியனது ஒளியால் மலர்தலும், குவிதலும் செய்கின்ற தாமரை மலரைப் போல, அவை, இறைவனது சத்தியாலே செயற்படுவனவாம்."

"'வல்லியமல கன்மம் அன்றுளவாம்' என்றதனால், மும்மலங்களை இறைவன் தோற்றுவிக்கவில்லை என்பதும், அவை என்றும் உள்ளவை எனபதும் பெறப்படும் அவற்றிற்குத் தோற்றம் இல்லை எனவே அழிவும் இல்லையாம். ஆயினும் அவற்றின் காரியங்களுக்குத் தோற்ற, அழிவுகள் உண்டு. ஆணவமலத்தின 'காரியம்' அறியாமை. கட்டுநிலையில் அவ்அறியாமை உயிரைப் பற்றியிருத்தலும்; முத்திநிலையில் நீங்குதலும் தெளிவு. கன்மமலத்தின் காரியம் இன்ப துன்பங்கள். அவை, உயிருணர்வை வந்து பொருந்துதலும், அனுபவிக்கப்பட்டுப் பின் கழிதலும் காணலாம். மாயாமலத்தின் காரியம் உலகமும் உலகப் பொருள்களும். அவை தோன்றி நின்று அழிதல் வெளிப்படை."

"மும்மலங்களும் தத்தம் காரியத்தைச் செய்யும்படி அவற்றைச் செயற்படுத்துவது இறைவனது சிற்சத்தியே யாகும். அவ்வாறு செயற்படுத்துவதனால் அவை, பின்வரும் காரியத்தைச் செய்கின்றன. 'ஆணவமலம்', உயிருணர்வைத் திரிவுபடுத்தி, இழிந்தனவாகிய உலகப் பொருள்களையே உயர்ந்தனவாக மதிக்கும்படிச் செய் கின்றது; 'கன்மமலம்', இன்பதுன்பங்களைப் பயந்து, உயிருணர்வை அவற்றில் அழுந்தி நிற்கச் செய்து மயக்கு கிறது. 'மாயாமலம்' உலகப் பொருள்களாய் அமைந்து, உயிருணர்வை மயக்கித் தம்மையே பற்றும்படிச் செய்கின்றது. சுருங்கக் கூறின், இம் மும்மலங்களும், உயிருணர்வைக் கவர்ந்து, இறைவனை நோக்கவிடாது, உலகத்தையே நோக்கும்படிச் செய்கின்றன!"[17]

'இருபா இருபஃது' நூலில் 'கூறிய மூன்று மலத்தின்' எனவரும் செய்யுளுக்கு விரிவுரை கூறவந்த தே.ஆ. ஸ்ரீநிவாசாசாரியன் இம் 'மும்மலங்கள்' குறித்து விளக்குவது இவண் எண்ணத்தகும்.

"குதிரைக்கு மூன்று கட்டுகள் இருப்பதுபோல் ஆன்மாவுக்கும் இம் மூன்று பந்தங்களும் உள குதிரையின் கழுத்துக்கட்டு நிகர்ப்பது ஆணவம். பின்கால் கட்டுகளைப் போல்வன மாயை, கன்மங்கள் ஆணவம் அறியாமையைச் செய்ய, மாயா கன்மங்கள் அவ்வாணவமல நீக்கம் பெற்று, ஆன்மா நலமடைதற்கு உபகாரப்படுகின்றன .....படலக் கண்ணுக்கும் சூரியன் தெரியாது. மேகம் மறைத்திருப்பினும் கண்ணுக்குச் சூரியன் தெரியாது. சூரியனைத் தெரிய வொட்டாமல் செய்யும் தன்மையில் மேகமும் படலமும் ஒன்றுபோற் காணப்படினும் இவை வேறு என்பது வெளிப்படையாகத் தெரிந்ததே. நமது சுகதுக்கமாகிய காரியத்துக்குக் 'கன்மமலம்' முதற்காரணமாம். 'மாயாமலம்' துணைக்காரணம். 'ஆணவமலம்' நிமித்தகாரணமாம் சுகதுக்கங்களைக் கன்மம் தோற்றுவிக்கிறது. மாயாமலம் அதனை நுகர்வதற்கானபடி உடம்பு முதலியவற்றை அளிக்கிறது. ஆணவம் சுகதுக்கங்களை அனுபவிக்கச் செய்கிறது. ஆணவம் உயிரோடு கலந்து நிற்றலின் 'பிரதிபந்தம்' எனப்படும். கன்மம், உயிரோடு செல்லுதலின் 'அனுபந்தமா'ம். மாயாமலம், உயிரோடு கூடித் தனு முதலியவாக நிற்றலால் .'சம்பந்தம்' எனப்படும்."[18]

இனி, 'மலங்கள் ஐந்து' என்று கூறுவதும் உண்டு. 'ஆணவம், கன்மம், மாயை' இம்மூன்று தவிர, 'மாயேயம், திரோதானம்' எனும் இரண்டினையும் சேர்த்து ஐந்தெனல் உண்டு இவை குறித்துச் சி. அருணைவடிவேலு முதலியார் கூறுவதாவது:

"ஆணவமலத்தின் காரணநிலை. காரிய நிலைகளில் வேறுபாடு மிக இல்லை. அதனால் அஃது ஒன்றாகவே எண்ணப்படும். 'கன்மம்' காரணநிலையில் 'மூல கன்மம்' எனப்படும். அஃது உயிர்களைத் தாக்குதல் இல்லை. காரிய கன்மமே. 'நல்வினை. தீவினை' என இரண்டாக நிகழ்ந்து, உயிர்களைத் தாக்கும். அதனால், காரிய கன்மமே, 'கன்மமலம்' எனப்படுகின்றது. 'மாயை' காரணநிலையில் இருத்தலும், சிறப்பாக எண்ணப்படுகின்றது. அதனால், காரண மாயையே, 'மாயை' என்றும்; காரிய மாயை

'**மாயேயம்**' என்றும் சொல்லப்படுகின்றன. இறைவனது சத்தி. பாசத்தைச் செயற்படுத்துகின்ற நிலையில் '**திரோதான சத்தி**' எனப்படும். இது பாசத்தை நடத்துதலால், ஒருமலமாக உபசரித்துக் கூறப்படும். எனவே, 'ஆணவம், கன்மம், மாயை. மாயேயம், திரோதானம்' என மலங்கள் ஐந்து என்பர். இவை 'பஞ்சமலங்கள்' எனப்படும். இவை விரித்துக் கூறபபடுவனவல்லது உண்மையில் 'ஆணவம். கனமம். மாயை' என மலஙகள் மூன்றே ஆகும்!"[19]

'பதி' ஒன்றே 'சத்து'; 'ஆணவம், கன்மம், மாயை' எனும் மூன்றும் 'அசத்து'. ஏனெனில் இவை, மாற்றங்கட்கு உட்படுவன என்பதாம். இவை எவ்வாறு மாற்றமுறுகின்றன என்பதை ஆ.ஆனந்தராசன் பின்வருமாறு விளக்குகின்றார்:

"ஆணவமலமானது. உயிர்களைப் பலவாறு பிணித்து நின்று. பின்னர்ச் சத்தி தேய்ந்து தேய்ந்து மடங்கி நிற்கும். 'கன்மமலம்'. உயிர்களைச் சார்ந்து நின்று. இன்ப துன்பங்களைத் தந்து. பின்னர் நீங்குவதாகும். 'மாயாமலம்' தனுகரண. புவன. போகங்களைத் தன்னிடமிருந்து தோற்றுவித்தும். பின்னர் ஒடுக்கியும் இவ்வாறு காரியப்பட்டு. நிலைமாற்றம் அடையும். எனவே இம்மூன்று மலங்களும் 'அசத்து' என்று கொள்ளப்படும்......... எது நிலைமாற்றம் உடையதோ, அஃது 'அசத்து' என்பதே அசத்துக்குரிய சித்தாந்த வரையறையாகும்."[20]

இவ்வாறு கூறும் இவர், 'பாசஞானம்' குறித்தும் விளக்கம் தருகின்றார் :

"பாசமாகிய கருவிகளைக் கொண்டு. பாசமாகிய உலகப பொருள்களை அறியும் அறிவு. 'பாச அறிவு' அல்லது 'பாச ஞானம்' எனப்படும் ......... 'பாசஞானம்' என்பது. 'பாசமாகிய கருவிகளின் அறிவு' என்ற பொருளைத் தருவது போலத் தோன்றினாலும். உண்மையாக ஆராய்ந்து பார்த்தால், 'பாசமாகிய கருவிகளால் உயிருக்கு உண்டாகும் அறிவு' என்பதே அதன் பொருளாகும். எனவே 'பாசஞானம்' என்பது. தனியொரு ஞானம் அன்று என்பதும். உண்மையில் அது 'பசு'வினது ஞானமே என்பதும் தெளிவாகும்!"[21]

பின்வரும் சித்தியார்ப் பாடல்களால் மேலே கூறியவற்றை உணரலாம்.

"மும்மல நெல்லி னுக்கு முளையொடு தவிடு மிப்போல்
மம்மர்செய் தணுவி னுண்மை வடிவினை மறைத்து நின்று

பொய்ம்மைசெய் போக பந்த போத்திருத் துவங்கள் பண்ணும்
இம்மல மூன்றி னோடு மிருமல மிசைப்ப னின்னும்!"

"மாயையின் காரி யத்தை மாயேய மலம தென்றும்
ஏயுமும் மலங்க டத்தந் தொழிலினை யியற்ற வேவுந்
தூயவன் றனதோர் சத்தி திரோதான கரிய தென்றும்
ஆய்வரிம் மலங்க ளைந்து மணுக்களை யணைந்துநிற்கும்"[22]

பின்வரும் திருமந்திரமும் இங்குக் குறிக்கத்தகும் :

"ஆணவமும் மாயையும் கன்மமும் மும்மலம்
காணும் முளைக்குத் தவிடுமி ஆன்மாவும்
தாணுவை ஒவ்வாமல் தண்டுலமாய் நிற்கும்
பேணுவாய் மற்றுநின் பாசம் பிரித்தே"[23]

## 5.1. ஆணவம்

### 'ஆணவம்' - ஒரு விளக்கம்

"அணுத்தன்மைப் படுத்துவதால் 'ஆணவம்' என்னும் பெயர் பெற்றது. அஃதாவது உயிருக்கு இயல்பாக அமைந்த வியாபகத் தன்மையை மறைத்து, அதனைச் சிறுமைப்படுத்துவது - அணுத்தன்மைப்படுத்துவது என்பதாம். எனவே, 'ஆணவம்' என்பது காரணப்பெயராகும்.[24]

ஆணவமலம், அறிவை மறைக்கின்ற ஓர் இருட்பொருள்; அஃது அறிவற்றது. ஆணவமலம் என்பதொன்று அறிவை மறைக்கின்றது என்பதைத் தெரிந்து கொள்ளல் அரிது; ஆயினும் ஒருவரின் செயற்பாடும், பேச்சும், பிறவும், அஃது உண்டென்பதைப் புலப்படுத்தவே செய்கின்றன. ஆணவமலம், 'வியாபகப்பொருள்'; அஃது இல்லாத இடமே இல்லை. இவ் ஆணவமலத்தை, 'மூலமலம்' என்றும் 'சகசமலம்' என்றும் கூறுவர். சகசம் - இயற்கை, உடன் உள்ளது.[25]

### உயிர்களும் ஆணவமும்

உயிர்கட்கும் ஆணவமலத்திற்குமுண்டான தொடர்பு குறித்து முரு.பழ. இரத்தினம் செட்டியார் கூறுவது வருமாறு:

"ஆன்மா பலகீனமான ஒன்று. உடல் பலகீனமாக இருந்தால் அதனைக் கிருமிகள் தாக்குவதைக் காண்கிறோம். அதுபோல ஆன்மா தன் இயல்பில் பலகீனமாக இருப்பதால், 'ஆணவமலம்' என்ற ஒன்று அதனைத் தாக்குகிறது. இறைவனின் அறிவு இச்சை செயல்கள் பலமாக இருப்பதால் அவனை அது

*தாக்குவதில்லை........ஆணவமலம், தீமையின்பால்தான் நம்மை ஈர்க்கும். தீமை செய்துவிட்டு அதற்குப் பலவகைப் போலிச் சமாதானங்களை ஆணவமலம் நம்மைச் சொல்லச் சொல்லும். ஆணவமலம் இருப்பதால்தான் உலகத்தில் இத்தனை அக்கிரமங்களும், கொடுமைகளும் நிகழ்கின்றன. நியாயம் அன்று எனத் தெரிந்தும், அக்கிரமம் செய்வதற்குக் காரணம் ஆணவ மலமேயாகும். அஃது அறிவை மறைத்துவிடுவதால் நம் உணர்வுக்கு நியாயம் புலப்படாமல் போகிறது......ஆணவ மலம ஆன்மாவை மறைக்கும்பொழுது. ஆன்மா அதனைப பற்றி அதனுள் அழுந்துகிறது!"[26]*

உயிர் என்று உண்டோ, அன்றே அதனிடத்தில் இயற்கைக் குற்றமாகப் பொருந்தியிருப்பது 'ஆணவமலம்' ஆகும். ஆடையின் வெண்மை தோன்றாதபடி அழுக்கு மறைத்திருப்பது போல, உயிரின் அறிவு தோன்றாத படி, சகசமாகிய 'ஆணவமலம்' மறைத்து நிற்கிறது. இச் 'சகசமலம்' சிறிது நீங்கி, அறிவு விளங்குதற் பொருட்டே, உயிரானது, அந்தக்கரணங்களோடு கூடவேண்டியதாயிற்று.

உயிரானது, 'மாயை, கன்மங்'களோடு கூடாதபோது, அவ்வுயிரின் அறிவை முழுவதுமாக ஆணவம் மறைத்துவிடும். அவ்வாறு மறைத்து நிற்றலே ஆணவத்தின், 'உண்மை இயல்பு' அல்லது 'சொரூப இலக்கணம்' எனப்படும். அதே உயிர் 'மாயை, கன்மங்'களோடு கூடிவிட்டால், ஆணவமானது, அவ்வுயிரின் அறிவைத் திரிபுபடுத்தும். இத்தகைய திரிபுணர்ச்சியை - விபரீத அறிவை உண்டாக்குவது ஆணவத்தின் 'பொது இயல்பு' அல்லது 'தடத்த இலக்கணம்' ஆகும். எனவே, ஆணவம் 'இருள்' போன்றதாம்; 'மாயை' ஒளி போன்றதாம்.

இவ் 'ஆணவமலம்' குறித்துக் க.வச்சிரவேல் முதலியார் கூறுவது மேலும் விளக்கமாக அமைகிறது. அது வருமாறு:

*"மூலமலம் ஒன்றே ஆயினும் அஃது உயிர்கள்தோறும் வேறுவேறாக நின்று, அவற்றின் அறிவு செயல் ஆற்றல்களைத் தடுத்து நிற்கும் எண்ணிறந்த சத்திகளை உடையது. இச்சத்திகள் உருவுதிரிந்து மெலிவு அடைதற்பொருட்டு முதல்வன், இயற்கையே 'ஆணவபந்தம்' உள்ள உயிர்களுக்கு மாயையின் சம்பந்தத்தை உண்டுபண்ணுகிறான். ஆணவத்தால் முழுவதும் அறிவிழந்து நின்ற உயிர்களுக்குச் சிற்றறிவும் சிறுசெயலும் விளங்குதற்பொருட்டு முதல்வன், 'மாயை'யின்*

*சம்பந்தத்தை உண்டுபண்ணுவதுதான் உலகசிருட்டி எனப்படும். பேரொளிமுன் இருந்தாலும், படலம் படர்ந்த கண், ஒளியைப் பற்றாது இருளையே பற்றும். அதுபோல, உயிர் எஞ்ஞான்றும் இறைவனுடைய அருளொளியில் மூழ்கி, அதில் அடங்கி நிற்பினும், 'ஆணவம்' காரணமாக அருளொளியைப் பற்றாமல், அறியாமையாகிய இருளைப் பற்றி இருளாகவே இருக்கும். இங்ஙனம் 'ஆணவம்', உயிர்களை அறியாமை இருளில் உய்த்தலால், அஃது 'இருள், அறியாமை, அவத்தை, மலம்' என்னும் பெயர்களாலும் குறிக்கப்படும்."[27]*

உயிர்களுக்குப் பகை, மாயையன்று; ஆணவமே! ஆணவமலம் - ஒன்றே; ஆயினும் அதன் சத்திகள் எண்ணிறந்தன. உயிர்களுக்கு உதவியாக இருக்கும் மாயை, கன்மங்களைக்கூடப் பகையாக்கும் ஆற்றல் கொண்டது. 'ஆணவம் உயிர்களை ஏன் சேர்கின்றது?' என்று வினா எழுப்பினால், அதற்கு வ.ஆ.தேவசேனாபதி,

> *"ஆணவம் சடம். (அறிவற்றது) ஆதலின் தானே சென்று சேராது. தமக்குத் தீங்கான ஆணவத்தை உயிர்கள் தம்முடன் தாமே சேர்த்துக் கொள்ளா! தூய்மையும் அருளும் உடைய இறைவன் அதனை உயிர்களுடன் சேர்க்க மாட்டான்!......ஆணவம், வரம்பில் காலமெல்லாம் உயிருடன் உடனாய்ப் பின்னிப் பின்னர் வீட்டுநிலையில் நீங்குவது!"[28]*

'சித்தாந்தப் பஃறொடை' நூலில் வரும், '**கூற்றமெனும் ஆணவமும்**' என்பதற்குச் ச.தண்டபாணி தேசிகர்,

> *"ஆணவம், ஆன்மாக்கள் இன்பநெறிக்கண் செல்லாது அறியாமையைச் செய்து கூறுபடுத்தும் கொடுந் தன்மையுடைமையின் 'கூற்றம்' எனப்பட்டது. ஆணவம், அநாதியே ஆன்மாக்களைப் பிணித்து நிற்பதாய், ஒன்றாய், பல ஆற்றல்களுடையதாய், ஆன்மாக்களின் அறிவு வியாபகத்தை மறைத்து நிற்பதாயுள்ளது!"[29]*

என விளக்கம் தருவர்.

ஆணவத்தின் வன்மை, மென்மை வேறுபடுவதால், அது, சகலரிடத்துப் பருமையாகவும் (தூலம்), பிரளயாகலரிடத்து நுண்மையாகவும் (சூக்குமம்), விஞ்ஞானகலரிடத்து மிக நுண்மையாகவும் (அதிசூக்குமம்) இருக்கும்.

ஆணவமலத்திற்குக் 'காரணநிலை', 'காரியநிலை' என இருவகை உண்டு என்பர். காரணநிலையில், உயிர்களின் அறிவு, இச்சை, செயல்களைச் சிறிதும் செயற்படவொட்டாது, தடுத்துச் சடம் போலக் கிடக்கச் செய்யும்; அப்போது அதன் சக்திக்கு 'ஆவாரகசத்தி' என்று பெயர். ஆவாரகம் - மறைத்தலைச் செய்வது. ஆணவம், 'காரியநிலை'யில் சிறிது மெலிவுற்று, உயிர்களின் அறிவு, இச்சை, செயல்களைச் சிறிதே செயற்படவிடும். எனினும், உயிர்கள், நல்லனவற்றைத் 'தீயன'வாகவும்; தீயனவற்றை 'நல்லன'வாகவும் மாறியுணரும். இவற்றிற்குத் 'திரிபு உணர்வு' என்று பெயர். இந்நிலையில் ஆணவத்தின் சத்திக்கு, 'அதோநியாமிகா சத்தி' என்று பெயர்.

ஆணவம், 'காரியநிலை'யில் ஏழு வகைகளைக் கொண்டிருக்கும். அவை: மோகம், மதம், அராகம், கவலை, தாபம், வாட்டம், விசித்திரம் என்பன. இவை, உயிரானது வீடு பெறும்வரை, அதனைவிட்டு நீங்காமலிருக்கும். இவற்றைச் சிவஞானபாடியத்துள் விரிவாகக் காணலாம்.[30]

உயிர்கள்தோறும் அவற்றின் சிறப்பியல்பு வேறு வேறாக இருத்தலால், அவற்றிற்கு ஏற்பவே, அவற்றைப் பற்றியுள்ள ஆணவத்தின் வன்மை, மென்மைகளும் மிகப்பலவாயுள்ளன. எனவே ஆணவம் நீங்கி, உயிர்கள் முத்தியைப் பெறும் காலமும், ஒன்றாகாது, பலவாகின்றன.[31]

## திருநாவுக்கரசர் தேவாரத்தில்!

திருநாவுக்கரசர் தம் தேவாரப் பதிகங்களில், 'பாசம், மலங்கள்' என்னும் சொற்களை எடுத்தாண்டுள்ளமை மேலே சுட்டப்பட்டது.

> *"'மலம்' என அடைகொடாது கூறுமிடத்தில் அஃது*
> *'ஆணவமலத்'தையே குறிக்கும்"*[32]

என்பர் சி.அருணைவடிவேலு முதலியார்.

நாவரசர், 'மலம்' என்ற சொல்லை ஆங்காங்கு எடுத்தாள்வது இங்கு எண்ணத்தகும்:

> *"செம்மலர்க் கமலத்தோனும் திருமுடி காணமாட்டான்*
> *அம்மலர்ப் பாதம் காண்பான் ஆழியான் அகழ்ந்தும் காணான்*
> ***நின்மலன்** என்றங்கு ஏத்து நினைப்பினை அருளிநாளும்*
> *நம்**மலம்** அறுப்பர் போலும் நனிபள்ளி அடிகளாரே!"*[33]

என்பது, திருநனிபள்ளித் திருப்பதிகத்தே வரும் ஒரு திருப்பாட்டு.

> *"குலம்கொடுத்துக் கோள்நீக்க வல்லான் தன்னைக்*
> *குலவரையின் மடப்பாவை யிடப்பா லானை*

**மலங்கெடுத்து** *மாதீர்த்தம் ஆட்டிக் கொண்ட*
*மறையவனைப் பிறைதவழ்செஞ் சடையி னானைச்*
*சலங்கெடுத்துத் தயாமூல தன்ம மென்னுந்*
*தத்துவத்தின் வழிநின்று தாழ்ந்தோர்க் கெல்லாம்*
*நலங்கொடுக்கும் நம்பியை நள்ளாற் றானை*
*நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே!"*[34]

என்பது, திருநள்ளாற்றுத் திருப்பதிகத் திருப்பாட்டு!

"**மலந்**துக்க *மால்விடையொன் றூர்ந்தான் கண்டாய்!"*

"**மலம்**தாங்(கு) *உயிர்ப்பிறவி மாயக காய*
*மயக்குளே விழுந்தழுந்தி நாளும் நாளும்*
*அலந்தேன் அடியேனை அஞ்சேல் என்னாய்*
*ஆவடுதண் டுறையுறையும் அமா ரேறே!"*[35]

என்றும் கூறுவர் நாவரசர்.

இவை தவிர, "இருள், மாசு, அழுக்கு, ஊனம், மூலநோய், ஆங்காரம், தீராதநோய்" என்றெல்லாம் ஆணவத்தைக் குறிப்பிட்டுள்ளார் நாவுக்கரசர். இவற்றுக்கான சில சான்றுகள்:

"*என்னை ஞாலத்து* **இருள்**அறுத்து *ஆண்டவன்"*

"**இருள்**அற *நோக்க மாட்டாக் கொத்தையேன்;"*

"*இருளாய உள்ளத்தின்* **இருளை** *நீக்கி"*

"*மனத்து* **இருளை**"

"*மனத்தினுள்* **மாசு** *தீர்ப்பார்"*

"**மாசினைத்** *தீர்ப்பர் போலும்!"*

"*உள்புக்குஎன் மனத்து* **மாசு** *கிளைவானை"*

"**ஊனம்**அது *எல்லாம் ஒழித்தான்"*

"**மூலநோய்** *தீர்க்கும் முதல்வன் கண்டாய்!*
*முத்தமிழும் நான்மறையும் ஆனான் கண்டாய்!"*

"*அனைத்துலகும் ஆளலா மென்று பேசும்*
**ஆங்காரம்** *தவிர்நெஞ்சே!"*

"**தீராதநோய்** *தீர்த்தருள வல்லான்தன்னை"*[36]

இத்தகைய 'ஆணவமலம்' பற்றிச் சைவ சித்தாந்த சாத்திர நூல்கள் விரிவாகப் பேசுகின்றன. அவற்றுட் சில வருமாறு;

"*......ஆன்மாச் சகசமலத் துணராது"*

என்றருளிய மெய்கண்டார்,

*"மாயா தனுவிளக்காம் மற்றுள்ளங் காணாதேல்*
*ஆயாதாம் ஒன்றை அதுவதுவாய் - வீயாத*
*வன்னிதனைத் தன்னுள் மறைத்தொன்றாங் காட்டம்போல்*
*தன்னைமலம் அன்றணைதல் தான்!"*[37]

என்றும் விளக்குவர்.

*"**ஆணவமாகிய** இருளில் நிற்கின்ற உயிர், மாயையின் காரியமாகிய உடம்பை விளக்காகக் கொண்டு, பொருள்களை அறியும். அவ்விளக்கு இல்லாவிடின், அஃது ஒரு பொருளையும் அறியமாட்டாது: அறியாமை உடையதாகவே இருக்கும்"*

என்பது இதன் பொருள்.

இதற்குப் பின்வருமாறு விளக்கம் தருவர் ஆ.ஆனந்தராசன்:

*"நெருப்பு எப்பொருளில் இருந்தாலும் அப்பொருளில் மறைந்து அப்பொருளாகவே நிற்குமன்றி, வெளிப்பட நில்லாது அது அதுவாய் நிற்றல் அதன் இயல்பு. அத்தகைய நெருப்பை விறகு, தன்னுள் மறைத்து வைத்துத் தான் ஒன்றே உள்ளது என்னும்படி நிற்கும். நெருப்பினைப் போன்றது உயிர். தான் சார்ந்த பொருளோடு ஒன்றித் தான் என்பது தோன்றாது அப்பொருளாகவே நிற்பது உயிரின் இயல்பு. அத்தகைய உயிரை '**ஆணவமலம்**' தன்னுள் பொதிந்து கொண்டு உயிர் என்பதொன்று இல்லை என்னும்படியாக மறைந்து நிற்கும்!"*[38]

மேலும், மெய்கண்டார்,

*"............அம்மலம் கழீஇ"*

என்றும் கூறுவர். "ஆணவம், கன்மம், மாயை என்னும் மலங்களைக் களைக" என்று பொருள். இதற்கான எடுத்துக்காட்டு வருமாறு:

*"புண்ணிய பாவம் பொருந்துமிக் கான்மியமும்*
*மண்முதல் மாயைகாண் மாயையும் - கண்ணிய*
*அஞ்ஞானங் காட்டுமிவ் **வாணவமும்** இம்மூன்றும்*
*மெய்ஞ்ஞானிக் காகா விடு"*[39]

**சிவஞானசித்தியாரிலும்,**

*"மருள்தன்றன் குணமதாகி மலம்அசித் தாகிநிற்கும்"*[40]

என. ஆணவமலத்தின் இயல்பு உரைக்கப்பட்டுள்ளது.

உயிரை முற்றிலும் மறைக்கும் ஆணவமலத்தின் 'ஆவாரக சத்தி' புற இருளைவிடக் கொடியது; புறஇருள், பிற பொருள்களைக் காணவொட்டாமல் தனது இருப்பையாவது புலப்படுத்தும்; ஆனால், ஆணவத்தின் ஆவாரக சத்தியோ, உயிர்களை மறைப்பதுடன் அவ்வாறு மறைக்கும் தன்னையும் மறைத்துக் கொள்ளும்! இதனால்தான், உமாபதி சிவாசாரியார், 'இருள்மல நிலை' எனும் ஓர் அதிகாரம் வகுத்து,

> "*ஒருபொருளுங் காட்டா திருளுருவங் காட்டும்*
> *இருபொருளுங் காட்டா திது*"

என்று கூறியதனோடமையாது,

> "*பலரைப் புணர்ந்தும்இருட் பாவைக்குண் டென்றும்*
> *கணவற்குந் தோன்றாத கற்பு*"[41]

என்றும் ஆணவத்தின் இயல்பைக் கடுமையாகக் கூறுகின்றார்.

> "*சைவ சிகாமணி மெய்யர் மெய்ய*
> **மும்மலஞ்** *சடமென மொழிந்தனை யம்ம!*"[42]

என்பது 'இருபா இருபஃது'.

> "......... *அறியாமை ஆணவமந் யான*
> *சுகதுக்கம்*"[43]

என்பது, 'உண்மை விளக்கம்' உரைப்பது.

> "*விரித்துமா* **ணவமறைத்து** *நின்ற தென்றும்*"[44]

என்பது 'சிவஞானதீபம்' கூறுவது.

> "**இருள்மலமும்** *எண்ணரிய சஞ்சிதமும்*"[45]

என்பது, பண்டார சாத்திரம்.

> "..........**மலம்** *உளதென்று,*
> *உணர்வரிதாய அதனுண்மை தெரிவரிதாம்!*"[46]

என்பது, சிவப்பிரகாசம்.

ஞானசம்பந்தப் பெருமான்,

> "**மலம்***அறுவகை மனநினைதரு மறைவன மமர்தரு*
> *பரமனே!*"[47]

என்றும்;

சுந்தரர்,

*"**மலம்**தாங்கிய பாசப்பிறப்பு அறுப்பீர்!"*[48]

என்றும்;

மணிவாசகப் பெம்மான்,

*"**சித்தமலம்** அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட*
*அத்தன்'*[49]

என்றும் மொழிந்துள்ளமை ஒப்புநோக்கத்தகும்.

நாவரசர், தம்மைக் கற்றுணைப் பூட்டிக் கடலிற் பாய்ச்சிய போது, நற்றுணையாம் 'நமசிவாய' எனும் நன்மந்திரம் ஓதி உய்ந்தமை முன்னரே சுட்டப்பட்டது. இதனைச் சேக்கிழார்,

*"இருவினைப் பாசமும் **மலக்கல்** ஆர்த்தலின*
*வருபவக் கடலில்வீழ் மாக்கள் ஏறிட*
*அருளுமெய் அஞ்செழுத் தரசை இக்கடல்*
*ஒருகல்மேல் ஏற்றிடல் உரைக்க வேண்டுமோ?"*[50]

என்று கூறியுள்ளமையும் முன்னர் உரைக்கப்பட்டது. இதற்கு வை.இரத்தினசபாபதி பின்வருமாறு ஒரு விளக்கம் தருகின்றார்:

*"இச்செய்யுளின் மூலம் அமைக்கப்பெறும் கருத்தினை நாம் வெற்றுவமையாகக் கொள்ளாமல், மெய்கண்ட சாத்திர நூல்களில் ஒன்றாகிய 'உண்மை விளக்கம்' என்ற நூலில், திருவதிகை மனவாசகங்கடந்தார், 'முத்தியிலும் ஆணவம் உண்டு' எனக் கூறிப், 'பேரின்பம் கொடுத்தலாகிய இறைவன் செயலையும் துய்த்தலாகிய உயிரின் செயலையும் விளைவிப்பது மலம்' எனக்கூறித், 'துன்பம் எல்லாவற்றுக்கும் காரணமாக இருந்த **ஆணவமலம் முத்தியில் இன்பவிளைவுக்குக் காரணமாகத் தன்னை மாற்றிக்கொண்டு செயல்படுகிறது**' எனக் கூறுவதற்கு உரிய மூலம் அப்பாடிகள் நிகழ்வும், தெய்வச் சேக்கிழார் வாக்கும் காரணமாக இருக்குமோ என்பதை அறிஞர்கள் ஆய்தல் வேண்டும்!"*[51]

இவ்வாறு இவர் கூறுதற்கு அடிப்படையாய் அமைந்திருப்பது பின்வரும் 'உண்மை விளக்க' வெண்பா :

*"முத்திதனின் மூன்று முதலும் மொழியக்கேள்*
*சுத்தஅநு போகத்தைத் துய்த்தல்அணு - மெத்தவே*
*இன்பங்கொ டுத்தல்இறை; **இத்தைவிளை வித்தல்மலம்***
*அன்புடனே கண்டுகொள்அப் பா!"*[52]

'ஆணவம்', மிகமிகக் கொடியது; ஆதலின் அதனைப் 'பொல்லாத ஆணவம்' என்றே அருளாளர்கள் கூறுவர். இவ்வாறு ஒரு பொருள் உண்டு எனச் சைவ சித்தாந்தம் மட்டுமே சொல்கின்றது. இறைவனது பேரருளாகிய ஒளிப்பிழம்பின் முன், இப்பொல்லாத ஆணவம், தன் நச்சுத் தன்மையிழந்து, வேறு வழியின்றி, அடங்கி ஒடுங்கிச் செயலற்றுக் கிடக்கிறது என்று கூறுவதுதான் பொருத்தமேதவிர, 'இன்ப விளைவுக்குக் காரணமாகத் தன்னை மாற்றிக் கொள்கிறது' எனல் பொருந்துமா என்பது சிந்தித்தற்குரியது.

## 5.2. கன்மம்

### 'கன்மம்' - ஒரு விளக்கம்

'பாசத்'துள் ஒன்றாகிய 'கன்மம்' குறித்து ந.சுப்புரெட்டியார் கூறுவது வருமாறு:

> "ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களும் ஆன்மாவுடன் சேர்ந்திருப்பதை நெல்லிலே 'முளை, தவிடு, உமி' சேர்ந்திருப்பதைக் காட்டி விளக்குவர் உமாபதிசிவம் ('நெல்லில் முளை தவிடும் போல் அநாதியாக நிறுத்திடுவர்; இது சைவம் நிகழ்த்துமாறே' சிவப்பிரகாசம் : 25.)
>
> முளையைப் போன்றது **கன்மம்**; தவிட்டைப் போன்றது மாயை; உமியைப் போன்றது ஆணவம். எனவே, அரிசி, ஆன்மாவிற்கு உவமையாகின்றது என்பது தெளிவு... நெல்லிலுள்ள முளைத்தல் ஆற்றல், முளையைத் தோற்றுவிப்பது போலக் '**கன்மமலம்**' உயிரினிடத்துச் சுகதுக்கங்களை முதற்காரணமாய் நின்று தோற்றுவிக்கும். தவிடு, முளைத்தற்கு அநுகூலம் செய்து உடன் நிற்குமாறு போல, மாயாமலம் அச் சுகதுக்கங்கள் தோன்றுவதற்குத் துணைக்காரணமாய்த் தன் காரியமாகிய தனுகாணம் முதலியவற்றையும் உயிரையும் அசைவித்து நிற்கும். உமி, அம் முளை தோன்றுவதற்கு நிமித்தகாரணமாயிருப்பது போல ஆணவமலம் அச்சுகதுக்கத் தோற்றத்திற்கு நிமித்தகாரணமாய் நின்று அவற்றை முறுகுவித்து உயிர் நுகருமாறு நிலைபெறுத்தும். இங்கு ஆன்மாவின் சுகதுக்கங்களுக்கு ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்று மலங்களும், நிமித்தம், முதல், துணை ஆகிய மூன்று காரணங்களாக அமைவது குறிப்பிடத்தக்கது......"[53] -

இக் கன்மம் குறித்துக் க.வச்சிரவேல் முதலியார் கூறுவதும் இங்குக் குறிப்பது பொருந்தும்:

> *"உயிர்கள் உடம்புகளோடு கூடியுள்ளபோது, மனமொழி மெய்களாற் செய்யும் நல்லனவும் தீயனவும் ஆய செயல்களே 'கன்மம்' எனப்படும். இச்செயல்கள் செய்யப்பட்டு மறையும்போது. செய்வோனுடைய புத்தியில் ஒருவகைப் பழக்கத்தை உண்டு பண்ணி மறையும். அப்பழக்கமே முதல்வனது ஆணையால் 'அறம்' எனவும்; 'பாவம்' எனவும் இருவகைப்பட்டு அப்புத்தியைப் பற்றி நிற்கும். இந்த அறம் பாவங்கள் பின். அப்புத்தி தொழிற்பட்டு ஒன்றனை நிச்சயிக்கும்போது. அந்த நிச்சய ரூபத்தை மாற்றி இன்ப, துன்ப நுகர்ச்சியைப் பயக்கும்!"*[54]

'கன்மம் - அநாதி' என்பது முன்னரும் சொல்லப்பட்டது. இதற்கு மறைமலையடிகள், "**கருமத்தின் இருப்பு** அநாதியேயன்றி, அஃது உயிரின்கட் பற்றியது அநாதியன்று!" என்று விளக்குவர்.[55]

இக் 'கன்மம்' என்பதன் பெயர்க்காரணம் குறித்தும் இதற்கு வழங்கும் வேறு சில பெயர்கள் குறித்தும் தே.ஆ. ஸ்ரீநிவாசாசாரியன் கூறுவது :

> *"மனம், வாக்கு, காயங்களால் செய்யப்படுவதால் '**கன்மம்**' என்பது பெயராயிற்று. பண்ணிய கன்மம் நசித்துப் பலம் உண்டாமளவும் புவனத்திலும், தைல வாசனை போலப் புத்தியிலும் தங்கிக் காணப்படாதிருப்பதால், '**அசிட்டம்**' என்பர். உடலாதிகளைப் பலவகையாய் உண்டாக்கு-வதனால் '**சனகம்**' என்பதும் இதன் பெயராம். எல்லாவற்றையும் தாங்குகையால் '**தாரகம்**' எனவும்; புசிக்கப்படுவதால் '**போக்கியம்**' எனவும் இது கூறப்படும்!"*[56]

### மூலகன்மம்

ஆணவத்தோடொப்ப அநாதி என்று சொல்லப்படும் கன்மத்தை '**மூலகன்மம்**' என்பர். "அது, 'நன்மை தீமை' என்று பாகுபாடு அடையாமல் பொதுவாய் நிற்கும். பின்னர் அது செயற்படும் காலத்தில், நல்வினையும் தீவினையும் என இரண்டு வகையாய்ச் சிறப்புற்றுச் செயல்பற்றிப் பலவாகித் திகழும்....... 'இல்லது தோன்றாது, உள்ளதே தோன்றும்' என்பது உண்மையாதலின் வினை ஒருவனால் செய்யப்படுவதற்கு முன்னும் உள்ளதேயன்றி இல்லாதது அன்று! முன்பு இயற்கையாய் உள்ள வினையைத்தான் பின்பு ஒருவன் செயற்கையாகச் செய்கின்றான். இயற்கையில் உள்ள வினை, 'காரண கன்மமும்', பின்பு அதனை ஒருவன்

செயற்கையாகச் செய்யும் வினை, 'காரிய கன்மமு'ம் ஆகும். 'காரண கன்மம்'தான் '**மூலகன்மம்**' என்று அடைமொழி தந்து விளக்குவர் சைவசித்தாந்திகள்!"[57]

கன்மத்திற்குப் பற்றுக்கோடு மாயை; இக்கன்மத்திற்கு இரண்டு நிலைகள் உண்டு : ஒன்று, 'காரணநிலை'; மற்றது, 'காரியநிலை'. செயல் நிகழாதபோதும், அது நிகழும் தன்மை, பொருளிடத்தில் இருப்பதைச் 'காரணநிலை' என்பர்; வெளிப்பட்டு நிகழும் நிலையைக் 'காரியநிலை' என்பர். சமய நூல்களில், 'காரணநிலை' '**மூலகன்மம்**' என்றும்; 'காரியநிலை' பொதுவாகக் 'கன்மம்' என்றும் சொல்லப்படும்.[58]

இம் 'மூலகன்மம்' பற்றித் தொல்காப்பியரே தம் நூலில் குறிப்பிட்டுள்ளார் என்பர் சி.அருணைவடிவேலு முதலியார்:

> *"ஆசிரியர் தொல்காப்பியனார், 'வினையே செய்வது' (தொல்.சொல்.வேற்.29)எனலும் சூத்திரத்தில் 'வனைந்தான்' என்பதில் செயதலாகிய அதற்கு, வனைதல் தொழில், செயப்படுபொருளாய்த் தொழில் முதல்நிலை எட்டனுள் தொழிலையும் ஒரு முதல்நிலையாகக் கொண்டார். அதனால் 'மூலகன்மம் உண்டு' என்பது அவரது கருத்தாதல் விளங்கும்!"[59]*

## மூவகை வினைகள்

வினைகள், மூவகையால் வைத்துப் பேசப்படும். அவை: சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம் என்பன.

முற்பிறவிகளில் செய்யப்பட்டுக் கிடக்கும் பழவினைகளின் தொகுதியைச் 'சஞ்சிதம், என்றும்; அத் தொகுப்பிலிருந்து இப்பிறவியிற் சென்று எடுத்துக் கொள்ளப்பட்டு வந்து, பயன் கொடுக்கும் வினைகளைப் 'பிராரத்தம்' என்றும்; இப்பிறவியில் அவ்வினைகளின் பயன்களைத் துய்க்கும்போது, மனம் மொழி மெய்களால் செய்யும் புதுவினைகளை 'ஆகாமியம்' என்றும் கூறுவர்.

சி.அருணைவடிவேலு முதலியார், இம் மூவகை வினைகள் பற்றிக் கூறுவது வருமாறு:

> *"காட்சிப் புலனாய் நிகழ்கின்ற செயல்கள் தூலகன்மமாய், '**ஆகாமியம்**' எனப்பெயர் பெறும்; தூல கன்மம், தான் பயன் தரும் வரையில் சூக்குமமாய் நிற்கும் பொழுது, '**சஞ்சிதம்**' எனப் பெயர் பெறும். அவ்வவ்உயிரின் சஞ்சிதம், அதனதன் புத்தியைப் பற்றி நிற்கும். சஞ்சிதத்தின் பக்குவப்பட்டுப் பயன்தரும் வினைகள், '**பிராரத்தம்**' எனப்*

*பெயர் பெறும். பிராரத்தம் தரும் பயன்கள் மூன்று. அவை: '**சாதி, ஆயு, போகம்**' என்பன. 'சாதி'யாவது இனம் (இது அவரவர் குடும்பச் சூழ்நிலையே ஆகும்). ஆயு - ஆயுள்: வாழ்நாள் அளவு. போகம் - நுகர்ச்சிப் பொருள்கள். சாதியைத் தரும் வினை '**சனகம்**' என்றும்; ஆயுளைத் தரும் வினை '**தாரகம்**' என்றும், போகத்தைத் தரும் வினை '**போக்கியம்**' என்றும் சொல்லப்படும். 'அபூர்வம், சஞ்சிதம், புண்ணிய பாவம்' என்பன ஒருபொருட் சொறகள்!*"[60]

இப்பிறப்பில், 'பிராரத்தவினை'யானது நன்மை, தீமை ஆகிய பயன்களைத் தானே நேர் நின்று தருவதில்லை; சிலரை அல்லது சிலவற்றை வாயிலாகக் கொண்டு பயன்தரும். ஒருவர் செய்த தீவினை, அவர்தம் மனைவி வாயிலாகவோ, அன்றி அவருடைய பிள்ளைகள் வாயிலாகவோ செயற்படுவது உலகியலிற் காணும் உண்மை. சில நேரங்களில் உரியவரையே வாயிலாகக் கொண்டு பயனை நுகர்வித்தலும் உண்டு.

வள்ளுவர், 'தீவினையச்சம்' என்றே ஒரு தலைப்பிட்டுப் பத்துக் குறட்பாக்களில் விளக்குவது அனைவரும் அறிந்ததே! "எத்துணைப் பெரிய பகையுடையாரும் அதனை ஒருவாற்றால் தப்புவர்; ஆனால் தீவினையாகிய பகையோ, நீங்காது, பிறவிதோறும் சென்று கொல்லும்" என்ற பொருளில்,

*"எனைப்பகை யுற்றாரும் உய்வர்* ***வினைப்பகை***
*வீயாது பின்சென் றடும்"*[61]

என அவர் மொழிந்தமை இங்கு எண்ணத்தக்கது.

*"தினை விதைத்தவன் தினை யறுப்பான்;*
*வினை விதைத்தவன் வினையறுப்பான்"*

என்பது தமிழகத்தில் வழங்கிவரும் பழமொழி. அவரவர் செய்த வினைப் பயன்களை அவரவரே நுகர்ந்து தீரவேண்டும். இதில் விதிவிலக்கோ, மன்னிப்போ கிடையாது என்பது பண்டைத் தமிழர் கொண்ட அறநெறி.

*"தீதும் நன்றும் பிறர்தர வாரா"*[62]

என்பது புறநானூறு. இவ்வுண்மை அறியாதோர், தமக்கு வரும் கேட்டிற்குப் பிறரே காரணம் என எண்ணி வெறுத்து, அவர்க்குக் கேடு சூழ்வர்; அதனால் மேலும் தீவினையைச் செய்தவராகின்றார். இதனால்தான், 'பிராரத்த வினை'யை ஒருவர் நுகர்கிறபோது, 'ஆகாமியவினை'யும் தேடிக்கொண்டவ ராகின்றார். இவ்வகையில் வினைத் தொடர்ச்சி நீண்டு கொண்டே போகின்றது!

*"முன்பிறவிகளில் ஈட்டப்பட்டு உள்ளதாகிய 'சஞ்சித வினை'யே உயிர் நுகர்தற்குரிய இன்பமும் துன்பமும் ஆகிய*

*பயன்களையும் அவற்றை நுகர்தற்கு இடமாகிய உடம்பையும் தோற்றுவிக்க, உயிர் அவ்வுடம்பைப் பொருந்தி அப்பயன்களை நுகரும். வினைப்பயன்களை நுகரும் முறையிலேயே புதிய வினைகள் தோன்றி, அடுத்த பிறவிக்கு விழுதாய் அமையும்'"[63]*

என்பர் ஆ.ஆனந்தராசன்.

## முதல்வனும் வினையும்

'வினைகள் அறிவற்றவை'; ஆதலின் அவை, தாமாகவே, தம்மைச் செய்தவரைச் சென்றடைந்து பயன்தரமாட்டா! அவை, எங்கோ ஓர் இடத்தில், என்றோ ஒருகாலத்தில், ஏதோ ஓர் உடம்பு கொண்டு செய்யப்படுகின்றன. செய்யப்பெற்ற செயல் அப்பொழுது நிகழ்ந்து அழிந்து விடுகின்றது. எனவே, அது பின்னர் என்றாவது, எங்காவது, எந்த உடம்பிலாவது பயன்தர இயலாது. அதனால் இறைவனே அவரவர் செய்யும் வினையை நடுவண் நின்று அவ்வவ் வினைக்குரிய பயனை, உரிய காலத்தில், உரிய இடத்தில், உரிய உடம்பில் கூட்டுவிப்பன். எவ்வுயிர்க்கு எப்பயனை எப்போது சேர்ப்பிக்க வேண்டும் என்பது இறைவனுக்குத் தெரியுமாதலின், அவ்வுயிர்க்கு அப்பயனை அவ்விடத்தில் அப்போது தப்பாமல் சேர்ப்பிப்பன். ஆங்ஙனமாயின், 'இறைவன் மிகக் கொடியவன்போலும்' என்ற எண்ணம் எழுதல் இயல்பு. அஃதன்று! உயிர்கள்மீது இறைவன் கொண்டுள்ள பெருங்கருணையே காரணம்.

*"வினை, உயிர், இறைவன் என்ற மூன்றில், 'வினை' சடம் ஆதலின், அது, தானே தன்னைச் செய்தவனைச் சென்றடையாது என்பது தெரிகிறது. உயிர் அறிவுடையதாயினும் அதன் அறிவு, அறியாமையால் மூடப்பெற்று விளங்காது கிடத்தலின், அதுவும் தான் செய்த வினையின் பயனை அறிந்து எடுத்துக்கொள்ள மாட்டாது என்பதும் தெளிவாகிறது. எனவே எஞ்சியுள்ளவனாகிய இறைவனே, வினைகளின் பயனைக் கூட்டுவிப்பன் என்பது பாரிசேடத்தால் துணியப்படும்!"[64]*

என்பர் ஆ.ஆனந்தராசன்.

இறைவன், உயிர்கட்கு வினைப்பயனை ஊட்டுவிக்க அவனது கருணையே காரணம் என்று மேலே குறிக்கப்பட்டது. அதனை மேலும் விளக்குவது பொருந்தும். ந.சுப்புரெட்டியார் தரும் விளக்கம் இங்குக் குறிக்கத்தகும் :

*"இறைவன் உயிர்கட்கு வினைப்பயனை ஊட்டுவித்தற்குக் காரணம், அவைகளைப் பிணித்துள்ள ஆணவமலத்தைப்*

போக்குதல் வேண்டும் என்னும் திருவுள்ளக் கருத்தே யாகும்.... உயிர்கள் 'எல்லாவற்றிற்கும் இறைவனே முதல்வன்' என்பதை மறந்து, 'எல்லாவற்றிற்கும் தாங்களே முதல்வர்' என்று எண்ணும் செருக்கினால் செய்யப்பெறும் செயல்களே 'வினை' எனப்படுவன; ...இம்மறதியும் செருக்கும் ஆணவமல மறைப்பினால் வருவன.... வினையை உயிர்கள் தவறாது அனுபவிக்க அனுபவிக்க அவை தமது அறியாமை நீங்கி இறைவனை அறியும் அறிவைப்பெறும். இறைவன், வினைப்பயனை ஊட்டுவித்தல், மருத்துவர் நோயாளிக்கு மருந்து கொடுத்தல் போன்றது. ஆணவமலம், உயிர்கட்கு உள்ள நோய் ஆகும். அதற்கு மருந்தாய் உள்ளவை வினைப் பயன்கள். மருந்துகளில் சில இனிக்கும்; சில கசக்கும். நல்வினைப் பயனாகிய இன்பம், இனிப்பான மருந்தை உண்பது போன்றது; தீவினைப் பயனாகிய துன்பம் கசப்பான மருந்தை உண்பது போன்றது. இன்னும் சில வேளைகளில் அறுத்துக் கீறிச் சுட்டுச் செய்யும் சிகிச்சைகளும் நிகழும் சந்தர்ப்பங்களும் ஏற்படுகின்றன அல்லவா? இங்ஙனமே மிகப்பெரிய துன்பங்களையும் மிகப்பெரிய பயனாக இறைவன் ஊட்டுவிப்பான். ஆருயிர்கள் இவற்றைத் தாங்கிக் கொள்ளத்தான் வேண்டும். .......சுருங்கக் கூறின், ஆருயிர்களின் மீது எல்லையற்ற கருணையையுடைய இறைவன், ஆணவத்தின் ஆற்றல் கெடுதற் பொருட்டே வினையின் பயனை ஊட்டுவிப்பான்!'[65]

வள்ளுவப் பெருமான், 'ஊழ்' என்றதோர் தனி அதிகாரமே வகுத்துள்ளார். அதற்கு உரைகூறவந்த பரிமேலழகர், "ஊழ் அஃதாவது இருவினைப்பயன் செய்தவனையே சென்றடைதற்கேதுவாகிய நியதி. ஊழ், பால், முறை, உண்மை, தெய்வம், நியதி, விதி யென்பன ஒருபொருட்கிளவி என்று கூறியதனோடமையாது,

"வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்த லரிது"

என்ற குறளுக்கு உரை கூறுங்கால்,

"ஓருயிர் செய்த வினையின் பயன், பிறிதோருயிரின்கட் செல்லாமல், அவ்வுயிர்க்கே வகுத்தலின், வகுத்தான் (தெய்வம்) என்றார்!"[66]

என விளக்குவது சைவ சித்தாந்தக் கருத்துக்கு அரணாகவுள்ளது.

இத்தகைய வினைக் கேட்டினின்று உய்தி பெறுதற்கும் வழியுண்டு. "நாம் செய்த வினையை நாமே நுகர வேண்டும்" என்று எண்ணி, எந்த ஒரு பொருள்மீதும் விருப்போ, வெறுப்போ காட்டாமல், 'இறைவனது திருவருள் ஒன்றே கதி' என்று கருதி அதனையே நோக்கி நிற்றல் வேண்டும்.

இவ்வாறு திருவருளில் திளைத்து நிற்கும் அருளாளர்கட்குப் 'பிராரத்த வினை'யின் தாக்குதல் இல்லை. அஃதாவது அவர்களுக்கு 'இன்ப, துன்பம இருந்தாலும், அவற்றில் அழுந்தி நிற்க மாட்டார்கள் என்பதாம். 'பிராரத்தவினை' ஒழிந்தால் 'ஆகாமிய வினை'யும் தானாகவே இல்லா தொழியும். ஒருகால், 'பிராரத்தவினை'யின் தாக்குதல் இருந்தாலும், அது 'வாசனை அளவே'யாம். அதனாலும் 'ஆகாமிய வினை' தோன்றலாம். ஆனால், அருளாளர்கள், சிவத்தை விடாது பற்றி நிற்பர் ஆதலின், அந்த மெய்யுணர்வு, ஆகாமியத்தை ஓட்டிவிடும்.[67]

> *"உலகம் நிலைபெற்றுள்ள காலத்தில், அவற்றில் பிறந்தும், இறந்தும்,* **வினைகளை** *ஈட்டியும், அவற்றின் பயனை நுகர்ந்தும் வரும் உயிர்கள், மேலும் அவ்வாறு செயற்படுதற்கு இடையே சிறிது காலம் இளைப்பாறுதற் பொருட்டு உலகம் ஒடுங்கவும் வேண்டும்!"*[68]

என, உலக ஒடுக்கத்திற்கு 'வினை நுகர்ச்சி'யும் ஒரு காரணம் என விளக்குவர் சி.அருணைவடிவேலு முதலியார்.

### திருநாவுக்கரசர் தேவாரத்தில்!

இவண் சொல்லப்பட்ட 'கன்மம்' அல்லது 'வினை' பற்றிய பல்வேறு கருத்துக்களையும் திருநாவுக்கரசர், ஒல்லும்வாயெல்லாம் எடுத்துரைக்கின்றார். சைவ சமய வேளாண் மரபில் தோன்றியுங்கூட, அவரது வினைப்பயன், புறச்சமயம் சார வைத்தது. எனவே, வினையைப் பற்றிப் பெரும்பாலான பாடல்களில் வற்புறுத்தி உரைக்கின்றார் எனலாம்.

'வினை'யைப் பல்வேறு அடைமொழி கொடுத்துக் கூறுகின்றார் நாவரசர்:

வல்வினை, கடுவினை, அருவினை, செய்வினை, கொடுவினை, பொருவினை, திண்ணென்வினை, பெருவினை, சூழ்வினை, பொல்லாவினை[69] என்றெல்லாம் வினையின் கொடுமையைக் குறிக்க இத்தகு அடைமொழி கொடுத்தார் எனலாம்.

"**வினைகளால்** *நலிவுணாதே*"

"*கள்ளமே* **வினைகள்** *எல்லாம்*"

"**வினைகள்** *தீர்க்கும்*"

"உடலின் **வினைகள்**"[70]

எனப் பன்மையிற் கூறும் நாவரசர்,

"வினைச்**சுற்றம்**"

"வினையெனும் **சரக்குக்** கொண்டேன்!"

"வினைப்**பகை**"

"வினைக்**கடல்** நீங்கி"[71]

என, வினைகளின் கடுமையையும் சுட்டுகின்றார்.

வினைகளில் அழுந்தியமையால் இறைவனைப் போற்றாத தம் நிலைக்கு இரங்கிய நாவரசர், "ஈசனே! இப்பிறவியில் நுகரப்படுகின்ற '**பிராரத்தவினை**'யும், எஞ்சியுள்ள '**சஞ்சிதவினை**'யும், இப்பிறவியில் பெருக்கும் '**ஆகாமியவினை**'யும் வாழ்நாள் முடிவுறுதலைக் காட்டும் நரைத்த முடியும், முதுமையும் கொண்ட உடம்பும் ஆகியவற்றைச் சிந்தனை செய்யாதவனானேன்! வினைகளைப் போக்கிக் கொள்ளாதவனானேன்! கங்கையைச் சடைமுடியுள் தாங்கிய சிவபெருமானே! உம்முடைய திருவடியைப் போற்றாதவனாகி, உடல்நைந்து, இருமல் கொண்டு இழிநிலையிலுள்ளேன்! நான் எதற்கு இப்பிறவி எடுத்தேன்? இறைவா! நீரே அருள்புரிவீராக!" என்ற பொருள்படப் பின்வரும் திருப்பதிகத்தைப் பாடியுள்ளார்:

"விளைக்கின்ற **வினையை** நோக்கி
வெண்மயிர் விரவி மேலும்
முளைக்கின்ற **வினையைப்** போக
முயல்கிலேன்! இயல வென்றும்
திளைக்கின்ற முடியி னான்றன்
திருவடி பரவ மாட்டாது
இளைக்கின் றேன்இருமி யூன்றி
என்செய்வான் தோன்றி னேனே!"[72]

இருவினைகளாகிய 'நல்வினை, தீவினை'களையும்,

"தீவினை"

"செய்யும்இத் தீவினையே"

"மாய்ந்தன தீவினை"

"நல்வினை"

"நல்வினையும் தீவினையும்"

"நல்வினையும் தீவினையும் எல்லாம்"[73]

என்னும் தொடர்களால் குறிப்பர் நாவரசர்.

முற்பிறவிகளிற் செய்யப்பட்டுக் கிடக்கும் பழவினைகள், 'சஞ்சிதம்' எனப்படும் என்பது முன்னர்க் கூறப்பட்டது. அப் 'பழவினை'யாகிய 'சஞ்சிதம்' குறித்தும் நாவரசர் குறிப்பிடுகின்றார்.

*"முன்பிருந்த வினை"*

*"பழவினைப் பரிசிலேனே!"*

*"பண்டைஎன் வினைகள்"*

*"தொல்வினைக் குழியில் வீழ்ந்து"*

*"தொண்டனேன் பிறந்து வாளாத்*
*தொல்வினைக் குழியில் வீழ்ந்து"*

*"முன்னைஎன் வினையி னாலே*
*மூர்த்தியை நினைய மாட்டேன்!"*

*"பந்தித்து நின்ற பழவினை"*

*"தொல்லை வல்வினை"*

*"பண்டை வல்வினை"*

*"பண்டு செய்த பழவினை யின்பயன்*
*கண்டுங் கண்டுங் களித்திகாண் நெஞ்சமே!'*

*"பண்டை வல்வினை பற்றறுக் கும்வகை"*

*"பண்டுநீர் செய்த பாவம்"*

*"முந்திய வல்வினைகள்"*[74]

என்றெல்லாம் பல்வேறு பாடல்களில் குறிப்பிடுகின்றார். இவை தவிர, 'ஊழ்வினை' என்ற தொடரையே எடுத்தாள்கின்றார் அப்பரடிகள்.

*"......பல பத்தர்கள்* **ஊழ்வினை**
*அறுவிப் பார்"*

*"சூழுலகில்* **ஊழ்வினை***வந் துற்றா லென்னே!"*[75]

என்பன சான்றுகள்.

இனிப் 'பிராரத்தம்', 'ஆகாமியம்' ஆகிய வினைகள் குறித்தும் ஆங்காங்கே குறிப்பிட்டுச் செல்கின்றார் நாவரசர்.

*"அளித்து வந்தடி கைதொழுபவர்*
*மேல்வினை கெடும்....."*

எனும் பாடலுக்கு வ.த.இராமசுப்பிரமணியம் கூறும் உரை வருமாறு:

"புனித தீர்த்தம் ஆடிப் பெருமானை ஏத்தும் அடியவர்களுடைய வினை நீங்கப்பெறுதல். 'கைதொழுபவர் மேல்வினை கெடும்' என உணர்த்தப் பெற்றது. உயிரைப் பற்றி எஞ்சியுள்ள **சஞ்சிதவினை** கெடும் என்பதைச் சுட்டிற்று. இது, இப்பிறவியில் பற்றி மேவும் **ஆகாமியம்** என்னும் வினையையும் உணர்த்தும். இது. மறுமைக்கு உரிய வினையை இல்லாமையாக்கும் என்பதாம். இப்பிறவியின்கண் **பிராரத்தவினை**யினால் இதுவரை கழிந்தது போக எஞ்சியுள்ள காலங்களில் நுகருவதற்கு விதிக்கப்பெற்ற வினை யாவும் கெடும்."[76]

நாவுக்கரசர், தாம் புறச்சமயம் சார்ந்து, இறைவனை நினையாமலிருந்து, வினைக்கொடுமைக்கு ஆட்பட்டு அடைந்த துன்பங்களை எண்ணுகின்றார். அதனால்தான், முதற்பதிகத்திலேயே,

"கொடுமைபல செய்தன நான்அறியேன்!"

என்றவர், "வீரட்டானத்துறை அம்மானே! பணிந்தாரன பாவங்கள் பாற்ற வல்லீர்!" என்றும்;

"தன்னைஅடைந் தார்வினை தீர்ப்ப தன்றோ
தலையாயவர்தம் கடன் ஆவதுதான்!"[77]

என்றும் முறையிடுகின்றார்.

"கட்டமே வினைக ளான காத்திரை நோக்கியாளாய்
ஒட்டவே யொட்டி நாளும் உண்மையுள் வைக்கமாட்டேன்!
பட்டவான் தலைகை யேந்திப் பலிதிரிந்து ஊர்கள்தோறும்
அட்டமாவு ருவினானே ஆவடுதுறையு ளானே!"[78]

என, வினைகளுக்கு ஆளாகி, இறைவனை ஒருநாள்கூட நினைந்து ஏத்தாமலிருந்த இழிநிலைக்கு இரங்கிப் பாடுகின்றார் நாவரசர்!

"படைகள் போல் வினைகள் வந்து
பற்றிஎன் பக்கல் நின்றும்
விடகிலா ஆத லாலே
விகிர்தனை விரும்பி யேத்தும்
இடையிலேன் என்செய் கேனான்
இரப்பவர் தங்கட்கு என்றும்
கொடையிலேன் கொள்வதேநான்
கோவல்வீ ரட்ட னீரே!"[79]

என, "வினைகள், படைகளைப் போல் தம்மை வந்து நெருக்குகின்றன என் செய்வேன்?" என ஏங்குகின்றார் நாவரசர்.

இறைவனது பேரருளால் தம் 'வல்வினை' எனும் பகை மாய்ந்தது என்பதை நாவரசர் பல பாடல்களில் குறிப்பிடுகின்றார்:

"கோலமா மங்கைதன்னைக் கொண்டொரு கோலமாய
சீலமே அறியமாட்டேன் செய்வினை மூடிநின்று
ஞாலமாம் இதனுள் என்னை நைவியா வண்ண நல்காய்
ஆலமா நஞ்சமுண்ட ஆவடு துறையு ளானே"[80]

எனத் தாம் செய்த வினைகள், தம்மை நலியச் செய்யாதவாறு காத்தருள வேண்டும் என இறைவனை வேண்டும் நாவரசர்,

"செம்மைவெண் ணீறு பூசும்
சிவனவன் தேவ தேவன்
வெம்மைநோய் **வினைகள் தீர்க்கும்**
விகிர்தனுக்கு ஆர்வம் எய்தி
அம்மைநின்று அடிமை செய்யா
வடிவிலா முடிவில வாழ்க்கைக்கு
இம்மைநின்று உருகு கின்றேன்
எனசெய்வான் தோன்றி னேனே"[81]

"பண்ணின் இன்மொழி கேட்கும் பாயலை
வண்ண நன்மல ரான்பல தேவரும
கண்ண னும்அறி யான்கடம் பந்துறை
நண்ண நம்**வினை யாயின நாசமே**"[82]

"...............அடியார் மேலைப்
பண்டை வினையறுப்பார் பைங்க ணேற்றார்
பலியேற்றார் பந்தணை நல்லூ ராரே"[83]

"பண்டை வினையறுப்பா யென்றேன நானே"[84]

"பண்டை வினைகள் அறுப்பாய போற்றி"[85]

எனத் தம் வினைகளை அறுத்த பேரருளாளன் சிவபெருமான் என்பதையும் குறிப்பிடுகின்றார்.

### மூவகை வினைகள்

"**அல்லல்** என்செயும் அருவினை என்செயும்!
**தொல்லை வல்வினைத்** தொடர்ந்தான் என்செயும்?
தில்லை மாநகர்ச் சிற்றம் பலவனார்க்கு
எல்லை இல்லதோர் அடிமைபூண் டேனுக்கே"[86]

என்னும் திருப்பாட்டில், "தில்லைச் சிற்றம்பலவன் எனப்படும் நடராசப் பெருமானுக்கு எல்லையற்ற அடிமை பூண்ட எனக்கு 'அல்லல்' ஆகிய

‘**பிராரத்த வினை**’ என்ன செய்யும்? ‘அருவினை’ எனப்படும் ‘**ஆகாமியம்**’ என்ன செய்யும்? ‘தொல்லை வல்வினை’ ஆகிய ‘**சஞ்சிதம்**’ தான் என்ன செய்யும்?” என்கின்றார்.

இப்பாடலில் இறைவனது பேரருளால் தமக்கு இம்மூவகை வினைத் துன்பமும் இல்லை எனத் தெளிவுபடக் கூறியுள்ளமை எண்ணத்தக்கது.

தம் அநுபவ உண்மையை ஏனையோரும் அறிந்து இறைவனை ஏத்தி வழிபட வேண்டும் என்னும் பரந்த நோக்கத்தால் அப்பர் அருளும் அருமைத் திருப்பாட்டு ஒன்று:

*“இம்மை அம்மை எனஇரண் டும்இவை*
*மெய்ம்மை தான்அறி யாது விளம்புவர்*
*மெய்ம்மை யால்நினை வார்கள்தம்* **வல்வினை**
**வம்மின்**! *தீர்ப்பர்கண் டீர்!வன்னி யூரரே!”*[87]

இப்பாட்டுக்கு வ.த.இராமசுப்பிரமணியம் தரும் உரை விளக்கம் வருமாறு:

*“இப்பிறவியை எடுத்து. வினைக்கு ஈடாக. நன்மை தீமைகளை நுகர்வதும். மீண்டும் இப்பிறவியில் செய்த ஆகாமிய வினைகளுக்கு ஏற்பவும், எஞ்சியுள்ள சஞ்சித கன்ம வினைக்கு ஏற்பவும், மீண்டும் பிறந்து மறுமையில் அவற்றின் பயன்களை மேவுதலும், நூல்களின் வாயிலாகக் கூறப்படும் மெய்ம்மையாகும். இதனை அறியாத தன்மையில், சிலர் விளம்புகின்றனர். இத்தகைய மெய்ம்மையை உணர்ந்து ஏத்துபவர்களின் வல்வினையைத் தீர்ப்பவர் இறைவன் ஒருவரேயாவர்! அவர், வன்னியூரில் வீற்றிருக்கும் பரமன்! வாருங்கள், அப் பரமனைக் கண்டு தரிசித்து ஏத்தி வணங்குங்கள்! அவர். உம் வினைகளைத் தீர்ப்பார்! இதனை உறுதியாக அறிவீராக!”*[88]

இங்குக் கூறிய ‘கன்மத்’தின் இயல்புகளைச் சைவ சித்தாந்தச் சாத்திர நூல்கள் விரிவாகப் பேசுகின்றன. அவற்றுள் சில வருமாறு:

*“அவையே தானே யாய்,* **இருவினையில்**
*போக்கு வரவு புரிய ஆணையின்*
*நீக்கம் இன்றி நிற்கும் அன்றே!”*[89]

என்பது மெய்கண்டார் திருவாக்கு. இதில், “இறைவன், உயிர்களை வினைக்கேற்பச் செயற்படுத்துதல்” இயம்பப்பட்டுள்ளது. மேலும் அவர்,

*“இனி. இவ்வான்மாக்களுக்கு* **இருவினை**
*முதல்வ னாணையின் வரும்!”*[90]

"அவனே தானே யாகிய அந்நெறி
ஏக னாகி இறைபணி நிற்க
மலமாயை தன்னொடு **வல்வினை** யின்றே!"[91]

"அவனருளா லல்லது ஒன்றையுஞ் செய்யா
னாகவே **அஞ்ஞானகன்மம்** பிரவேசியா!"[92]

என்றும் உரைப்பர்.

"வினையால் அசத்து விளைதலான ஞானம்
வினைதீர்ந்த அன்றி விளையா வினைதீர
ஞானத்தை நாடித் தொழுவே அதுநிகழும்
ஆனத்தார் அனபிற றொழு"[93]

என்று, 'பிராரத்தவினை' கழிதற்கான வழியினையும் மெய்கண்டார் கூறியுள்ளமையும் இவண் குறிக்கத்தகும்.

அருணந்தி சிவாசாரியார், தமது 'சித்தியார் சுபக்க' நூலில்,

"இருவினை யின்பத் துன்பத் திவ்வுயிர் பிறந்தி றந்து
வருவது போல தாகு மன்னிய வினைப் பயன்கள்
தருமான் றானரி யோடு தாரபதீ போலத் தாமே
மருவிடா வடிவுங் கன்மப் பலன்களு மறுமைக கண்ணே!"[94]

என, இருவினைப் பயன்களை நுகரும் முறைமை குறித்துக் கூறுவார்.

'சிவப்பிரகாச' நூலில்,

"மேலைக்கு வருவினைஏ தென்னில் அங்கண்
விருப்புவெறுப் பென அறிஅவ் வினையும் எல்லாம்
மூலத்த வினைப்பயில்வாம் எனனின் நாம்ஏன்
முற்றிஅதன் பயன்உனக்கு முளைக்கு மெனபர்
ஞாலதது வினைகள்இரு திறனாகும் புந்தி
நண்ணாத வினைநணுகும் வினையென வொனறிரண்டாய
ஏலத்தான் இதம்அகித மாம்இதனால் வழுவா(து)
எய்தியிடும் புண்ணியபா வங்க ளென்றே!"[95]

என வருவதும் இவண் ஒப்புநோக்கத்தகும்.

இத்தகு 'வினைகள்' குறித்து ஞானசம்பந்தரும் பிறரும் விரிவாக எடுத்துக் கூறியுள்ளனர். அவற்றுட் சில வருமாறு:

"அவ்வினைக் கிவ்வினை யாமென்று சொல்லு மஃதறிவீர்!
உய்வினை நாடா திருப்பது முந்தமக் கூனமன்றே!
கைவினை செய்தெம் பிரான்கழல் போற்றுதும் நாமடியோம்
செய்வினை வந்தெமைத் தீண்டப்பெறா திருநீலகண்டம்!"

"வினையாயின தீர்த்தருளே புரியும் விகிர்தன்"[96]

என்பன சம்பந்தர் தேவாரம்.

"குற்றொருவரைக் கூறைகொண்டு கொலைகள்சூழ்ந்த களவெலாம்
செற்றொருவரைச் செய்ததீமைக ளிம்மையே வருந் திண்ணமே!"[97]

என்பர் சுந்தரர்.

"முன்னை வினையிரண்டும் வேரறுத்து முன்னின்றான்
பின்னைப் பிறப்பறுக்கும் பேராளன் தென்னன்
பெருந்துறையில் மேய பெருங்கருணை யாளன்
வருந்துயரம் தீர்க்கும் மருந்து!"[98]

என்பது மணிவாசகர் திருவாக்கு!

"வினையா மசத்து விளைவ துணரார்
வினைஞானந் தன்னில வீடலுந தேரார்
வினைவிட வீடென்னும் வேதமும் ஓதார்
வினையாளர் மிக்க விளைவறி யாரே!"[99]

என்பது திருமந்திரம்.

இவையனைத்தும் 'கன்மத்'தைக் குறித்துச் சைவ சமயச் சான்றோர்கள் கூறிய அரிய மந்திரங்களாம்!

## 5.3. மாயை

### 'மாயை' - ஒரு விளக்கம்

'பாசம்' மூன்றனுள் 'மாயை' என்பது ஒன்று என முன்னரே சுட்டப்பட்டது. இம் 'மாயை' குறித்து முரு.பழ.இரத்தினம் செட்டியார் பின்வருமாறு விளக்குவர்:

"உலகத்துப் பொருட்கள் அனைத்தும் அழிகின்றன. அழிகின்ற பொருட்கள், மூலமாக இருக்க முடியாது. இப்பொருட்களுக்கு மூலமாக வேறொரு பொருள் இருந்தாக வேண்டும். இப்பொருட்களைப் பகுத்துக் கொண்டே சென்றால் அவை முடிவில் ஓர் ஆற்றலாக மாறுகின்றன என விஞ்ஞானம் கூறுகின்றது. இந்த ஆற்றலிலிருந்துதான் உலகப்பொருட்கள் அனைத்தும் உண்டாகி இருக்கின்றன என்பது விஞ்ஞானம் கண்ட

உண்மையாகும். இந்த ஆற்றலுக்கு 'யுனிவர்சல் காஸ்மிக் எனர்ஜி' (Universal Cosmic Energy) என விஞ்ஞானம் பெயரிட்டுள்ளது. சைவ சித்தாந்தம் இந்த ஆற்றலை **'மாயை'** எனக் கூறுகிறது. உயிர் பிரிந்ததும் உடலும் அறிவற்றதாக இருப்பதைக் காண்கிறோம். ஆகவே உலகத்துப் பொருட்களும் உயிர்கள் நின்று நிலவும் உடல்களும் மாயையில் இருந்தே உண்டாக்கப்பட்டன எனச் சைவ சித்தாந்தம் கூறுகிறது.[100]

'மா' என்பது 'ஒடுங்குதல்'; 'யா' என்பது 'வருதல்'. எனவே அனைத்துக் காரியங்களும் தன்னிடம் வந்து ஒடுங்குதற்கும், தன்னினின்றும் தோன்றுதற்கும் காரணமாய் நிற்பது ஆதலின் இதற்கு 'மாயை' எனும் பெயர் உண்டாயிற்று என ஞானியார் அடிகள் கூறுவர்.[101]

உயிர்களைத் தன்வசமாக்கி மயக்கும் தன்மையது ஆதலின் இதற்கு 'மாயை' என்னும் காரணப்பெயர் ஏற்பட்டதாகத் தே.ஆ. ஸ்ரீநிவாசாசாரியன் கூறுவர்.[102]

வடமொழியில் 'மாயா' எனவரும்; அது, தமிழ் முறைக்கேற்ப 'மாயை' என்றாகும் எனச் சிலரும்; 'மாய்' என்ற பகுதியிலிருந்து 'மாயை' என்ற சொல் தோன்றிற்று எனச் சிலரும்; 'மாய்தல் - மறைதல்'. எனவே உலகமாய்த் தோன்றி மறைவது எதுவோ அதுவோ 'மாயை' எனச் சிலரும் கூறுவர்.[103]

"சைவ சித்தாந்தத்தின்படி, 'மாயை' மெய்யாகவே உள்ளபொருள், அநாதி நித்தியம்; சடம்; இறைவனுக்குப் 'பரிக்கிரகசத்தி'யாய் இருப்பதும். இறைவனில் வியாப்பியம் ஒருவனுக்கு அவனின் வேறாய் உள்ள சத்தி, 'பரிக்கிரக சத்தி'யாகும். அவனில் வேறாகாது ஒன்றாய் இருக்கும் சத்தி, 'தாதான்மிய சத்தி' எனப்படும்."[104]

என்பர் சி.அருணைவடிவேலு முதலியார்.

"உலகில் பலவகையாகக் காணப்படும் பொருள்களாய்ப் பரிணமிக்கக்கூடிய பலவகைச் சத்திகளின் தொகுதியே 'மாயை' எனப்படுவது"[105]

என்பர் ந.சுப்புரெட்டியார்.

**'மாயை'யின் இயல்பு**

உயிர்களுக்குப் பிறப்பு நிலையில், அறியாமையும் அறிவும் ஒன்றோடொன்று மாறுபட்டு நிகழ்ந்து வருகின்றன. அறியாமைக்குக்

காரணம் 'ஆணவமலம்' என்பது முன்னர்க் குறிக்கப்பட்டுள்ளது. காணப்படும் உலகமே, உயிர்களின் அறிவை விளக்கி வளர்த்து வருகின்றது. அஃது இரண்டு பிரிவாக நின்று, உயிர் உணர்வை விளக்கியும், பெருக்கியும் வருகின்றது. ஒன்று, உடம்பு; மற்றொன்று, உடம்பின் சூழ்நிலையாகிய நிலமும், அதன்கண் உள்ள பொருள்களும் ஆகும்!

இந் நுட்பமுணர்ந்தே தொல்காப்பியரும், **'நிலத்'தை 'முதற்பொருள்'** எனக் கூறினாராதல் வேண்டும்.[106]

> *"இருட்டில் உள்ள கண்ணுக்குப் பொருள்களைக் காட்டும் விளக்குப் போல, நம் அறிவை விளக்கி வரும் உடம்பும் சூழ்நிலையுமாகிய உலகைத் 'தனு, கரணம், புவனம், போகம்' என நான்கு வகைப்பட வைத்து விளக்குவது சைவ நூல் மரபு. தனு உடம்பு; கரணம் மனம் முதலிய அகக்கருவிகள்; புவனம் உடம்புக்கு ஆதாரமாக உள்ள நிலம்; போகம் நிலத்தில் உள்ள நுகர்ச்சிப் பொருள்கள். காணப்படும் பொருள்களெல்லாம் இந்த நான்கு வகையில் ஒன்றாக அடங்கும். இவை அனைத்தும் '**மாயேயம்**' என்ற சொல்லால் குறிக்கப்படும். மாயேயம் மாயையின் காரியம். காணப்படும் பொருள்கள் எல்லாவற்றுக்கும் முடிந்த முதற்காரணமாக உள்ள பொருள் 'மாயை' எனப்படும்"*[107]

என்பர் க.வச்சிரவேல் முதலியார்.

உலகம் ஒடுங்குவது, தனது முதற்காரணமாகிய 'மாயை'யில் தான்! அது, மீளத் தோன்றுவதும், அந்த மாயையிலிருந்தேயாம். ஆனால், மாயையில் தோன்றி, மீண்டும் மாயையில் ஒடுங்குவதாகிய உலகத்தை, அம் மாயைக்கு ஆதாரமாயுள்ள சங்காரகாரணனிடத்தே தோன்றி மீண்டும் அவனிடத்தே ஒடுங்குவதாகக் கூறுவது மரபு. மேலும், மாயையானது, இறைவனது சக்தியை நிலைக்களமாகக் கொண்டு நிற்பதால், இறைவன் விரும்பியபடியேதான் உலகத்தைத் தோற்றுவிக்குமேயன்றித் தானாகவே தோற்றுவிக்காது என்பதும் அறியத்தக்கது.[108]

> *"ஒரே வார்த்தையில் சொல்லப்போனால், மாயையே மனித வரலாறாகிய நாடகம் நடிப்பதற்கேற்ற காட்சியை அளிக்கிறது....மாயையே நிலைக்களமாயின் ஒரு கர்த்தா எதற்கு எனக் கேட்டால், மாயை அறிவற்றது; ஆகவே தானே பொருள்களாகவும் உருவங்களாகவும் வளரமாட்டாது; அந்தக் கர்த்தாவும், மாயையின்றி ஒன்றையும் உண்டாக்கமாட்டான்! ஆகவே கடவுளாகிற*

*தலைவன் தன்னிச்சைப்படி அந்த மாயையினின்றும் வேண்டிய உருவங்களை உண்டாக்குவான். ஆகவே கர்த்தாத் தன்மையைக் கொடுப்பது மாயை என்று சொல்லமுடியாது*"[109]

என மாயைக்கும் முதல்வனுக்குமுண்டாய தொடர்பினை விளக்குவர் ர.ராமானுஜாசாரி.

மாயையின் பொருள்கள் மூலமே ஆன்மாவானது அறிவைப் பெறுகிறது; இல்லாவிடில், அறியாமை என்னும் இருளில் மூழ்கிக் கிடக்க வேண்டிவரும்! ஆனால் அந்த அறிவு 'பாசஞானமே'யாகும்! மாயை அளிக்கும் அறிவு, பெரும்பாலும், பிழையானது; அது, உலகத் தோற்றத்தில் அழுத்தும். ஆன்மாவை, 'ஆசை, வெறுப்பு, இன்பம், துன்பம்' ஆகிய உணர்வுகளில் குழம்பும்படிச் செய்து, கன்மத்தின் கீழ் வரும்படிச் செய்து, மறுபிறவிக்கும் கொண்டுபோய் விடுகிறது![110]

**மாயையின் வகைகள்**

'பானைக்கு மண்போல, உலகிற்கு முதற்'காரணம்' - 'மாயை'யாகும். எனவே, உலகிற் காணப்படும் பொருள்கள் அனைத்தும் இதன் 'காரியம்' ஆகும்.

இத்தகு மாயை இருவகைப்படும் : (1) **சுத்த மாயை**; (2) அசுத்த மாயை. இவற்றுள், 'சுத்த மாயை'யானது, 'ஆணவம், கன்மம்' இவற்றோடு கலவாதது. தன்னோடு தொடர்புடைய உயிர்களுக்கு இன்பம் தருவது; மயக்காது நின்று, பேரறிவையும் பேராற்றலையும் உதவுவது. முதல்வன் திருவருள் நேரேபற்றி நின்று தொழிற்படுத்துவதற்கு உரியது; தூய்மையான சிவத்துக்கும், உணர்வற்ற பொருளுக்கும் இடையே உள்ளது; நுண்பொருளாயிருப்பது.

'அசுத்த மாயை'யானது, 'ஆணவம், கன்மம்' இவ்விரண்டோடு கலந்திருப்பது; கலப்புற்ற இவ் அசுத்த மாயை, பருப்பொருளாயுள்ளது; அறிவற்றது. அது, தன்னிடமிருந்து பல்வேறுபட்ட தன்மைகள் தோன்ற, 'உடம்புகள், கருவிகள், உலகங்கள், பொருள்கள்' ஆகியவற்றை ஏற்படுத்துகின்றது. இன்ப, துன்ப, மயக்கம் எனும் மூன்றனையும் தருவது.

உடம்பும் உலகமுமாய் அமைந்த தத்துவங்களை 'அசத்து' என்று உணர்ந்து, அவற்றினின்றும் நீங்க, முதல்வனது திருவருள் துணையை நாடவேண்டும்!

தத்துவங்கள், ஐம்பொறி புலன்கள், அந்தக்கரணங்கள், உடம்பின் வகைகள், ஐந்து அவத்தைகள் எனும் பல்வேறுபட்டனவும், இம் 'மாயை'யில்

வைத்து விளக்குவர் அறிஞர். அவையெல்லாம் சைவ சித்தாந்த சாத்திர நூல்களில் விரிவாகக் காணலாம். ஈண்டு ஒருசிலவே உரைக்கப்பட்டன.

**திருநாவுக்கரசர் தேவாரத்தில்!**

நாவரசர், '**மலங்கள்**' என்று குறிப்பிட்டமை முன்னமே விளக்கப்பட்டது. எனவே, 'மும்மலங்களி'ல் ஒன்றான 'மாயை'யினையும் குறிப்பிட்டுள்ளார் என்று கருதலாம். எனினும், 'மாயை'யின் பல்வேறு இயல்புகளைப் பல பாடல்களில் குறித்துள்ளார் என்பதும் எண்ணத்தக்கது. அவற்றுட் சில வருமாறு:

*"பொள்ளத்த காய* **மாயம்** *பொருளினை"*

*"***மாயமும்** *தெளிய கில்லேன்!"*[111]

என்று கூறும் அப்பரடிகள்,

*"பஞ்ச பூத வலையிற் படுவதற்கு*
*அஞ்சி நானும் ஆமாத்தூர் அடிகளை*
*நெஞ்சி னால்நினைந் தேன்.நினைவு எய்தலும்*
*வஞ்ச ஆறுகள் வற்றின காண்மினே!"*[112]

என்னும் திருப்பாடல் மூலம் 'மாயாசக்திகளை'க் கூறியுள்ளார் எனலாம். இப்பாட்டுக்கு வ.த.இராமசுப்பிரமணியம் எழுதும் உரைவிளக்கம் வருமாறு:

*"ஐம்பூதங்களாகிய வலையில் சிக்குண்டு நான் அஞ்சி நிற்கும் காலத்தில் ஆமாத்தூரில் மேவும் அழகிய நாதனை நெஞ்சில் நினைத்தேன். அத்தகைய எண்ணமானது பதிந்தவுடன் என்னுள்ளத்தில் பெருகி யிருந்த வஞ்சனையாகிய மாயத்தன்மை யாவும் என்னைவிட்டு அகன்றன!"*

என்று 'தெளிவுரை' கூறிச் 'சிறப்புரை'யாக,

*"ஐம்பூதங்களால் ஆகிய இத் தேகத்தில், ஐமபுலன்கள் வழிப் பேராசைகள் தோன்றி அலைக்கழித்தலும்,* **ஆறுகோடி மாயா சக்திகள்** *வேறுவேறு வழியாகத் தமது* **மாயைகளைத்** *தொடரவும் செய்ய, ஈசன் திருநாமமாகிய ஒளியினது உள்ளத்தில் நின்று, ஆட்கொண்டு அருளும் பெற்றியினை, இத் திருப்பாட்டானது உணர்த்துவதாயிற்று!"*[113]

என்றும் கூறுவர்.

'மாயை'யின் 'காரியம்' எனப்படும் 'தனு, கரண, புவன, போகம்' பற்றிய குறிப்புக்களை அப்பர் தேவாரத்தில் காணலாம்:

"வெறுத்துகப் புலன்கள் ஐந்தும்
வேண்டிற்று வேண்டு நெஞ்சே"

"முடுகுவர் இருந்துள்ஐவர் மூர்க்கரேல் இவர்களோடும்
அடியனேன் வாழமாட்டேன் ஆரூர் மூலட்டனீரே"[114]

என்பன, ஐம்புலன்கள் பற்றியன.

"................சுடர்த் தீ யாகிச்
சூழ்காற்றாய் நீராகிப் பாரா யினாரை"
"......நிலனாகி நெருப்பாய் நீராய்
நிறைகாற்றாய் இவையிற்றின் நியமமாகி"[115]

என்பன 'அசுத்த மாயை' பற்றியன.

"இவ்வுடம்பானது 96 தத்துவங்களைக் கொண்டு மேவ அதற்குத் தலைவராக ஐம்புலன்கள் வந்து, 'அதனைத் தருவாயாக', 'இதனை விட்டுவிடு' என்று நலிவு செய்ய, நான் உய்யும் நெறியை அறியாதவனானேன். செம்மேனியராகத் திகழும் திருப்புகலூரில் வீற்றிருக்கும் ஈசனே! தேவரீரே! அருள்புரிவீராக!" என்னும் பொருள்பட அமைவது பின்வரும் பாடல் :

"முப்பது முப்பத்தாறு
முப்பதும் இடுகு ரம்பை
அப்பர் போல் ஐவர் வந்து
அதுதரு கிதுவி டென்று
ஒப்பவே நலிய லுற்றால்
உய்யுமா றறிய மாட்டேன்
செப்பமே திகழு மேனித்
திருப்புக லூர னீரே"[116]

- இதில் 96 தத்துவங்களைக் குறிப்பிடுகின்றார் நாவரசர்!

"அருந்துணையை அடியார்தம் அல்லல் தீர்க்கும்
அருமருந்தை அகன்ஞாலத் தகத்துள் தோன்றி
வருந்துணையுஞ் சுற்றமும் பற்றும் விட்டு
**வான்புலன்கள் அகத்தடக்கி** மடவா ரோடும்
பொருந்தணைமேல் வரும்பயனைப் போக மாற்றிப்
பொதுநீக்கித் தனைநினைய வல்லோர்க் கென்றும்
பெருந்துணையைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே!"[117]

என்னும் அப்பர் தேவாரம், 'மாயை நீக்கத்'தைக் குறிப்பதாம்.

**இன்னும் இவைபோல் எண்ணிலாப் பதிகங்கள் உள்ளன!**

**ஞானசம்பந்தப் பெருமான்.**

*"புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி*
*அறிவழிந்திட் டைம்மே லுந்தி*
*அலமந்த போதாக அஞ்சேலென் றருள்செய்வான்!"*[118]

**என்றும்;**

**சுந்தரர்,**

*"பொள்ளலிவ் வுடலைப் பொருளென்று பொருளுஞ்*
*சுற்றமும் போகமுமாகி*
*மெள்ள நின்றவர் செய்வன வெல்லாம் வாராமே*
*தவிர்க்கும் விதியானை"*[119]

**என்றும்;**

**மணிவாசகர்,**

*"புலன்கள் திகைப்பிக்க யானும்*
*திகைத்திங் கொர் பொய்ந்நெறிக்கே*
*விலங்குகின் றேனை விடுதிகண*
*டாய!"*[120]

**என்றும் கூறுவன இங்கு ஒப்புநோக்கத்தகுவன.**

இம் 'மாயை' பற்றிச் சைவ சித்தாந்த சாத்திர நூல்கள், மிக விளக்கமாகவும் விரிவாகவும் உரைக்கின்றன. அவற்றுட் சில இவண் சுட்டத்தகும்.

*"வித்துண்டா மூல முளைத்தவா தாரகமாம்*
*அத்தன்தாள் நிற்றல் அவர்வினையால் வித்தகமாம்*
*வேட்டுவனாம் அப்புழுப்போல் வேண்டுருவைத்*
*தான்கொடுத்துங்*
*கூட்டானே மண்போற் குளிர்ந்து"*[121]

என்பது சிவஞானபோதம்.

*"விதையானது. நிலத்தினுட் பொருந்திக் கிடப்பது போல, முதற் காரணமாகிய மாயை தனக்கு நிலைக்களமாகிய சிவனது சத்திக்குள் பொருந்தி நிற்கிறது. நிலம் குளிர்ந்த பொழுது அவ்விதையினின்றும் முளை தோன்றுவது போல,*

*அச் சிவசத்தி விரும்பியபொழுது அம் மாயையி னின்றும்*
*உலகம் தோன்றும்*"[122]

என்பது இதன் பொருள்.

**மேலும்,**

"*மாயா தனுவிளக்காய் மற்றுள்ளங் காணாதேல்*
*ஆயாதாம் ஒன்றை*"[123]

என்றும்;

"*மலமாயை தன்னொடு வல்வினையின் றே*"[124]

என்றும் கூறுவர் அருளாளர் மெய்கண்டார்.

"*மாயையே யான்ம ஞானக் கிரியையை மறைத்து நிற்கும்*"

"*மாயையின் காரியத்தை மாயேய மலமதென்றும்*"[125]

என்பது சித்தியார்.

"*மாயைதான் அசித்து நுவாய மருவ மாட்டாது*"[126]

என்பது சிவப்பிரகாசம்.

"*விடிவா மளவும் விளக்கனைய மாயை*
*வடிவாதி கன்மத்து வந்து*"[127]

என்பது திருவருட்பயன்.

இவ்வாறே சாத்திர நூல்களில் 'மாயை' பற்றிய விளக்கங்கள் பரக்கக் காணலாம்.

## முடிபுகள்

இவ் ஆய்வுக்கட்டுரை வாயிலாக அறியத்தகும் முடிபுகளாவன:

1. "பாசம், கட்டு, தளை, கயிறு, மலம், மாசு, அழுக்கு" முதலாயின, ஒருபொருட் கிளவிகள்;
2. சைவ சித்தாந்தம் கூறும் பாசங்களாகிய 'ஆணவம், கன்மம், மாயை' எனும் இம்மூன்றும் 'அநாதி'; இவ்றோடு, 'மாயேயம், திரோதானம்' என்னும் இரண்டனையும் சேர்த்து, 'மலம் ஐந்து' எனக் கூறுவதும் உண்டு;
3. உயிரை அணுத்தன்மைப்படுத்துவது 'ஆணவம்';
4. உயிர் உள்ளவன்றே ஆணவமும் அதனோடு பொருந்தி, அதனறிவு தோன்றாதவாறு மறைத்து நிற்கிறது;

5. ஆணவத்திற்கும் 'சொரூப, தடத்த இலக்கணங்கள்' உண்டு;

6. உயிர்க்குப் பகைஆணவமே; அஃது ஒன்றே எனினும் எண்ணிறந்த சத்திகளைக் கொண்டது;

7. ஆணவமலத்திற்குக் 'காரணநிலை, காரியநிலை' எனும் இருவகை நிலைகள் உண்டு; காரணநிலையில் உயிர்களைச் செயற்படவிடாமல் தடுக்கும்; காரியநிலையில், 'மோகம், மதம்' முதலான ஏழு வகைகளைக் கொண்டிருக்கும்;

8. திருநாவுக்கரசர், இவ் 'ஆணவமலம்' பற்றிப் பலவாறு குறிப்பிட்டுள்ளார்;

9. ஆணவத்தோடொப்ப 'அநாதி' என்று சொல்லப்படும் கன்மத்திற்கு 'மூலகன்மம்' என்று பெயர்; அது, செயற்படுங்கால், 'நல்வினை, தீவினை' எனும் இரண்டாகிப் பலவாறு திகழும்;

10. வினைகள், 'சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம்' என மூவகைப்படும்;

11. வினைகள் அறிவற்றன; எனவே அவை, தாமாகவே உயிர்களைச் சென்றடையா. இறைவனே தன் கருணையால் அந்தந்த உயிர்க்கு அந்தந்த வினைப்பயனைக் கூட்டுவிப்பன்;

12. 'இறைவனது திருவருளை' விடாது பற்றி நின்றால், வினைக்கேட்டினின்றும் மீள முடியும்;

13. திருநாவுக்கரசர் தேவாரத்தில் இவ் 'வினைகள்' பற்றிய குறிப்புக்கள் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன;

14. உயிர்களைத் தன் வசமாக்கி மயக்குந் தன்மையது 'மாயை'; அனைத்துக் காரியங்களும் தன்பால் வந்து ஒடுங்குதற்கும், தன்னினின்று தோன்றுவதற்கும் காரணமாய் இருப்பது 'மாயை';

15. சங்கார காரணனாகிய முதல்வன் விருப்பப்படியேதான் மாயையும் உலகைத் தோற்றுவிக்குமேயன்றித் தானாகத் தோற்றுவிக்க இயலாது;

16. 'சுத்தமாயை, அசுத்த மாயை' என மாயை இருவகையில் வைத்துப் பேசப்படும். 'ஆணவம், கன்மத்'தோடு கலவாதது 'சுத்த மாயை'; கலந்திருப்பது 'அசுத்த மாயை';

17. தத்துவங்கள், பொறிபுலன்கள், அந்தக் கரணங்கள், உடம்பின் வகைகள், அவத்தைகள் போல்வனவெல்லாம் இம் 'மாயை'யுள் வைத்துச் சைவ சித்தாந்தம் பேசும்;

18. திருநாவுக்கரசர் தேவாரத்தில் இம் 'மாயை' பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன;

19. நாவுக்கரசர் கூறிய இம் 'மும்மலங்கள்' பற்றிய கருத்துக்கள் பிற திருமுறைகளிலும் சொல்லப்பட்டுள்ளன;

20. 'சிவஞானபோதம்' முதலான சாத்திர நூல்களில் இடம் பெற்றிருக்கும் இம், 'மும்மலக்' கருத்துக்களுக்கு நாவரசர் கூறும் இத் தேவாரப் பாக்களும், பிற சமயாசாரியர்கள் கூறும் திருமுறைக் கருத்துக்களும் மூலமாக அமைந்துள்ளன எனலாம்;

## சான்றெண் விளக்கம்

1 திரு.வி.கலியாணசுந்தரனார். திரு.வி.க.வின் சிவஞானபாடிய அணிந்துரை. (தனி வெளியீடு) பக்.12-13

2. மறைமலையடிகள். சிவஞானபோத ஆராய்ச்சி. ப.25

3. வ.ஆ.தேவசேனாபதி. சைவ சித்தாந்தத்தின் அடிப்படைகள். ப.57

4. கந்தரனுபூதி. 43 3-4

5. திருநாவுக்கரசர் தேவாரம். 4:588:1; 4:671 2 5 135 1 5 625 1, 6:318:1, 6 421 1 2, 6 445:2-3

6. சம்பந்தர் தேவாரம். 1 91:6.

7. திருவாசகம். 1 64.

8. தாயுமானசுவாமிகள். தேசோமயானந்தம். 1 4

9. ச. கங்காதரன். சைவ சித்தாந்த அடிப்படைக் கொள்கைகளும் வரலாறும். ப.100

10. திருமந்திரம். 3; 4:3.

11. திருநாவுக்கரசர் தேவாரம். 4:322:3.

12. சம்பந்தர் தேவாரம். 1:12:3:1-2

13. திருவாசகம். 19:7:3, 30 7:2; 48:2:2, 51:9:2

14. சிவஞானபோதம். சூத்.9 1

15. மேலது. சூத்.2 அதிகரணம்; 2 உதாரணம் உரை (ப.39)

16. மேலது.

17. ஆ.ஆனந்தராசன். சிவஞானபோதம் வழித்துணை விளக்கவுரை. பக்.54-56

18. ஸ்ரீநிவாசாசாரியன். தே.ஆ. (உ.ஆ). இருபா இருபஃது நூலின் விரிவுக்கட்டுரை. பக்.73,74,76,77.

19. சி.அருணை வடிவேலு முதலியார். சிவஞானபோத மாபாடியப் பொருள்நிலை விளக்கம். பக்.327-328.

20. ஆ.ஆனந்தராசன். மு.கா.நூல். பக். 129,130,137

21. மேலது. ப.161.

22 சிவஞான சித்தியார் சுபக்கம். 176,177.

23. திருமந்திரம். 2192.

24. ஆ.ஆனந்தராசன். மு.கா.நூல். பக்.100-101.

25. க.வச்சிரவேல் முதலியார், 'சைவம்', சைவமும் வைணவமும். ப.67.

26. முரு.பழ. இரத்தினம் செட்டியார், இதோ சைவ சித்தாந்தம் தெரிந்து கொள்ளுங்கள். பக்.21-22.

27. க.வச்சிரவேல் முதலியார். மு.கா.நூல். ப.67.

28. வ.ஆ. தேவசேனாபதி. மு.கா.நூல். ப.101.

29 ச. தண்டபாணி தேசிகர் (உ.ஆ.). பண்டார சாத்திரம்: சித்தாந்தப் பஃறொடை. ப.5

30. சி. அருணை வடிவேலு முதலியார். மு.கா.நூல். ப.326

31 மேலது. ப.295

32. மேலது. ப.297.

33. திருநாவுக்கரசர் தேவாரம். 4·684.

34. மேலது. 6:206.

35. மேலது. 6:234:4: 6:476:3-4.

36. மேலது. 6:895:3: 4:669:3; 6:544·1: 6:671,1: 4:331:4: 4 332:4; 6:672:3-4; 6.193·3; 6:240·1. 6:422:2: 6:548:3.

37 சிவஞானபோதம். சூத்.4:2: சூத்:4· அதிகரணம்:2· உதாரணம்.

38. ஆ.ஆனந்தராசன், மு.கா.நூல், பக்.96,97.

39 சிவஞானபோதம், சூத்.12:2: சூத்:12: அதிகரணம்: 1: உதாரணம்.

40. சிவஞான சித்தியார் சுபக்கம், 175:3.

41. திருவருட்பயன், 23,25

42. இருபா இருபஃது. 4:17-18.

43. உண்மை விளக்கம். 23:3.

44. சிவஞான தீபம், பொதுவியல்பு 36:2.

45. பண்டார சாத்திரம் : உபதேசப் பஃறொடை, 35

46 சிவப்பிரகாசம். 36:4.

47. சம்பந்தர் தேவாரம். 1·22.4:4.

48. சுந்தரர் தேவாரம், 82:6:1.

49. திருவாசகம். 51:1:3.

50. திருத்தொண்டர் புராணம். திருநாவுக்கரசு சுவாமிகள். 129.

51. வை. இரத்தினசபாபதி, திருமுறைத் தெளிவே சிவஞான போதம், ப.120.

52. உண்மை விளக்கம். 50.

53. ந.சுப்புரெட்டியார். சைவ சமய விளக்கு. பக்.194-195

54 க. வச்சிரவேல் முதலியார். மு.கா.நூல். ப.68.

55. மறைமலையடிகள். மு.கா.நூல். ப.26.

56. தே.ஆ. ஸ்ரீநிவாசாசாரியன், மு.கா.நூல், ப.83.

57. ந. சுப்புரெட்டியார். மு.கா.நூல். ப.200

58. ச. கங்காதரன். மு.கா.நூல். பக்.117-118

59. சி. அருணை வடிவேலு முதலியார். மு.கா.நூல். ப.334.

60. மேலது. ப.332.

61 திருக்குறள். 207.

62. புறநானூறு. 192 2

63 ஆ.ஆனந்தராசன். மு.கா.நூல். ப.51

64 மேலது. ப.53

65 ந.சுப்புரெட்டியார். மு.கா.நூல். பக்.209 210

66 திருக்குறள். 'ஊழ்' அதிகாரத் தலைப்பு. குறள்: 377 பரிமேலழகர் உரை

67. ஆ. ஆனந்தராசன். மு.கா.நூல். ப.273.

68 சி. அருணை வடிவேலு முதலியார். மு.கா.நூல். ப.235

69 திருநாவுக்கரசர் தேவாரம். 4 378.1: 4·379 3. 4 439 2. 4·506 2. 4 766 1. 4 846 3; 4 868 3 5 48 4. 5 705 2. 6 386 3

70 மேலது. 4 326.2. 4 659 3. 6 445 2. 6 565 1

71 மேலது. 4 262 1. 4 265 3 5 431:4 5 433 1

72 மேலது. 4 761

73 மேலது. 4·640:3. 4 830 4 4·911 1. 5 155 3 6 108 2 6 474 3

74 மேலது. 4·43·2. 4 280 4· 4 356 4. 4 650·1. 4 751 1. 4 767 1 4 883 3. 5 4 2. 5 72 4. 5·467·1-2; 5:597 1; 5 810 3. 6 293 1

75 மேலது. 5·155·2. 6 473 2

76. மேலது. 4:203· வ.த. இராமசுப்பிரமணியம் உரை.

77. மேலது. 4·1 1:3.4.

78. மேலது. 4 550

79 மேலது. 4·675.

80. மேலது. 4 555.

81 மேலது. 4:758

82. மேலது. 5:177

83. மேலது. 5·101.3-4.

84. மேலது, 6:377:3.

85. மேலது. 6:568:2.

86. திருநாவுக்கரசர் தேவாரம். 5 4

87. மேலது. 5·259.

88. வ.த. இராமசுப்பிரமணியம் (உ.ஆ.). மேலது. ப.178

89. சிவஞானபோதம். சூத்.2.

90. சிவஞானபோதம். அதிகரணம்:2: மேற்கோள்.

91. மேலது. சூத்.10.

92. மேலது. அதிகரணம் : 2 ஏது.

93. மேலது. சூத்.12. அதிகரணம்:4. உதாரணம்

94. சிவஞான சித்தியார் சுபக்கம். 94.

95. சிவப்பிரகாசம். 30

96. சம்பந்தர் தேவாரம் 1 116 1 1 70 7 1.

97. சுந்தரர் தேவாரம். 35 4 1 2

98. திருவாசகம் 17 4 (6 [illegible] 620)

99. திருமந்திரம். 255

100. முரு.பழ. இரத்தினம் செட்டியார். மு.கா.நூல். பக்.23.24.

101. ஞானியார் அடிகள். ஞானியார் அடிகள் நினைவு மலர். ப.135

102. தே.ஆ. ஸ்ரீநிவாசாசாரியன். மு.கா.நூல். ப.82.

103. சி. அருணை வடிவேலு முதலியார். ப.339

104. மேலது. ப.352.

105. ந.சுப்புரெட்டியார். மு.கா.நூல். ப.217.

106. தொல்காப்பியம் பொருளதிகாரம். அகத்திணையியல். 4

107. க.வச்சிரவேல முதலியார். மு.கா.நூல். பக்.69-70

108. ஆ.ஆனந்தராசன். மு.கா.நூல். பக்.28.29.

109. ர.ராமாநுஜாசாரி. சைவ சித்தாந்தம். பக்.77-78.

110. மேலது. பக்.80-81.

111. திருநாவுக்கரசர் தேவாரம். 4:304:1. 4:309:2.

112. மேலது. 5:439.

113. வ.த. இராமசுப்பிரமணியம். மு.கா.நூல். ப.287

114. திருநாவுக்கரசர் தேவாரம். 4:453:1: 4 498.3-4

115. மேலது. 6:267.2. 6:268:1.

116. மேலது. 4:520.

117. மேலது. 6:5.

118. சம்பந்தர் தேவாரம். 1.130:1-2.

119. சுந்தரர் தேவாரம். 59:6:1-2.

120. திருவாசகம். 57:28:1-2.

121. சிவஞானபோதம். சூத்.1 அதிகரணம்:2 உதாரணம்.

122. ஆ.ஆனந்தராசன். மு.கா.நூல். ப.29.

123. சிவஞானபோதம். சூத்.1:அதிகரணம்:2: உதாரணம்.

124. மேலது, சூத்.10:3.

# 6
# திருநாவுக்கரசர் தேவாரத்தில் 'நால்வகை நெறிகள்'

## முன்னுரை

திருநாவுக்கரசர் தேவாரத்தில், சைவ சித்தாந்தம் சிறப்பாகப் பேசும் 'நால்வகை நெறிகள்' குறித்த செய்திகள் இடம்பெற்றுள்ளன. அவைபற்றி ஒருசிறிது ஆராய்வது, இவ் இயலின் நோக்கம்.

## 'நால்வகை நெறிகள்' - ஒரு விளக்கம்

> *"இறைவன் வியாபகன். அவனைச் 'சிவன்' எனச் சைவ சித்தாந்தம் கூறும்...இறைவனுக்கு எந்த உருவமும் இல்லாவிட்டாலும், ஆன்மாக்கள் வழிபட்டு உய்யும் பொருட்டு 'அருவம், அருவுருவம், உருவம்' ஆகிய மூன்று திருமேனிகளை எடுக்கின்றான். இம்மூன்று திரு மேனிகளையும் கடந்த நிலை 'சொரூபம்' என்று கூறப்படும்......உருவத்திருமேனி வழிபாட்டைச் சைவ சித்தாந்தம் மிகவும் வலியுறுத்துகின்றது... உருவத்தை உடலால் வணங்குவது 'சரியை'; பூப்போடுதல், வலம் வருதல் முதலியன, சரியையின்பாற்படும். மந்திரங்களை ஓதுவது 'கிரியை'; மனத்தால் உருவத்தைத் தியானிப்பது 'யோகம்'; 'ஞானம்' இருவகைப்படும்: ஒன்று 'அபரஞானம்'; அது சித்தாந்த சாத்திரங்களை ஓதுவதன் வாயிலாக உண்டாகும்..... மற்றொருவகை ஞானத்திற்குப் 'பரஞானம்' என்று பெயர். சரியை, கிரியை, யோகங்களைச் செய்து வந்தால், 'மலபரிபாகம், இருவினையொப்பு, சத்தி நிபாதம்' ஆகிய மூன்றும் உண்டாகும்....நாம் பக்குவம் எய்தியதும், இறைவன் மானிடச் சட்டை போர்த்தியோ, சீவன்முத்தர் ஒருவரை அதிட்டித்தோ, குருநாதனாக வந்து ஞானத்தை வளர்ப்பான்!"*[1]

என்பது முரு.பழ. இரத்தினம் செட்டியார், 'நால்வகை நெறிகள்' குறித்துக் கூறும் விளக்கம்.

இந் 'நால்வகை நெறிகள்' குறித்துக் க.வச்சிரவேல் முதலியார் கூறுவதும் இங்குக் குறிக்கத்தகும் :

> "பாசப்பற்று விடுதற்பொருட்டு, முதல்வனைப் பற்றும் முறையே 'கடவுள் வழிபாடு' எனப்படும். அது 'பொதுவும் சிறப்பும்' என இருவகைப்படும். வழிபாடு பின்பற்றல், இறைவன் திருக்குறிப்பின்வழி நின்று ஒழுகுதல் 'வழிபாடு, பிறைநிலை' என்பவை ஒருபொருட் சொற்கள். 'பொது வழிபாடு' என்பது இறைவனது அருளாணை ஆகிய அறத்தின்வழி நிற்றல்.... 'சிறப்பு வழிபாடா'வது, முதல்வனது உண்மை யியல்பைத் தெளியக் கண்டு, அவனைச் சார்தலால், அவன்றன் அருட் குணங்கள் நம்மிடத்து மேம்பட்டு விளங்குமாறு ஒழுகும் ஒழுக்கம். இஃது அருள்நூல்களை ஓதி உணர்ந்து, அவற்றுள் கூறியபடி முதல்வனை வணங்குதல், வாழ்த்துதல், நினைதல், உள்நோக்கி உணர்தல் என்றும் வடிவில் நிகழ்த்தக்கது. இது **'சரியை, கிரியை, யோகம், ஞானம்' என நான்கு வகையில்** வைத்துணர்த்தப்படும்!"[2]

இந்நால்வகை நெறிகளும், முத்தி அடைவதற்குத் தேவையான அடிப்படை ஒழுக்க முறைகள் எனலாம். மும்மலச் சார்பால், உயிர்கள், பல்வகைப் பிறப்புக்களை எய்தி, இன்ப துன்பங்களுக்கு உள்ளாகின்றன. இவற்றினின்றும் நீங்கி, இறைவனின் பேரருளை அடைய இந் நெறிகள் துணைபுரிகின்றன. 'சரியை' முதலிய மூன்றும், 'ஞானத்'தை அடைவிக்கும்; முத்திப் பயனை எய்த இந்த 'ஞானமே' வாயிலாகும்!

> "வாழ்க்கையில் ஒவ்வொரு படியையும் கடந்த பின்னரே மேல்நிலைக்குச் செல்ல முடியும். அதுபோன்றே சமயத்துறையிலும் படிகள் உண்டு. ஊனில் அரும்பி, உணர்வுநிலையில் சாய்த்து, உயிரில் கலந்து நிற்கும் சமயமானது, படிப்படியாக அமைக்கப்பட்ட ஒன்று. 'சரியை, கிரியை, யோகம், ஞானம்' என்னும் நான்கும், சமயப்படிகளாகும்!"[3]

என்பர் ம.சா. அறிவுடைநம்பி.

'சரியை' முதலிய மூன்றும் 'ஞானத்'தின் வளர்ச்சி நிலைகள் எனும் உண்மையைத் தாயுமானவர்,

*"விரும்பும் சரியைமுதல்*
*மெய்ஞ்ஞானம் நான்கும்*
*அரும்புமலர் காய்கனிபோல்*
*அன்றோ பராபரமே!"*[4]

என்று கூறுவதால் அறியலாம்.

**'சரியை'**

உயிர்கள், இறைவனை உணர்ந்து, அவனுக்குப் பணி செய்ய வேண்டும் என்ற எண்ணம் மேலோங்கி நின்றால், அக்காலமே, அவ்வுயிர்கட்கு உய்வு உண்டாகும் காலம் எனலாம். அப் பணிகளால் 'இறைவனுக்கு நன்மை போலும்' என்று எண்ணிவிடலாகாது. அவன், உலகத் தலைவர்கள் போல் குறைபாடுடையனல்லன்; அவன், வரம்பில் இன்பம் உடையவன்; 'வேண்டுதல் வேண்டாமை இலான்'. ஆதலின், 'பணிகள்' என்பன, உயிர்கள் உய்தற்பொருட்டுச் செய்வனவாம் என உணர்தல் வேண்டும்.

இப்பணிகளின் தொடக்கம் 'சரியை' எனலாம். இதுகுறித்து ஆ.ஆனந்தராசன் விளக்குவது இங்குக் குறித்தல் சாலும்:

*"**சரியை** என்பது, சிவபெருமானது உருவத்திருமேனியை மட்டும் உணர்ந்து, அதனைப் புறத்தொழிலால்மட்டும் வழிபடுதல் ஆகும். திருக்கோயிலிற் சென்று புலர்வதன்முன் அலகிடுதல், மெழுக்கிடுதல், விளக்கேற்றுதல், மாலை கட்டிக் கொடுத்தல், தலையாரக் கும்பிட்டுக் கூத்தாடுதல், பாடுதல் முதலியன 'சரியை'யாகும். 'சத்தி நிபாதம்' மிக மெல்ல நிகழ்வதாகிய 'மந்த தரம்' என்னும் நிலையில் நின்றோர், 'சரியைத்' தொண்டினை விரும்பிச் செய்வர்!"*[5]

இவை தவிர, 'நந்தவனம் அமைத்தல், சிவனடியார்களைக் கண்டால் அவர்களை வணங்கி, அவர்களுக்குச் செய்ய வேண்டிய பணிகளைச் செய்தல்' ஆகியனவும் 'சரியை'யில் அடங்கும் என்பர்.[6]

*"சரியா மார்க்கம், ஆணவத் தடிப்பைக் குறைக்கும்;*
*இந்நிலையில் பெறும் வெற்றியானது, '**சாலோகத்**'தை*
*(கடவுளின் இருப்பிடத்தை) அளிக்கும். அதாவது*
*பக்தன், இம்மார்க்கத்தின் மூலம் ஈசனுலகை அடைகிறான்!"*[7]

என்பர் ர. ராமானுஜாசாரி.

'சாலோகம்' ஆவது, இறையுலகு எய்தி, அங்கு யாண்டும் தடையின்றி இயங்கி, அங்குள்ள போகங்களை நுகர்ந்து வாழ்தல் ஆகும். இச்

'சரியையாளர்'தம் நெறி, 'தொண்டு நெறி' அஃதாவது 'தாசமார்க்கம்' என்று சொல்லப்படும்.[8]

இச் 'சரியை' முதலான நெறிகளைக் கைக்கொள்ளுவதற்கும் சிவனருள் வேண்டும். ஆனால், உயிர்கள், ஆணவமலத்தால் கட்டுண்டு, அறியாமை இருளில் மூழ்கிநிற்கும் நிலையில், 'சரியை' முதலானவற்றை எண்ணிப் பார்க்கவும் செய்யா!

திருநாவுக்கரசர் இத்தகைய அறியாமையில் தாம் இருந்ததாக முதல் திருப்பதிகத்திலேயே கூறுகின்றார்:

*"முன்னம்அடி யேன்* **அறி யாமையினால்**
*முனிந்து என்னை நலிந்து முடக்கியிட....."*

*"என்போலிகள் உம்மைஇனித் தெளியார்!"*[9]

என்பன சான்றுகள். இறைவனின் அருள் இருந்தாலே இத்தகு நெறிகளை மேற்கொள்ள முடியும் என்பதை நாவரசர்,

*"ஞானம் காட்டுவர்* **நன்னெறி காட்டுவர்**
*தானம் காட்டுவர் தம்மடைந் தார்க்கெலாம்"*[10]

எனும் பாடலால் சுட்டுவர். அப்பரடிகள், தம் நெஞ்சுக்குக் கூறுவார்போல் 'சரியைத் தொண்டு' பற்றிப் பாடும் ஓர் அரிய திருப்பாட்டு:

*"நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே! நீவா*
*நித்தலும்எம் பிரானுடைய கோயில் புக்குப்*
*புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப்*
*பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்*
*தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்*
*சங்கரா சயபோற்றி போற்றி யென்றும்*
*அலைபுனல்சேர் செஞ்சடைஎம் ஆதி யென்றும்*
*ஆரூரா என்றென்றே அலறா நில்லே!"*[11]

நாவுக்கரசர், 'உழவாரப்பணி'யில் தலைநின்றவர் என்பது, அவரது வாழ்க்கை வரலாற்றில் சுட்டப்பட்டது. இறைவனுக்குத் தொண்டு செய்வதே தமது குறிக்கோள் என்கிறார்.

*"நங்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்*
*தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்*
*தன்க டன்அடி யேனையும் தாங்குதல்*
*என்க டன்பணி செய்து கிடப்பதே!"*[12]

என்பது அவரது வாக்கு.

இவ்வாறே, இறைவன், மனிதர்கட்குத் 'தலை, கண்கள், செவிகள், மூக்கு, வாய்' முதலான உறுப்புக்களை வழங்கியதன் நோக்கமாகத், "தலையே நீவணங்காய்!"[13] என்னும் பதிகத்தை அருளிச் செய்தார் நாவரசர்.

இத்தகு 'சரியை' நெறியை முறையே செய்ய வல்லார்க்கு எம்பெருமான், கரும்பினிற் கட்டி போல் இனிமை தருவார் என்கின்றார் வாகீசர்.

*"பெரும்புலர் காலை மூழ்கிப்*
*பித்தர்க்குப் பத்தர் ஆகி*
*அரும்பொடு மலர்கள் கொண்டாங்கு*
*ஆர்வத்தை உள்ளே வைத்து*
*விரும்பிநல் விளக்குத் தூபம்*
*விதியினால் இடவல் லார்க்குக்*
*கரும்பினிற் கட்டி போல்வார்*
*கடவூர்வீ ரட்ட னாரே!"*[14]

என்பது அவர் வாக்கு. மலர்களைச் சிவன் திருவடியில் வைத்து வணங்குங்கால், "இறைவா! எனது வாதை தீர்க்க!" என்று வேண்டினால் உய்வு கிட்டும் என்கின்றார் நாவரசர்.

*"போது தாதொடு கொண்டு புனைந்துடன்*
*தாத விழ்சடைச் சங்கரன் பாதத்துள்*
*'வாதை தீர்க்க' என்று ஏத்திப் பராய்த்துறைச்*
*சோதி யானைத் தொழுதுஎழுந்து உய்ம்மினே!"*[15]

நாவரசர், இறைவனைத் '**தோத்திரங்களா**'ல் துதித்தல் வேண்டும் என்கின்றார்.

*"..........தூ நீ ராட்டித்*
**தோத்திரங்கள்** *பலசொல்லித் தூபம் காட்டி"*[16]

என்பது சான்று. (நாவரசர், 'சாத்திரம் என்ற சொல்லையும் எடுத்தாள்வது எண்ணத்தக்கது : 'தோத்திரமும் சாத்திரமும் ஆனார் தாமே!' 6:778:2)

- இவ்வாறு பல பாடல்களிலும் 'சரியை' நெறி குறித்துப் பாடுகின்றார் வாக்கின் மன்னவராம் நாவரசர்.

**'கிரியை'**

'கிரியை' என்பதற்கு ந.சுப்புரெட்டியார் தரும் விளக்கம் இங்குக் குறிக்கத்தகும்:

*"சிவபெருமானின் அறிவுருவத் திருமேனியாகிய இலிங்க மூர்த்தத்தை அணுகியிருந்து, அதன்கண் அப்பெருமானை*

*'மந்திரம், கிரியை, பாவனை' என்ற மூன்றினாலும் அகத்திலும் புறத்திலும் பலவகை உபசாரங்களையும் முறைப்படி செய்து வழிபடுதலே* ***'கிரியை'*** *என்பது. திருமுழுக்கு (அபிடேகம்), ஆடை, அணிகலன், சந்தனம், மலர் முதலியவற்றால் செய்யும் ஒப்பனை (அலங்காரம்), படையல் (நிவேதனம்), புகை, ஒளி (தூபம், தீபம்), குடை, கொடி, கண்ணாடி, கவரி முதலிய மங்கலப்பொருள்கள் இவற்றை ஏற்பித்து, வலம் செய்தல், அடி பணிதல், புகழ்ச்சி (தோத்திரம்) என்பவற்றைச் செய்து வேண்டி நிற்றல் என்னும் இவ்வகை அணுக்கத் தொண்டுகள், 'கிரியை'யுள் அடங்கும். 'சரியை' நிலையிலும் திருமுழுக்கு முதலியவற்றைச் செய்யினும், அவை மேற்குறிப்பிட்ட 'மந்திரம்' மூன்றானும் அகத்தும் புறத்தும் நிகழாது, செயலளவில் புறத்துமட்டிலும் நிகழ்தலின் அவை 'கிரியை' எனப்படுதல் இல்லை!'*"[17]

இது, வழிபாட்டில் நிகழும் செயல்களைப் பற்றியது; மேலும் அகத்தொடு புறமும் கலந்த பயிற்சியாகும். அஃதாவது, உடல் உறுப்புக்களாகிய கைகளைக் கொண்டு இயற்றப்படும் இவ் வழிபாட்டில் உள்ளமும் ஈடுபடுகின்றது.

*"கிரியை என்பது 'உபாசனை' முதலாக வரும் காரியங்களின் தொகுப்பை உடையது. பக்தன், தன்னைப் பரமபதத் தந்தையின்* **தொண்டுக்காகப்** *பயபக்தியுடன் கட்டுப்பாடு, கடமையுணர்வுள்ள மகனாகக் கருதிப் பணிந்து ஒழுகுகிறான். ஆகவே அவன் தன் நேரம் முழுவதையும் இறைவனுக்குப் பணி செய்வதிலேயே கழிக்கிறான்"*[18]

என்கிறார் ர. ராமானுஜாசாரி.

'சரியை'த் தொண்டு செய்துவரச் செய்துவர, அதன் பயனாய் 'ஆணவமலம்' பரிபாகமுறும்; அப்போது 'சத்தி நிபாதம்' மந்தமாய் நிகழும். அதன் பயனாய்க் 'கிரியை'த் தொண்டில் ஆர்வம் ஏற்படும்.[19] இவ்வகையில், 'கிரியை'க்கு முதற்படி 'சரியை' என்றும் கூறலாம்.

இக் 'கிரியை'த் தொண்டினைச் 'சிவபூசை, சிவதன்மம்' என்றும் கூறுவர். 'ஞானம்' தோன்றுதற்கு இப் 'பூசை' இன்றியமையாதது. இக் 'கிரியை'யில் வழுவாது நிற்போர்க்குச் **'சாமீபம்'** கிட்டும். அஃதாவது மகன் போன்று, இறைவனுக்கு அணுக்கராய் இருந்து இன்புறும்நிலையாம்.

**ஆதலின் இவர்தம் நெறி, 'மகன்மை நெறி' அஃதாவது 'சற்புத்திர மார்க்கம்' என்று இயம்பப்படும்.[20] அகந்தையையும் மமகாரத்தையும் தகர்த்தெறிய வல்லது இக் 'கிரியை' நெறியேயாம்.[21]**

**திருநாவுக்கரசர், இக் 'கிரியை நெறி' பற்றியும் தம் பாடல்களில் ஆங்காங்கு எடுத்து மொழிகின்றார் :**

*"விரும்பு மதிக்கண்ணி யானை*
*மெல்லிய லாளொடும் பாடிப்*
*பெரும்புலர் காலை எழுந்து*
*பெறுமலர் கொய்யா வருவேன்!*

*"அப்போது மலர்தூவி ஐம்புலனும் அகத்தடக்கி"*

*"வாயினை வாழ்த்த வைத்தார்"*

*".........சிவனுக்கு அன்பாய்ப்*
*பால்நல் தயிர்நெய் யோடு*
*பலபல ஆட்டி!"*

*"சகமலாது அடிமை யில்லை தானலால் துணையும் இல்லை!*
*நகமெலாம் தேயக்கையால் நாள்மலர் தொழுது தூவி*
*முகமெலாம் கண்ணீர்மல்க முன்பணிந்து ஏத்தும் தொண்டர்*
*அகமலால் கோயில்இல்லை ஐயன்ஐ யாறனார்க்கே!"*[22]

இனி, நாவரசர், 'மனம், வாக்கு, காயம்' இம்மூன்றினாலும் செய்யப்படும் வழிபாடு குறித்தும் கூறியுள்ளார்.

*"வெண்மதி சூடி விளங்கநின்*
*றானைவிண் ணோர்கள் தொழ*
*நண்ணில யத்தொடு பாடல்அ*
*றாதநல் லூரகத்தே*
*திண்ணில யம்கொண்டு நின்றான்*
*திரிபுர மூன்றெரித்தான்*
*கண்ணுளும் நெஞ்சத்து அகத்தும்*
*உளகழற் சேவடியே!"*[23]

**இதற்கு உரைகூறவந்த வ.த.இராமசுப்பிரமணியம்,**

*"இத் திருப்பாட்டு, திரிகரணங்களால் ஈசனை ஏத்தி நிற்றலை உணர்த்திற்று. 'இலயத்தொடு பாடல் அறாத நல்லூர்' என்பது.* ***வாக்கினாலும்****; 'கண்ணுளும் நெஞ்சத்து அகத்தும்' என்பது முறையே* ***காயத்தாலும்*** *மனத்தாலும் செய்யப்படும் வழிபாடு எனவும் காண்க!"*[24]

என்று கூறுவதனால் அறியலாம்.

இத்தகைய தொண்டினால் 'வல்வினை மாயும்' என்றும் அவரே கூறுகின்றார்:

"......*ஏகம்பம்* **மேவினார்க்கு**
**வருத்திநின்று அடிமை செய்வார்**
**வல்வினை மாயு மன்றே**!"[25]

என்பது அவரது திருவாக்கு!

**'யோகம்'**

'கிரியை'த் தொண்டினால், ஆணவமலம் மேலும் பரிபாகமுற்றுச் 'சத்தி நிபாதம்' தீவிரமாய் நிகழும். அந்நிலையில் இறைவனது அருவத் திருமேனியை உணரும் பக்குவத்தைப் பெற்று, அகத்தொழிலால் மட்டும் வழிபடுதல் 'யோகம்' ஆகும். மனத்தை அடக்கி, அகத்தே நிறுத்தி, ஒளி வடிவினனாகிய இறைவனோடு ஒன்றாய்ச் செய்தல் எனலாம்.[26]

இதனை வ.ஆ.தேவசேனாபதி, பின்வருமாறு விளக்குவர்:

*"ஐம்பொறிகளை ஒடுக்கி, உயிர்ப்பை நிலைநிறுத்தி, 'மூலாதாரம்' முதலான ஆறு ஆதாரங்களின உள் வழிகளை அறிந்து, அவ்விடங்களில் பொருந்தித் தியானித்துச் சந்திரமண்டலத்திலுள்ள அமிர்தத்தை உடல் முழுதும் நிரப்பி, முழுச்சோதியை நினைந்திருந்து, வினைகள் கெடுதற்குரிய யோகநெறியைக் கடைப்பிடித்தவர் சிவனது உருவத்தை (சாரூபம்)ப் பெறுவர்!"*[27]

'யோகம்' என்பதற்குக் 'கூடுதல்' அல்லது 'ஒன்றுதல்' என்று பொருள். இஃது எட்டுக் கூறுகளாகப் பகுத்து உரைக்கப்படும். அவை: இயமம், நியமம், ஆசனம், பிரணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பன. இவற்றை 'அட்டாங்க யோகம்' என்பர். இவற்றுள் 'சமாதி' என்பது, தன்னை மறந்து இறைவனோடு ஒன்றிவிடுதலாம். சிவபெருமானைத் தியானித்தலும் அவனிடத்து அழுந்துதலும், 'சிவயோகம்' எனப்படும்.[28]

மேலே கூறிய மூவகை வழிபாடுகளும், 'இறப்பில் தவம்' என்றும்; இவற்றின் பயனாகக் கூறப்பட்ட 'சாலோகம்' முதலிய மூன்றும் 'பதமுத்திகள்' என்றும் சொல்லப்படும். 'பதமுத்திகள்', சரியை முதலியவற்றுக்கு இடையில் வரும் பயன்கள்; **ஞானமே** அவற்றின் முடிந்த உண்மைப்பயன்.[29]

திருநாவுக்கரசர், இவ் 'யோகத்'தைப் பற்றியும் குறிப்பிட்டுள்ளார்:

*"கல்லினால் புரமூன்று எய்தக்*
*கடவுளைக் காத லாலே*

*எல்லியும் பகலும்* ***உள்ளே***
***ஏகாந்த மாக ஏத்தும்***
*பல்லில்வெண் தலைகை யேந்திப்*
*பல்இலம் திரியும் செல்வர்*
*சொல்லுநன் பொருளும் ஆவார்*
*திருச்சோற்றுத் துறைய னாரே!"*[30]

- இப்பாட்டில், 'உள்ளே ஏகாந்தமாக ஏத்தும்' என்பது 'யோகநிலை'யைக் குறிக்கும்.

*"உயிரா வணமிருந் துற்று நோக்கி*
*யுள்ளக் கிழியி னுருவெழுதி*
*உயிரா வணஞ்செய்திட் டுன்கைத் தந்தால்*
*உணரப் படுவாரோ டொட்டி வாழ்தி!"*[31]

என்ற அப்பர் அருள்மொழியும் 'யோகநிலை' குறித்ததேயாம்.

சிவபெருமான், உமாதேவியை உடனாகக் கொண்டு, மன்னுயிர்க்குப் 'போகத்'தை யளிப்பதோடு, 'யோகநிலை' நிற்போர்க்கு, அவ்வாறாகிய பேற்றினையும் தருபவர். இவ்வாறு ஒருவரே, இருவகைச் சிறப்பும் நல்கும் அருளாளர் என்பதை நாவரசர்,

*"குழுவினர் தொழுதெழும் அடியர் மேல்வினை*
*தழுவின கழுவுவர் பவள மேனியர்*
*மழுவினர் மான்மறிக் கையர்,* ***மங்கையைக்***
***கெழுவின யோகியர்*** *கெடில வாணரே!"*[32]

என்னும் திருப்பாட்டால் குறிப்பிடுவர்.

இறைவன், 'யோகி'யாகவுமிருந்து உயிர்களுக்கு அருள்பவன் எனவே அவனே 'பரமயோகி'யாவான்.

*"பத்தனாய்ப் பாடமாட்டேன் பரமனே* ***பரமயோகீ****!*
*எத்தினாற் பத்தி செய்கேன் என்னைநீ இகழவேண்டா!"*[33]

ஈசனைத் தற்போதம் அற்று, 'யான் எனது' என்னும் செருக்கற்ற நிலையில், எப்போதும் அவனது சிந்தனையே கொண்டு, தம்மை மறந்து நிற்கும் அரிய செயலையும் நாவரசர் குறிப்பிடுகின்றார்:

*"ஓதிமா மலர்கள் தூவி......*
*நீதியால் நின்னை யல்லால்*
*நினையுமா நினைவி லேனே!"*[34]

என்பது கொண்டு இதனையறியலாம்.

**சிவபெருமானின் அருள் ஆகிய சுழியில் பட்டு அவனோடு ஒன்றி** நின்ற பான்மையை நாவரசர்,

> *"சுழியக் கண்டிலேன் கண்ணெதிரே கண்டேன்!*
> *ஒழியப் போந்திலேன் ஒக்கவே ஒட்டந்தேன்*
> *வழியிற் கண்டிலேன் வாய்மூர்* **அடிகள்தம்**
> **சுழியிற் பட்டுச் சுழல்கின்றது என்கொலோ?"**[35]

என எண்ணி வியக்கின்றார்.

நாவரசர், தாம் சிவபெருமானின் திருவடியிலே இரண்டறக் கலந்து விட்டதாகவே ஒரு பாடலில் குறிப்பிடுகின்றார் :

> *"என்றும்நாம் யாவர்க்கும் இடைவோ மல்லோம்*
> *இருநிலத்தில் எமக்கெதிரா வாரு மில்லை!*
> *சென்றுநாம் சிறுதெய்வம் சேர்வோ மல்லோம்!*
> **சிவபெருமான் திருவடியே சேரப் பெற்றோம்!"**[36]

என்பது அப்பர் அருள்மொழி.

**'ஞானம்'**

சிவபெருமானை நோக்கிச் செய்யும் 'சரியை, கிரியை, யோகம்' என்ற 'வழிபாடும் தொண்டும்', சைவத்தில் 'தவம்' என்று சொல்லப்படும். 'மந்ததரம், மந்தம், தீவிரம்' என்னும் 'சத்தி நிபாத' நிலைகளுக்கு ஏற்பச் சிவவழிபாடாகிய தவமும், 'சரியை, கிரியை, யோகம்' என மூன்றாய் நிகழும். இம் மூன்றையும், பயன் கருதாமல் சிவனிடம் கொண்ட பேரன்பின் காரணமாகச் செய்து வந்தால், இத் தவமுயற்சியால், 'இருவினையொப்பு' உண்டாகும்; அதனால், ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்கும் நிலை உண்டாகும்; இதனால் 'வினை'யும் நீங்கும்; நீங்கவே, உயிரறிவு உள்ளவாறு விளங்கும். அந்நிலை, 'உயிரினது பக்குவம்' எனப்படும். இது, ஞானத்தை உணர்தற்கு ஏற்ற பருவம் ஆகும். ஆதலின், 'இருவினையொப்பு' வருங்காலமே, உயிருக்கு 'ஞானம்' வரும் காலம் ஆகும். அப்போது, முழு முதற் பரம்பொருளே ஞானாசிரியராக எழுந்தருளிவந்து, அவ் உயிர்க்கு 'ஞானத்'தை அருளுவார். அவ்வாறு 'ஞானம்' விளங்கியபொழுது, அவ்வுயிரானது அசத்தை அசத்து என உணர்ந்து, அதனைக் கழித்துச் சத்தாகிய சிவத்தோடு கூடி இன்புறுதலாகிய 'முத்திநிலை' பெறும்.[37]

'சரியை, கிரியை, யோகம்' எனும் மூன்று நெறிகளும், கடைசி நெறியான 'ஞானத்'திற்கான ஏற்பாடுகளாகும். 'ஞானநெறி'யைச் 'சன்மார்க்க நெறி' என்பர். இதன் பயன், 'சாயுச்சியம்' அடைதல். அதாவது 'தெய்வீகக் கட்டுப்பேறு'. எனவே, ஞானமே, 'முத்தி'க்கு வழி![38]

**திருநாவுக்கரசர்**, இஞ் 'ஞானநிலை' பற்றிப் பல்வேறு பாக்களிலும் குறிப்பிடுகின்றார். அவற்றுட் சில வருமாறு:

*"நான்எனில் தானே என்னும்*
*ஞானத்தார் பத்தர் நெஞ்சுள்*
*தேனும்இன் னமுதும் ஆனார்*
*திருச்செம்பொன் பள்ளி யாரே!"*[39]

என்பவர், 'ஞானம் என்றால் என்ன?' என்பதற்கான ஒரு விளக்கமும் தருகின்றார்:

*"விளக்கினார் பெற்ற இன்பம்*
*மெழுக்கினால் பதிற்றி யாகும்*
*துளக்கிநல் மலர்தொ டுத்தால்*
*தூயவிண் ணேற லாகும்!*
*விளக்கிட் டார்பேறு சொல்லின்*
*மெய்ந்நெறி ஞான மாகும்!*
*அளப்பில கீதம் சொன்னார்க்கு*
*அடிகள்தாம் அருளு மாறே"*[40]

எனச் 'சரியை, கிரியை' எனும் நெறிகளோடு 'ஞானநெறி'யினையும் சேர்த்துக் கூறுகின்றார்.

*"......மெய்தரு ஞானத் தீயால்*
*கள்ளத்தைக் கழிய நின்றார்!"*

*"ஞானத்தை விளக்கை யேற்றி*
*நாடியுள் விரவ வல்லார்*
*ஊனத்தை ஒழிப்பர் போலும்*
*ஒற்றியூர் உடைய கோவே!"*[41]

என, ஞானத்தை 'நெருப்பா'கவும், 'விளக்கா'கவும் உருவகப்படுத்துவதனோடு, 'நாடியுள் விரவ வல்லார்' என 'யோகத்'தையும் குறிப்பிடுகின்றார் அப்பர் பெருமான்! 'ஊனத்தை ஒழிப்பர் போலும்' என்பதால், 'பிறவியைப் போக்கவல்லது இந்த ஞானமே' என்றும் பேசுகின்றார்.

இவ்வாறு கூறும் நாவரசர், 'ஞானம்' ஏதும் சுற்றிலாத முன்னைய நிலையை எண்ணி வருந்தவும் செய்கின்றார்:

*"பற்றிலா வாழ்க்கை வாழ்ந்து*
*பாழுக்கே நீர் இறைத்தேன்!*
*உற்றலால் கயவர் தேறார்*
*என்னும்கட் டுரையோடு ஒத்தேன்!*

*எற்றுளேன்? என்செய் கேனான்?*
*இடும்பையால்* **ஞானம் ஏதும்**
**கற்றிலேன்** *களைகண் காணேன்*
*கடவூர்வீ ரட்ட னீரே!"*[42]

உண்மையுணர்ந்தபின், 'சிவபெருமானின் திருவடியே சரணம்' எனத் தாம் சைவஞ் சார்ந்ததையும் சுட்டுகின்றார் நாவரசர்:

*"திருந்தா அமணர்தம் தீநெறிப்*
*பட்டுத் திகைத்து* **முத்தி**
**தருந்தாள் இணைக்கே சரணம்**
**புகுந்தேன்!"**[43]

என்பது அவர் வாக்கு!

"ஞானமே முத்திக்கு வழி; ஆதலின், நெஞ்சமே! இம் முத்தி நெறி அடைய எந்தத் தவமும் செய்யாதிருக்கிறாயே! அன்பால், அடியவர்க்கு ஏதும் அளித்திலையே! எனவே, திருச்சோற்றுத்துறை ஈசனுக்குப் பத்தியாய்ப் பணி செய்க!" என்கிறார் அப்பர்.

*"முத்தி யாக ஒருதவம் செய்திலை!*
*அத்தி யால்அடி யார்க்குஒன்று அளித்திலை!*
*தொத்து நின்றலர் சோற்றுத் துறையர்க்கே*
*பத்தி யாய்ப்பணி செய்மட நெஞ்சமே!"*[44]

என்பது திருச்சோற்றுத்துறைப் பதிகப்பாட்டு!

சிவபெருமானின் 'திருவடித் தீக்கை'யால் திருநாவுக்கரசர் 'ஞானநிலை' பெற்றார் என்பது முன்பு கூறப்பட்டது. 'திருநல்லூர்த் திருப்பதிகப்' பாடல் ஒவ்வொன்றிலும், தன் தலைமேல் இறைவன் திருவடி சூட்டியதைக் குறிப்பிடுதல் காணலாம்.

*"......இனமலர்கள் போதவிழ்ந்து மதுவாய்ப் பில்கி*
*நனைந்தனைய திருவடிஎன் தலைமேல் வைத்தார்!"*

*"நன்னலத்த திருவடிஎன் தலைமேல் வைத்தார்!"*

*"நாடேறு திருவடிஎன் தலைமேல் வைத்தார்!"*

*"நல்லருளால் திருவடிஎன் தலைமேல் வைத்தார்!"*

*"நண்ணரிய திருவடிஎன் தலைமேல் வைத்தார்!"*

*"நற்றவர்சேர் திருவடிஎன் தலைமைல் வைத்தார்!"*

*"நாறுமலர்த் திருவடிஎன் தலைமேல் வைத்தார்!"*

*"நலங்கிளருந் திருவடிஎன் தலைமேல் வைத்தார்!"*

*"நன்றருளுந் திருவடிஎன் தலைமேல் வைத்தார்!"*

*"நாம்பரவும் திருவடிஎன் தலைமேல் வைத்தார்!"*[45]

என்று வருவன சான்றுகள்.

**'சிவோகம்பாவனை'**

'சிவோகம்பாவனை' என்பதற்கு, உயிரானது, தன்னைச் 'சிவமாகவே பாவித்தல்' என்று பொருள்.

இச் 'சிவோகம்பாவனை' குறித்து ஆ.ஆனந்தராசன் கூறும் விளக்கம் இங்கு அறியத்தக்கது:

> *"உயிருணர்வு, ஒருபொருளைப் பற்றும்போது அப்பொருளுக்கு வேறாய் நில்லாது, அதனிடத்தில் அழுந்தி. அதன் தன்மையையே தன் தன்மையாகக் கொண்டு நிற்கும். இவ்வியல்பைச் 'சார்ந்ததன் வண்ணமாதல்', 'அது அதுவாதல்' என்றெல்லாம் குறிப்பிடுவர்.....உயிர், பாசப்பொருளோடு எவ்வாறு ஒற்றுமைப்பட்டு நிற்கிறதோ அவ்வாறே பதியாகிய சிவத்தோடும் கூடி ஒற்றுமைப்பட்டு நிற்றல் இயலும்......சிவமும் உயிரும் பொருளால் இரண்டாயினும் இரண்டு என்னும் தன்மையின்றி ஒற்றுமைப்பட்டு நிற்பவை. 'சிவம்' வியாபகமாய் மேம்பட்டு நிற்க, உயிர் அதில் வியாப்பியமாய் அடங்கிப் பிரிப்பின்றி இயைந்து நிற்பது. இவ்வாறு இருவரும் பிரிந்து நில்லாது ஒற்றுமைப்பட்டு நிற்கின்ற நிலையை உயிர், இடைவிடாது உணர்ந்து. 'சிவன் நான்' எனப் பாவித்தல் வேண்டும். அவ்வாறு பன்னாள் பாவனையால் உணர்ந்து நிற்பின், பின்பு, உண்மையிலேயே சிவமாம் தன்மை உண்டாவதாகும். அப்பாவனையே 'சிவோகம் பாவனை' எனச் சிவாகமங்கள் கூறுகின்றன. சிவோகம் - சிவ + அகம் - சிவன்நான் (ஆனேன்)!"*[46]

இச், 'சிவோகம் பாவனை'யானது 'கருட தியானம்' போல்வது என்றும்; நஞ்சு நீங்குவதற்காகக் 'கருடபாவனை' செய்யப்பட்டு, அது நீங்கியதும் மாந்திரிகன் தனது நிலைக்கு மீள்வது போல, உயிரானது பாசத்தினின்று நீங்கச் 'சிவோகம்பாவனை' செய்து, பாசத்திலிருந்து விடுபட்டவுடன், களிம்பு நீங்கப்பெற்ற செம்பினைப் போல் ஆகிவிடும். எனவே, பாச நீக்கத்திற்கான பயிற்சியே 'சிவோகம்பாவனை' என்பர் வ.ஆ. தேவசேனாபதி.[47]

உயிரானது இச் 'சிவோகம்பாவனை'யில் உறைந்து நின்று பிற உணர்வுகள் தோன்றாதபடித் திருவருள் உணர்வு ஒன்றையே பற்றி நிற்குமானால் 'மலவாசனை' அடியோடு நீங்கும். எனவே 'சிவோகம்பாவனை' யாகிய தியானத்தில் பழகுவதே 'பசுத்தன்மை' நீங்குதற்கான வழியாகும்.

ஞானத்தில் ஞானமாகிய நிட்டையின் பயனாக அடையப்படும் 'பரமுத்தி' - அஃதாவது, 'சாயுச்சம்' என்ற நிலையை இவ்வுலகில் இவ் உடம்போடு கூடியிருக்கும் நிலையில் பெற்றிருத்தலைத்தான் 'சீவன்முத்தி' என வழங்குவர். 'சிவோகம்பாவனை'யில் மூழ்கியிருத்தலே 'சீவன்முத்தி' எனப்படும். இந்த நிலையை அடைந்தோர், எஞ்ஞான்றும் இறை நினைவிலேயே அழுந்தி, இறைவனோடு தொடர்புற்று நிற்பரேயன்றி, உலகத்தோடு தொடர்பு கொண்டிருத்தல் இல்லை. இந்நிலைக்கு 'நிட்டைநிலை' என்றும் பெயர். இந்த நிலையில் நிற்போர் 'ஞாயிறு எங்கு எழுந்தால் என்? மண் கம்பம் ஆகில் என்?' என்று கவலையேதுமின்றி இருப்பர். இவர்கள், எவர்க்கும் அஞ்சமாட்டார்கள்: கூற்றுவனுக்குங்கூட அஞ்சமாட்டார்கள். இவர்கள், எந்நேரமும் இறைவனது திருவடி நிழலில் நிற்றலால், எஞ்ஞான்றும் இன்பமேயன்றித் துன்பம் இல்லை. மதுவுண்ட வண்டு, அம்மலரிலே மயங்கிக் கிடத்தல் போல், சிவானந்தமாகிய இன்பத்தில் மூழ்கியே நிற்பர். உடம்பு நீங்கியவுடன், பரமசிவனோடு இரண்டறக் கலத்தலாகிய சாயுச்ச பரமுத்தியைப் பெறுவர்.[48]

திருநாவுக்கரசரது வாழ்வில் நிகழ்ந்த விந்தை நிகழ்ச்சிகள் பலவாகும். சமணர்களால் முதலில் நீற்றறையில் இடப்பட்டார் நாவரசர்; அப்போது அவர், 'சிவோகம்பாவனை'யில் அமர்ந்திருந்தார் ஆதலின், அந்தக் கொடுமையான நீற்றறை, எம்பெருமானின் திருவடி நீழலாகக் காட்சியளித்தது.

*"மாசில் வீணையும் மாலை மதியமும்*
*வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்*
*மூசு வண்டறை பொய்கையும் போன்றதே*
*ஈசன் எந்தை இணையடி நீழலே!"*[49]

என்பது அப்பர் அருள்மொழி. வள்ளுவப் பெருந்தகை,

*"கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறிவு மைம்புலனும்*
*ஒண்டொடி கண்ணே உள"*[50]

என்பர். "ஐம்புலன் இன்பங்களும் ஒரு பெண்ணிடத்தே உள" என்பது இதன் கருத்து.

ஆனால் ஈண்டு நாவரசரோ, 'மாசில் வீணையும்' எனும் இத்திருப்பாட்டின் மூலம், "ஐம்புல இன்பங்களும் ஒருசேர வழங்குவது ஈசனின் திருவடி" என்கின்றார்.

**இவ்வாறு, தமக்கு நஞ்சு கலந்த பாற்சோறு அளிக்கப்பட்ட போதும், யானையின் காலால் இடறச் செய்தபோதும், கல்லில் பூட்டிக் கடலில் தள்ளியபோதும், 'சிவோகம்பாவனை'யில் மூழ்கியிருந்தமையாலே நாவரசருக்கு எவ்வித இடரும் இல்லாதொழிந்தது.**

*"நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்!"*[51]

என நாவரசர் பாடிய திருத்தாண்டகத்துக்கு உரை விளக்கம் கூறவந்த வை.இரத்தினசபாபதி,

> *"பதிப்பொருள் ஒன்றே, அவனுக்கு அடிமைகளாய் அவனடியிற் சேரும் தகுதி பெற்ற உயிர்களே அனைத்தும்! நடலைத் தன்மையில் நடத்தப்படுதற்குரிய அறியாமை வந்தமைந்ததேயாயினும், அவை பிணியன்று! அவைகளை எங்களுக்குள்ளடக்கி யாங்கள்* **பரம்பொருளுக்குள்ளடங்கி-யிருத்தலே** *இலக்கணம் எனக் கொள்ள வைத்தார்!"*[52]

என்பர்.

> *"அஞ்சுவது யாதொன்றும் இல்லை*
> *அஞ்ச வருவதும் இல்லை!"*[53]

என்று கூறும் நாவரசர்,

> *"வானம் துளங்கில்என் மண்கம்பம்*
> *ஆகில்என் மால்வரையும்*
> *தானம் துளங்கித் தலைதடு*
> *மாறில்என் தண்கடலும்*
> *மீனம் படில்என் விரிசுடர்*
> *வீழில்என் வேலைநஞ் சுண்டு*
> *ஊனம் ஒன்றில்லா ஒருவனுக்கு*
> *ஆட்பட்ட உத்தமர்க்கே!"*[54]

என்று கூறுமளவுக்கு நாவரசர், 'சிவோகம்பாவனை' யில் மூழ்கியிருந்தார் எனலாம்!

### திருவைந்தெழுத்து

சிவஞானபோதப் 'பாயிர'த்துள், **'பெரும் பெயர்'** எனுந் தொடர் வந்துள்ளது. இதற்குச் சி. அருணை வடிவேலு முதலியார் கூறும் அரிய உரைவிளக்கம் வருமாறு:

> *"இருக்கு, எசுர். சாமம். அதர்வணம் என்னும் நான்கு வேதங்களில் ஒவ்வொன்றிலும் விரித்துச் சொல்லப்படும் கருத்தைச் சுருக்கமாகத் தொகுத்துக் கூறும் 'மகா வாக்கியம்'*

*ஒவ்வொரு வேதத்திற்கும் உண்டு. அவ்வாறே சிவாகமங்களின் ஞானபாதக் கருத்தைத் தொகுத்துக் கூறும் மகாவாக்கியமும் உண்டு. எனினும் இங்குப் '**பெரும்பெயர்**' என்றது 'சிவமூலமந்திரம்' ஆகிய '**பஞ்சாக்கரம்**' அல்லது '**திருவைந்தெழுத்தை**'யே என்பது யோகிகள் (சிவஞான முனிவர்) கருத்து!"*[55]

- இதன்கண், 'திருவைந்தெழுத்'தின் சிறப்பு இயம்பப்பட்டுள்ளது தெளிவு.

வேப்பமரத்தில் வாழ்ந்து, கசப்பான காய், இலை முதலியவற்றையே தின்று தின்று பழகிப் போன புழு, அருகில் இருந்த கரும்பின் மேல் தற்செயலாக விழுந்து, அக்கரும்பின் தீஞ்சுவையை இனிது நுகர்ந்தாலுங்கூட, முன்னைப் பழக்கம் காரணமாக அந்த வேப்பங்காயினையே மீண்டும் மீண்டும் விரும்பித் தின்னும். அதுபோல, அசத்தாய் உள்ள உலகப் பொருள்களை 'அசத்து' என்று கண்டு கழித்த உயிர்களுக்குப் 'பதிஞானம்' விளங்கி, அதனால் 'பதி' காட்சிப்பட்ட போதிலும், முன்னைப் பழக்க வாசனையால் 'அசத்து' என்று ஒதுக்கிய அவ் உலகப் பொருள்களின் மேல் விருப்பம் நிகழ்தலும் கூடும். எனவே அவ்வாறு நிகழாதிருக்க இறைவனின் 'திருவைந்தெழுத்'தை முறைப்படி ஓதவேண்டும்![56]

சிவமூலமந்திரம் - திருவைந்தெழுத்து. '**சிவாயநம**' - என்பது திருவைந்தெழுத்து. இதன்கண் ஐந்து எழுத்துக்கள் உள. ஒவ்வொன்றும் ஒவ்வோர் ஆழ்ந்த பொருளைத் தன்பால் கொண்டது. 'சி' - பேரின்பப் பொருளாகிய 'சிவத்'தைக் குறிக்கும்; 'வா' - சிவத்தின் ஞானமாகிய 'அருளை'க் குறிக்கும்; 'ய' - உயிரைக் குறிக்கும்; 'ந' - திரோதான சத்தியையும், அதன் வழிப்பட்டனவாகிய 'மாயை, கன்மம், மாயேயம்' முதலானவற்றையும் குறிக்கும். 'ம' - மூலமலமாகிய ஆணவத்தைக் குறிக்கும்.

இதற்கு மேலும் பல விளக்கங்களை அறிஞர்கள் கூறுவர்.[57]

இனி, '**நமசிவாய**' என்னும் திருவைந்தெழுத்தும் உண்டு. இதற்குத் 'தூலபஞ்சாக்கரம்' என்று பெயர்; 'சிவாயநம' என்னும் திருவைந்தெழுத்திற்குச் 'சூக்கும பஞ்சாக்கரம்' என்று பெயர். 'நமசிவாய' மந்திரம் ஓதுபவர்க்கு உலகப்பயன் கிட்டும் என்றும்; 'சிவாயநம' மந்திரம் ஓதுபவர்க்குப் பிறவி நீக்கம் கிடைக்கும் என்றும் அறிஞர் கூறுவர்.[58]

பதிஞானத்தைப் பெறுதற்கு முன்பு, அதனைப் பெறும் நிலை கைகூடுதற்பொருட்டும்; பதிஞானத்தைப் பெற்ற பின்னரும் 'மலவாசனை' தாக்காதிருத்தற் பொருட்டுமாக, இத் 'திருவைந்தெழுத்தை' முறைப்படி ஓதுதல் வேண்டும்.

இத்தகைய மேலான மந்திரங் குறித்துத் தொல்காப்பியரே,

*"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளக்கும்
மறைமொழி தானே **மந்திரம்** என்ப"*[59]

என்னும் நூற்பாவால் சுட்டுவரெனின், இதன் சிறப்பு ஒருவாறு தெரியவரும்.

திருநாவுக்கரசர், சைவ சமயத்திற்கு மீண்டும் திரும்பியபோது, சமணர்களால் இழைக்கப்பட்ட கொடுமைகளினின்றும், இறைவன் திருவருள் துணைகொண்டு, உய்வு பெற்றமைக்கு உறுதுணையாக இருந்ததே, 'நமசிவாய' எனும் திருவைந்தெழுத்தேயாகும்!

தம்மைக் கல்லில், இறுகப் பிணித்து, ஆழ்கடலில் அக்கொடியோர் தள்ளியபோதும், 'சிவோகம்பாவனை'யினால், திருவைந்தெழுத்து எனும் ஒப்பில்லா மந்திரத்தை ஓதியருளினார் நாவரசர். அந்த அரிய திருப்பாட்டு வருமாறு:

*"சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது **நமச்சி வாயவே**!"*[60]

இப்பதிகம் அனைத்திலுமே,

*"நாவினுக்கு அருங்கலம் நமச்சி வாயவே"*

*"நண்ணிநின்று அறுப்பது நமச்சி வாயவே"*

*"நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சி வாயவே"*

*"நங்களுக்கு அருங்கலம் நமச்சி வாயவே"*

*"நலமிகக் கொடுப்பது நமச்சி வாயவே"*

*"நாடினேன் நாடிற்று நமச்சி வாயவே"*

*"நல்லது விளக்கது நமச்சி வாயவே"*

*"நன்னெறி யாவது நமச்சி வாயவே"*

*"நமச்சி வாயப் பத்து,
ஏத்தவல் லார்தமக்கு இடுக்கண் இல்லையே!"*[61]

எனத் தமக்கு உற்ற துன்பம் குறித்தும், 'நமச்சிவாய' என்னும் நன்மந்திரத்தால் உய்ந்தமை குறித்தும் இனிதெடுத்து இயம்புகின்றார் நாவரசர்.

தமக்குப் பகைவர் அளித்த நஞ்சுணவும் பாற்சோறாக ஆகுமாறு மாற்றியருளிய கொடையாளன் - சிவபெருமான் என்று கூறவந்த அப்பர்

பெருமான், "அஞ்செழுத்தை மறவாமல் ஓதி உய்வு பெறுவீராக!" என்று உலக மாக்கட்கு உணர்த்துகின்றார்:

*"துஞ்சிருள் காலைமாலை தொடர்ச்சியை மறந்திராதே*
***அஞ்செழுத் தோதிநாளும்*** *அரனடிக்கு அன்பதாகும்!*
*வஞ்சனைப் பாற்சோ றாக்கி வழக்கிலா அமணர்தந்த*
*நஞ்சமுது ஆக்குவித்தார் நனிபள்ளி அடிகளாரே!"*[62]

என்பது அவர் பொன்னான திருவாக்கு!

"'திருநீறு' அணியும் போது இத்திருவைந்தெழுத்தை ஓதி அணிக, அதனால் வினை அகலும்; பிறவி நோயும், எரியும் நெருப்பில் விறகினை இட்டது போல் அழிந்துபோம்" என்கிறார் அப்பரடிகள்:

*"மந்திர* ***நமச்சி வாய***
*ஆகநீறு அணியப் பெற்றால்*
*வெந்தறும் வினையும் நோயும்*
*வெவ்வழல் விறகிட்டு அன்றே!"*[63]

என்னும் வாக்கை எண்ணிப் பார்த்தல் நலமாகும்.

"'நமசிவாய' என்னும் திருமந்திரம், அரிய கருவூலம்; அது, பிற்காலத்தில் உறுதியாக உதவக்கூடியது; ஆதலின் அதனையே தியானித்தேன்; அதனால் அச்சம் தவிர்ந்தேன்" என்கின்றார் அருளாளர் அப்பர் பெருமான்!

*"வைச்ச பொருள்நமக்கு ஆகும்என்று*
*எண்ணி* ***நமச்சிவாய***
*அச்சம் ஒழிந்தேன்!"*[64]

இவ்வாறு கூறுபவர்,

*"எழுத்து அஞ்சு என்நாவிற் கொண்டேன்!"*

*"பதத்தெழு மந்திரம் அஞ்செழுத்து ஓதி"*

*"நாமங்கள் ஓதி எழுத்தஞ்சும்"*

*"ஆதியர் நாமந்தான் ஆன அஞ்செழுத்து ஓத"*

*"திருநாமஞ் அஞ்சுஞ் சொல்லி"*

*"அஞ்செழுத்தும் வாய்நவில வல்லோர்க்கு"*[65]

என்று பல்வேறிடங்களிலும் இத் திருவைந்தெழுத்தை ஓதவேண்டும் என்கின்றார்.

துயிலினின்றும் நீங்கி விழித்தெழும்போதுகூட இத் திருமந்திரம் ஓதினாற் பயனுண்டு என்பார்,

*"எந்தையார் திருநாமம் நமச்சி வாய*
*என்று எழுவார்க்கு இருவிசும்பில் இருக்க லாமே!"*[66]

என்றும்; "உயிர் பிரிகின்ற காலத்துங்கூட, இறைவா! இம் மந்திரத்தை யான் சொல்லிக் கொண்டே இருக்க வேண்டும்" என்ற பொருளில்,

*"நாமம் பரவி நமச்சி வாய*
*என்னும் அஞ்செழுத்தும்*
*சாம்அன்று உரைக்கத் தருதிகண்*
*டாய், எங்கள் சங்கரனே!"*[67]

என்றும்; "சிவாகம நூல்களைப் பற்றி எதுவுமே தெரியாதவராயினும் இத் திருவைந்தெழுத்தை ஓதி உணர்ந்தாற் போதும்; இறைவன், அவர்களது உள்ளத்திலேயும் மகிழ்ந்து வீற்றிருந்து அருள்வன்" என்ற பொருளில்,

*"ஏதும் ஒன்றும் அறிவிலர் ஆயினும்*
*ஓதி அஞ்செழுத்தும் உணர்வார் கட்குப்*
*பேதம் இன்றி அவரவர் உள்ளத்தே*
*மாதும் தாமும் மகிழ்வார்மாற் பேறரே!"*[68]

என்றும் கூறுகின்ற நாவுக்கரசர்,

*"இருந்து சொல்லுவன் கேண்மின்கள் ஏழைகாள்!*
*அருந்த வந்தரும் அஞ்செழுத்து ஓதினால்*
*பொருந்து நோய்பிணி போகத் துரப்பதோர்*
*மருந்தும் ஆகுவர் மன்னுமாற் பேறரே!"*[69]

என, உலகம் உய்யும்பொருட்டு, இம் மன்பதைக்கும் இம் மந்திரப் பெருமையை உணர்த்துகின்றார்.

இவ்வாறு இனிதாக எடுத்துச் சொல்லியும் கேட்காமல் வீணே காலங்கழிப்பவர் மீது கழிவிரக்கங் கொண்டு, "ஐயகோ! இவர்கள், பிறவி நோயால் பிணிக்கப்பட்டு, இறப்பதற்கும் மீண்டும் பிறப்பதற்குமே ஆளாகின்றார்களே!" என்று அருள் ததும்பப் பாடுகின்றார் அப்பர் பெருமான்:[70]

*"திருநாமம் அஞ்செழுத்தும் செப்பா ராகில்*
*தீவண்ணர் திறமொருகால் பேசா ராகில்*
*ஒருகாலும் திருக்கோயில் சூழா ராகில்*
*உண்பதற்குமுன் மலர்பறித்திட் டுண்ணா ராகில்*
*அருநோய்கள் கெடவெண்ணீ றணியா ராகில்*
*அளியற்றார் பிறந்தவா றேதோ வென்னில்*

*பெருநோய்கள் மிகநலியப் பெயர்த்துஞ் செத்தும்*
*பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின் றாரே!"*[71]

இவ்வாறு நூலின் பல்வேறிடங்களிலும் 'நமசிவாய' எனும் மந்திரத்தின் சிறப்புக்களை நாவாரப் பாடும் நாவரசர்,

"...........**சிவாயநம** *வென்னும் சிந்தைச்*
*சுருதிதனை!"*[72]

எனச் 'சிவாயநம' என்னும் திருவைந்தெழுத்தையும் சுட்டுகின்றார்.

இவ் இயலில் மேலே குறிக்கப்பட்ட 'சரியை' முதலான 'நால்வகை நெறிகள், சிவோகம்பாவனை, திருவைந்தெழுத்து' ஆகியன குறித்துச் சம்பந்தர் முதலான அருளாளர்கள் பலரும் பாடியுள்ளனர். அவற்றுள் ஒருசில மட்டும் இவண் தரப்படுகின்றன:

*"காவினை இட்டும் குளம்பல தொட்டும்...*
*பூவினைக் கொய்து மலரடி போற்றுதும்!"*

*"புந்தியினால் மறைவழியே புற்பரப்பி*
*நெய்சமிதை கையிற் கொண்டு"*

*"ஐம்புலன்கள் செற்று.....தனித்திருந்து தவம்புரியும்"*

*"ஒண்சுடர் ஞான விளக்கினை ஏற்றி"*

*"காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி*
*ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது*
*வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது*
*நாதன் நாமம் நமச்சி வாயவே!"*[73]

என்பன சம்பந்தர் தேவாரம்.

*"...........தூய நெய்யால்*
*வட்டக்குண் டத்தில்எரி வளர்த்தோம்பி மறைபயில்வார்"*

*"நாடுவன் நாடுவன் நாபிக்குமேலே ஓர்நால்விரல்"*

*"நற்றவாஉனை நான்மறக்கினுஞ் சொல்லுநா நமச்சி*
*வாயவே!"*[74] (சுந்தரர் தேவாரம், 'திருப்பாண்டிக்கொடுமுடி'த் திருப்பதிகத்தின் கடைசி அடி, இவ்வாறே முடிவது காணலாம்.)

என்பன சுந்தரர் அருளியன.

*"ஆடுகின்றிலை கூத்துடையான்கழற் கன்பிலை என்புருகிப்*
*பாடுகின்றிலை பதைப்பதும் செய்கிலை பணிகிலை!"*

*"தண்மலர் இட்டுமுட்டா திறைஞ்சேன்!"*

"நாம்ஒழிந்து சிவமான வாபாடி"

"....தன்கருணை வெள்ளத் தழுத்தி"

"அன்பினால் அடியேன் ஆவியோ டாக்கை
ஆனந்த மாய்க் கசிந்துருக"

"நமச்சிவாய வாஅழ்க!"[75]

என்பன மணிவாசகர் மொழிவன.

"யாவர்க்கு மாம்இறை வற்கொரு பச்சிலை"

"சிவமாகி ஐவகைத் திண்மலஞ் செற்றோர்
அவமாகார் சித்தர்முத் தாந்தத்து வாழ்வார்"[76]

என்பன திருமூலர் திருமந்திரப் பாக்கள்.

"இனியோநாம் உய்ந்தோம் இறைவன் அருள்சேர்ந்தோம்!
இனியோர் இடரில்லோம்!"[77]

என்பது அற்புதத் திருவந்தாதி.

"பூவார் சடைமுடியான் பொன்னடிக்கே ஏத்துவன்நற்
பூவாய வாசம் புனைந்து"[78]

என்பது சிவபெருமான் திருவந்தாதி.

கண்ணப்ப நாயனார்தம் செயலைக் கூறவந்த சேக்கிழார்,

"நாணனும் அன்பும் முன்பு நளிர்வரை ஏறத் தாமும்
**பேணுதத் துவங்க ளென்னும் பெருகுசோ பானம்ஏறி
ஆணையாம் சிவத்தைச் சார** அணைபவர் போல ஐயர்
நீள்மலை மலையை ஏறி நேர்படச் செல்லும் போதில்!"[79]

என்று கூறுவது இவண் ஒப்புநோக்கத்தக்கது.

"'சொற்றுணை வேதியன்' என்னுந் தூமொழி
நற்றமிழ் மாலையா '**நமச்சி வாய**'என்
றற்றமுன் காக்கும்**அஞ் செழுத்தை** அன்பொடு
பற்றிய உணர்வினால் பதிகம் பாடினார்!"80

என, நாவரசர் வாழ்வில் நிகழ்ந்த விந்தையினைப் பாடுவர் சேக்கிழார்.

இத்தகு திருமுறைப் பாடல்களின் பிழிவாக விளங்கும் 'சிவஞான போதம்' முதலான சாத்திர நூல்களில் சொல்லப்படும் கருத்துக்களிற் சில இங்கே தரப்படுகின்றன :

"உயிர்தான் முன்னே கொள்ளப்பட்ட புண்ணிய விசேடத்தாற் றனக்கு அந்தரியாமியாய் இதுகாறு

*முன்னின்றுணர்த்தி வந்த பரம்பொருளே இப்பொழுது குருவடிவமுங் கொண்டெழுந்தருளி வந்து, சிவதீக்கை செய்து, 'மன்னவ குமாரனாகிய நீ ஐம்பொறிகளாகிய வேடருட்பட்டு, வளர்ந்து, நின் பெருந்தகைமையை அறியாது மயங்கி யிடர்ப்பட்டாய்!நின் பெருந்தகைமை யாவது இவ்வியல்பிற் றென்றறிவுறுப்ப, அறிந்த மாத்திரையே அவ்வேடரை விட்டு நீங்கி, அன்னிய மின்றி அனன்னியமாந் தன்மையின் நிலைபெற்று அம் முதல்வன் திருவடிகளை யணையும்"*[81]

என்ற பொருள்பட, அருளாளர் மெய்கண்டார்,

*"ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்*
*தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்*
*டன்னிய மின்மையின் அரன்கழல் செலுமே!"*[82]

என்றருளிச் செய்துள்ளார்.

*"சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறி யாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோட்சத்தைக் கொடா!"*[83]

என்பது இதன்கண் வரும் 'ஏது'வாகும்.

*"ஊனக்கண் பாசம் உணராப் பதியை*
*ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி"*[84]

என்பதும்;

*"ஈண்டு அம்முதலை ஞானக் கண்ணாலே காண்க"*[85]

என்பதும் மெய்கண்டார் வாக்கே!

இந் 'நால்வகை நெறிகள்' குறித்து அருணந்தி சிவாசாரியார் கூறும் பாடலும் இவண் ஒப்புநோக்கத்தகும்:

*"சன்மார்க்கஞ் சகமார்க்கஞ் சற்புத்திர மார்க்கம்*
*தாதமார்க் கம்,என்னும் சங்கரனை அடையும்*
*நன்மார்க்க நாலவைதாம் ஞான யோக*
*நற்கிரியா சரியையென நவிற்றுவதுஞ் செய்வர்!*
*சன்மார்க்க முத்திகள்,சா லோக்கிய,சா மீப்பிய*
*சாருப்பிய, சாயுச்சிய மென்று,சதுர் விதமாம்*
*முன்மார்க்க ஞானத்தால் எய்து முத்தி*
*முடிவென்பர் மூன்றினுக்கு முத்திபத மென்பர்!"*[86]

இதற்கு மு.திருவிளங்கம்,

"நான்கு மார்க்கங்களின இலக்கணங்களையும் தமிழுலகில் ஒழுகிக் காட்டியுள்ளார் சிவஞானச் செல்வர்களாகிய மாணிக்கர், சுந்தரர், சம்பந்தர், அப்பர் என்னும் சமயகுரவப் பெருந்தகையாளர்!"[87]

என்று கூறுவது கொண்டு, திருநாவுக்கரசர், 'தாதமார்க்கநெறி'யை மேற்கொண்டவர் என்பது போதரும்.

இனிச் 'சிவோகம்பாவனை'யின் இயல்பும் பயனும் குறித்து அருணந்தி சிவாசாரியர் கூறுவதும் இங்குக் காட்டத்தகும்:

"கண்டவிவை யல்லேனா னென்றகன்று காணாக்
கழிபரமு நானல்லே னெனககருதிக் கசிந்த
தொண்டினொடு முளத்தவன்றோ னின்றகலப் பாலே
சோகமெனப் பாவிக்கத் தோன்று வன்,வேறின்றி
விண்டகலு மலங்களெலாங் கருடதியா னத்தால்
விடமொழியு மதுபோல விமலதையு மடையும்
பண்டைமறை களுமதுநா னானே னென்று
பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே!"[88]

'திருவைந்தெழுத்'தின் சிறப்புக்களாக மெய்கண்டார் கூறுவன வருமாறு:

"ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
உராத்துணைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்
தண்நிழ லாம்பதிவிதி எண்ணுமஞ் செழுத்தே"[89]

"அஞ்செழுத்தால் உள்ளம் அரனுடைமை கண்டரனை
அஞ்செழுத்தால் அர்ச்சித் திதயத்தில் அஞ்செழுத்தாற்
குண்டலியிற் செய்தோமங் கோதண்டஞ் சானிக்கில்
அண்டனாம் சேடனாம் அங்கு"[90]

சிவஞான சித்தியாரில்,

"ஓசைதரும் அஞ்செழுத்தை விதிப்படிஉச் சரிக்க
உள்ளத்தே புகுந்தளிப்பன் ஊனமெலாம் ஓட!"[91]

என்றும்;

சிவப்பிரகாசத்தில்,

"அந்தம்ஆ திகள்இ லாத அஞ்செழுத் தருளி னாலே
வந்தவா றுரைசெய் வாரை வாதியா பேதி யாலே!"[92]

என்றும்;

**திருவருட்பயனில்,**

*"அருள்நூலும் ஆரணமும் அல்லாதும் ஐந்தின்*
*பொருள்நூல் தெரியப் புகின்"*[93]

என்றும் வருவன இங்கு ஒப்புநோக்கி உணரத்தகும்.

திருநாவுக்கரசர், தம் தேவாரத் திருப்பதிகங்களில் 'சரியை, கிரியை, யோகம், ஞானம்' எனும் இந்நால்வகை நெறிகள் குறித்தும், 'சிவோகம்பாவனை', 'திருவைந்தெழுத்து' இவை குறித்தும் விரிவாகப் பாடியுள்ளார். இவையும், சம்பந்தர் போன்ற பிற சைவ சமயாசாரியர்களும் கூறிய கருத்துக்களும், பின்னால் எழுந்த சைவ சித்தாந்த சாத்திர நூல்கட்கு மூலகாரணமாய் அமைந்துள்ளன எனில் மிகையன்று!

## முடிபுகள்

இவ் இயலின் வாயிலாக அறியத்தகும் முடிபுகளாவன :

1. இறைவனை அடைதற்குரிய நெறிகள் நான்கு. அவை: 'சரியை, கிரியை, யோகம், ஞானம்' என்பன;
2. சிவபெருமானது உருவத் திருமேனியை உணர்ந்து, அவனது திருக்கோயிலுக்குச் சென்று, 'அலகிடுதல், மெழுக்கிடுதல், மாலை சாத்தல், தலையாரக் கும்பிட்டுக் கூத்தாடுதல், அவன் புகழ் பாடுதல் போல்வன, 'சரியை நெறி'யுள் அடங்கும்;
3. அகத்திலும் புறத்திலும் இறைவனுக்குச் செய்யும் 'திருமுழுக்கு, புகை, ஒளிகாட்டல்' போல்வன 'கிரியை நெறி'யில் அடங்கும்;
4. மனத்தை அடக்கி, அதனை இறைவனோடு ஒன்றச் செய்தல் 'யோகநெறி' எனப்படும்;
5. 'இருவினையொப்பு' வருங்காலமே உயிர்க்கு 'ஞானம்' வருங்காலம்; அப்போது பரம்பொருளே ஞானாசிரியனாக வந்து, அவ்வுயிர்க்கு 'ஞானத்'தை அருளுவன்;
6. இத்தகு நெறிகளால் 'சிவோகம்பாவனை' எனும் நிலை உண்டாகும்;
7. 'மலவாசனை' நீங்கற் பொருட்டுத் 'திருவைந்தெழுத்தை' முறைப்படி ஓதவேண்டும்;
8. இவற்றைக் குறித்துத் திருநாவுக்கரசர், தம் தேவாரப் பாக்களில் விரிவாக எடுத்துரைக்கின்றார்;
9. ஞானசம்பந்தர் போன்ற திருமுறை அருளாளர்களும் இவை குறித்து இயம்பியுள்ளனர்;

10. **‘சிவஞானபோதம்’ முதலான சாத்திர நூல்களில் நுவலப்படும் கருத்துக்களுக்கு, நாவரசர் போன்ற திருமுறை அருளாளர்கள் கூறிய கருத்துக்களே மூல ஆதாரங்களாக உள்ளன எனலாம்;**

## சான்றெண் விளக்கம்

1. முரு.பழ. இரத்தினம் செட்டியார், இதோ சைவ சித்தாந்தம் தெரிந்து கொள்ளுங்கள். பக்.27-29.
2. க. வச்சிரவேல் முதலியார், ‘சைவம்’, சைவமும் வைணவமும். ப.81.
3. ம.சா.அறிவுடைநம்பி, ‘போதமும் சுபக்கமும்’, சைவத்தமிழ் ப.172.
4. தாயுமான சுவாமிகள் பாடல். பராபரக்கண்ணி, 157.
5. ஆ.ஆனந்தராசன், சிவஞானபோதம் வழித்துணை விளக்கவுரை, ப.182.
6. வ.ஆ.தேவசேனாபதி, சைவ சித்தாந்தத்தின் அடிப்படைகள், ப.119.
7. ர.ராமானுஜாசாரி, சைவ சித்தாந்தம், ப.96.
8. க.வச்சிரவேல் முதலியார், மு.கா.நூல், ப.82
9. திருநாவுக்கரசர் தேவாரம், 4:4:1; 4:9:3.
10. மேலது, 5:258:1-2.
11. மேலது, 6:312.
12. மேலது, 5:192.
13. மேலது, 4:82.
14. மேலது, 4:307.
15. மேலது, 5:299.
16. மேலது, 6:357:2.
17. ந.சுப்புரெட்டியார், சைவ சமய விளக்கு, ப.296.
18. ர.ராமானுஜாசாரி, மு.கா.நூல், ப.96.
19. ஆ.ஆனந்தராசன், மு.கா.நூல். ப.182.
20. க.வச்சிரவேல் முதலியார், மு.கா.நூல், பக்.82-83.
21. ர.ராமானுஜாசாரி, மு.கா.நூல், ப.96.
22. திருநாவுக்கரசர் தேவாரம், 4:28:1-2: 4:64:3: 4:296:1: 4:312:2: 4:401.
23. மேலது, 4:947.
24. வ.த.இராமசுப்பிரமணியன் (உ.ஆ.), திருநாவுக்கரசர் தேவாரம், ப.721.
25. திருநாவுக்கரசர் தேவாரம், ப:443:3-4.
26. ஆ.ஆனந்தராசன், மு.கா.நூல், ப.182.
27. வ.ஆ.தேவசேனாபதி, மு.கா.நூல், ப.120.
28. ந.சுப்புரெட்டியார். மு.கா.நூல், பக்.298,300.
29. க.வச்சிரவேல் முதலியார், மு.கா.நூல், ப.84.
30. திருநாவுக்கரசர் தேவாரம், 4:406.

31. திருநாவுக்கரசர் தேவாரம், 6:252:1-2.
32. மேலது, 4:98.
33. மேலது, 4:229:1-2.
34. மேலது, 4:609:1.4.
35. மேலது, 5:502.
36. மேலது, 6:965:1-2.
37. ஆ.ஆனந்தராசன், மு.கா.நூல், பக்.183,184.
38. ர.ராமானுஜாசாரி, மு.கா.நூல், பக்.98,99.
39. திருநாவுக்கரசர் தேவாரம், 4:284:3-4.
40. மேலது, 4:748.
41. மேலது, 4:444:2-3; 4:446:3-4.
42. மேலது, 4:311.
43. மேலது, 4:922:1-2.
44. திருநாவுக்கரசர் தேவாரம், 5:327.
45. மேலது, 6:137-146 ஈற்றடிகள்.
46. ஆ.ஆனந்தராசன், மு.கா.நூல், பக்.242-243.
47. வ.ஆ.தேவசேனாபதி, மு.கா.நூல், ப.125.
48. ந.சுப்புரெட்டியார், மு.கா.நூல், பக்.349,350.
49. திருநாவுக்கரசர் தேவாரம், 5:884.
50. திருக்குறள், 1101.
51. திருநாவுக்கரசர் தேவாரம், 6:961.
52. வை.இரத்தினசபாபதி, திருமுறைத் தெளிவே சிவஞானபோதம், ப.127.
53. திருநாவுக்கரசர் தேவாரம், 4:11-20. ஈற்றடிகள்.
54. மேலது, 4:1057.
55. சி.அருணை வடிவேலு முதலியார். சிவஞானபோத மாபாடியப் பொருள்நிலை விளக்கம், ப.25.
56. ஆ.ஆனந்தராசன், மு.கா.நூல், ப.248.
57. கா. சுப்பிரமணியபிள்ளை, திருவாசக மூலமும் உரையும், ப.2.
58. ஆ.ஆனந்தராசன், மு.கா.நூல், ப.246.
59. தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல், 171.
60. திருநாவுக்கரசர் தேவாரம், 4:104.
61. மேலது, 4:105-113 ஈற்றடிகள்.
62. மேலது, 4:683.
63. மேலது, 4:749:3-4.
64. மேலது, 4:773:1-2.

65. **திருநாவுக்கரசர் தேவாரம்,** 4:787:1: 4:1017:1; 5:461:2; 5:526:2-3; 6:616:3: 6:665:3.

66. **மேலது,** 6:918:4.

67. **மேலது,** 4:995:3-4.

68. **மேலது,** 5:602.

69. மேலது, 5:605.

70. ச.சாம்பசிவனார், பத்திநெறிப் பனுவல்கள். ப.171.

71. திருநாவுக்கரசர் தேவாரம். 6:934.

72. மேலது, 6:618:1-2.

73. சம்பந்தர் தேவாரம், 1:116:2:1,3: 1:132:9:3; 1:131:10:3-4: 3:22:3:1-2: 3·49:1.

74. சுந்தரர் தேவாரம். 18:2:2-3: 45:9:2: 48:1:4:

75. திருவாசகம், 5:31:1-2: 5:5:1: 11:4:3-4: 8:5:4; 22:2:1: 1:1.

76. திருமந்திரம். 252:1: 497:1-2.

77. அற்புதத் திருவந்தாதி, 16:1-2.

78. சிவபெருமான் திருவந்தாதி. 43:3-4.

79. திருத்தொண்டர் புராணம். கண்ணப்ப நாயனார், 103.

80. மேலது. திருநாவுக்கரசு நாயனார். 126.

81. சிவஞானபோதம், சூத்.8. உரை (பக்.128,129).

82. மேலது, சூத்.8.

83. மேலது, அதிகரணம்:1 ஏது.

84. மேலது, சூத்.9:1-2.

85. மேலது, அதிகரணம்:1.

86. சிவஞான சித்தியார் சுபக்கம். 270.

87. மு.திருவிளங்கம் (உ.ஆ.). மேலது உரை, ப.463.

88. சிவஞான சித்தியார் சுபக்கம். 298.

89. சிவஞானபோதம். சூத்.9.

90. மேலது, அதிகரணம் 3:உதாரணம்.

91. சிவஞான சித்தியார் சுபக்கம். 292:4.

92. சிவப்பிரகாசம், 90:3-4.

93 திருவருட்பயன், 81.



# 7
# திருநாவுக்கரசர் தேவாரத்தில் 'சிவப்பேறு'

## முன்னுரை

எல்லாம்வல்ல முழுமுதற் பரம்பொருளாகிய சிவபெருமானின் திருவருட்பேறு பெற்ற திருநாவுக்கரசர், தாம் அருளிய தேவாரத்திருப்பதிகங்களில், 'சிவப்பேறு' எனப்படும் 'முத்திநிலை' குறித்து மொழிந்துள்ளார். அதுகுறித்து ஆய்வு, இவண் மேற்கொள்ளப்படுகின்றது.

## 'சிவப்பேறு' - ஒரு விளக்கம்

'சிவப்பேறு' அல்லது 'முத்திநிலை' குறித்து ந.சுப்புரெட்டியார் கூறும் விளக்கம் இங்குக் குறிக்கத்தக்கது:

> *"சாதனங்களால் அடையும் பயன்கள் இரண்டு. ஒன்று, 'பாசநீக்கம்'; மற்றொன்று '**சிவப்பேறு**'; அதாவது, சித்தாந்த சைவ **முத்தியை** அடைதல். உயிர்கள் அமைய வேண்டிய முடிந்த பயன் 'வீடுபேறு'; இதுவே 'சிவப்பேறு'; 'முத்தி' என்று வழங்கப்பெறுவதும் இதுவேயாகும்' வீடுபேற்றிற்கு நேரே சாதனமாயிருப்பது 'ஞானம்'......இந்த ஞானத்திற்குச் சாதனங்களாக உள்ளவை 'சரியை, கிரியை, யோகம்! என்பவை....*
>
> *"உயிர் வகைகள் வாழ்வு என்னும் பெரும்பயணம் போய்க் கொண்டிருக்கின்றன. அப்பயன், இறைவனை அடையும் பொழுது பூர்த்தியாகின்றது. இறைவனை அடைதலும் முத்தியடைதலும் உயிர்கட்கும் இயற்கைக்கும் முதற் காரணமாய் இருப்பவன் இறைவன்!.....*
>
> *"வாழ்வின் மேலான நோக்கம் 'வீடுபேறு' பெறுவது. அலையும் மனம் அங்குமிங்கும் உழன்று உலகின் சுகதுக்கங்களையெல்லாம் துய்த்து, மயக்கம் நீங்கித், தான்*

செய்த தவறுகளுக்கும் குற்றங்களுக்கும் மனம் நொந்து வருந்தித், தான் செய்தவற்றை நிவர்த்திக்க முயன்று இறுதியில் சாந்தம் அல்லது அமைதி பெற 'உண்மையான வீடு' நோக்கி வருகின்றது....ஆன்மா இவ்வுடலை ஊர்தியாகக் கொண்டு, வாழ்க்கைப் பயணத்தை முடித்துக் கொண்டு 'சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்தாகிய அந்தமில் இன்பத்து அழிவில் வீட்டை' அடைய முயல்கின்றது. இந்த 'வீடு' அமைதியானது; எல்லையில்லாத பேரின்பம் அளிப்பது. ஆகவே எதிர்மறையான 'மலம்' நீங்குதலை நோக்கமாகக் கருதாது பேரின்பமடைந்து எப்பொழுதும் அந்நிலையில் நீடிப்பதையே நோக்கமாகக் கொள்ளுகின்றது சித்தாந்தம். அதன் பின்னர் அந்நிலையினின்றும் மாறுவதே இல்லை. **சிவலோகத்தை** அடைதலையே குறிக்கோளாகக் கருதுகின்றான் சித்தாந்தி!"[1]

வ.ஆ.தேவசேனாபதி,

"சித்தாந்திகள் மும்மலங்களும் நீங்கப் பெற்றுச் சிவனடியைச் சேர்வதையே 'முத்தி' என்பர்"

என்கின்றார்.[2]

சைவ சித்தாந்தம் கூறும் அடிப்படையான - முதன்மையான கொள்கை 'அத்துவிதம்' என்பது, முன்னரே விரிவாக உரைக்கப்பட்டது. 'முத்திநிலை'யில் இதுகுறித்து ஒரு விளக்கத்தை அளிக்கின்றார் முரு.பழ. இரத்தினம் செட்டியார். அது வருமாறு :

"நாம் ஒன்றில் அதிக ஈடுபாடு கொண்டு உறைத்து நின்றால் நம்மை நாம் மறந்து விடுவோம்! '**முத்தி**' நிலையிலும் இப்படித்தான் நிகழ்கின்றது. அந்நிலையிலும் இறைவன், '**ஒன்றாகவும், வேறாகவும், உடனாகவும்**' இருக்கின்றான். அவனுடன் நாம் முழுமையாகக் கலப்பதால்தான் பேரின்பம் குறைவுபடாது கிடைக்கின்றது; அவன் வேறாக நிற்பதால், பேரின்பத்தை அவன் நமக்கு ஊட்ட முடிகின்றது; அவன் உடனாக நிற்பதால் அந்தப் பேரின்பத்தை நாம் அனுபவிக்கின்றோம். இஃது **சைவசித்தாந்தம்** சொல்லும் '**முத்திநிலை**'யாகும்!"[3]

**தாதான்மியமும் அத்துவிதமும்**

இறைவனது அறிவாகிய ஆற்றலுக்குச் 'சிற்சத்தி' என்று பெயர். (சித் - அறிவு). இறைவனை 'நாயகன்' என்றும்; 'சிற்சத்தி'யை 'நங்கை' என்றும்

கூறுவர். 'சிற்சத்தி' இறைவனின் வேறன்று; அவனைப் பிரியாது நீக்கமின்றி இருப்பது; ஆதலின் அதற்குத் 'தாதான்மியசத்தி' என்று பெயர்.[4]

முதல்வனாகிய சிவனும் அவனது சத்தியும் பொருளால் ஒன்றேயாம்; ஆனால் செயற்பாட்டால் இருவகையாக நிற்கும். ஒன்று, தானேயாய் நிற்கும் நிலை; அப்போது, அவன், தன்னையே தான் விளக்கி நிற்பன்; அதுவே 'சிவன்' எனும் நிலை. மற்றொன்று, உயிர்களோடும் பாசப் பொருள்களோடும் இயைந்து நின்று அவற்றைச் செயற்படுத்தும் நிலை; அதுவே 'சத்தி'யாய் நிற்கும் நிலை. இவ்வாறு முதல்வனே, சூரியனும் ஒளியும் போலத் தானும் தன் சத்தியும் என இருதிறப்பட்டு நிற்பன். ஆதலின், சிவமும் சத்தியும் பொருளால் ஒன்று, தன்மையால் இரண்டு; எனினும் ஒன்றையின்றி மற்றொன்று இல்லாத நிலையினவாகும்! சிவம் - சத்திகளிடையே உள்ள தொடர்பு, 'தாதான்மியம்' எனப்படும். இதனை 'ஒருமையில் இருமை' என்பர்; சிவம், உயிர்களோடு **'ஒன்றாய், வேறாய், உடனாய்'** இயைந்து நிற்றலாகிய தொடர்பே '**அத்துவிதம்**'; இதனை 'இருமையில் ஒருமை' என்பர்.[5]

'முத்தி'யிலும் முதல்வனின் நிலை 'அத்துவிதநிலை'யேயாம் என்பது மனங்கொளத்தக்கது.

### அணைந்தோர் தன்மை

சிந்தனைக்கு அப்பாற்பட்டு நிற்கும் இயல்பினன் இறைவன். அத்தகையவனை, மாயா காரியங்களாகிய கருவி கரணங்களின் வழிக் காண்டல் இயலாது. அதனால், அக் கருவிகளினின்றும் நீங்கிய முத்தர்களே அவனை நேரில் காண இயலும். அவ்வாறு காண்பவர்கள், பின்னர்த் தாம் கருவி கரணங்களின் வழிப்பட்ட பொழுதும் அவனைக் காண்டல் கூடும். அசிந்திதனாய் நின்ற 'பதி'யைச் சிந்திதனாகவும் கண்டு வழிபடுதல், **சீவன்முத்தர்க்கே** இயல்வது.

> *"முத்திநிலையை எய்தினோர், உடம்போடு கூடி நிற்குங் காலும் 'சீவன்முத்தர்' எனப்படுவர்; உடம்பு நீங்கிய வழி அவர் இறைவனோடு இரண்டறக் கலந்து, 'பரமுத்தர்' ஆவர். எனவே, சீவன்முத்திக்கும், பரமுத்திக்கும் உள்ள வேறுபாடு உடம்போடு இருத்தலும், உடம்பின்றி இருத்தலும் ஆகும். சீவன்முத்தரை, '**அணைந்தோர்**' எனத் தமிழில் சித்தாந்த நூல்கள் கூறும்!"*[6]

என்பர் சி.அருணை வடிவேலு முதலியார்.

சிவத்தை அணைந்த 'சீவன்முத்தர்', இறைவனது திருவடியில் அணைந்து நிற்கவொட்டாது விலகும்படிச் செய்வனவாகிய 'மும்மலங்கள்'

என்னும் அழுக்கை, 'ஞானம்' என்னும் நீரால் கழுவிப் போக்குவர். தம்மைப் போல் அயரா அன்பினையுடைய மெய்யடியார்களோடு கூடியிருந்து அவர்களது திருவேடத்தையும், திருக்கோயிலில் உள்ள திருமேனிகளையும் 'சிவன்' என்றே எண்ணி, அவற்றை வழிபடுவர்.

> *"காமக்கிழத்தியர் வடிவில் காணப்படும் ஆடை, சாந்து அணிகலன் முதலாயின, காமுகரை வசீகரித்து இன்பம் செய்யுமாறு போல, மெய்யுணர்வுடையாரைக் காட்சி மாத்திரையின் வசீகரித்து இன்பம் செய்தல் பற்றித் திரு வேடத்தையும், சிவாலயத்தையும்"*[7]

சிவபெருமானாகவே கண்டு வழிபடுக என விளக்கமுரைப்பர் சிவஞான முனிவர்.

இறைவன், எல்லா இடங்களிலும் நீக்கமற நிறைந்து நிற்பவன்; எனினும் தன் அடியாரிடத்திலும், திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் திருமேனிகளில் மட்டுமே, அவன், தயிரில் நெய் போல இனிது விளங்கித் தோன்றுவன். ஏனைய இடங்களில், பாலில் நெய் போல விளங்காது நிற்பன். எனவே இவ்விரண்டு இடங்களில் மட்டுமே வழிபடல் இன்றியமையாதது.

சிவனடியார்கள், 'சிவோகம்பாவனை'யால், சிவனை உணர்ந்தவர்களாவர். இறைவனும், அவ் அடியார்களைத் தனது வியாபகத்துள் அடக்கிக் கொண்டு, அவர்களைத் தானாக்கிக் கொள்கின்றான். இவ்வகையில், அவ் அடியார் 'சிவனே'யாவர். அவர்களிடத்தில் இறைவன், தயிரில் நெய் போல விளங்கி நிற்பன்.

இத்தகு 'சிவஞானியர்' குறித்து ஆ.ஆனந்தராசன் கூறுவதாவது:

> *"சிவஞானியர் எல்லாப் பொருள்களிலும் இறைவன் அவையேயாய்க் கலந்து நிற்கின்ற '**அத்துவிதநிலை**' பற்றி எல்லாவற்றையும் சிவமாகக் காண்பர்; அம்முறையில் திருக்கோயிலுள் இருக்கின்ற திருமேனிகளையும் அவனாகவே கண்டு வழிபடுவர். அதனால் அவர்களுக்கு இறைவன் அத்திருமேனிகளில் மந்திர சாதகம் இல்லாமலே எக்காலத்திலும் விளங்கி நின்று அருள் புரிவான். ஆகையால் அடியவர்களிடத்தில் அவன் விளங்கி நிற்றல் போலவே திருக்கோயில் உள்ளிருக்கும் திருமேனிகளிலும் சீவன் முத்தர்க்கு விளங்கியிருப்பான் என்பது தெளிவாகும்!"*[8]

இறைவன், மிகப்பெரிய கருணைவள்ளல்; தன்னை அறியாது கிடந்த சிற்றறிவுயிர்க்கு ஞானக்கண்ணைக் கொடுத்துத், தன்னை உணருமாறு செய்தவன். கைம்மாறு கருதாத இறைவனது இப்பேருதவியை உயிரானது,

செய்ந்நன்றி மறவாமல், 'குரு'வாக எழுந்தருளிவந்த அரனை வழிபடுதலே உறுதி தருவதாம்![9]

**திருநாவுக்கரசர் தேவாரத்தில்!**

ஆருயிர்கள், மலப்பிணிப்பால் இன்பம் எய்தாமல், துன்புறும் நிலைகண்டு இரங்கும் இறைவன், அவ்வுயிர்களைத் துன்பத்தினின்றும் விடுவித்துத் தன் திருவடியின்பத்தைத் துய்ப்பித்து வாழ்விக்கும் நிலைக்கு 'அருள்நிலை' என்று பெயர்.

இத்தகு 'அருள்நிலை' தமக்குக் கிடைத்ததாக நாவரசர் கூறுகின்றார்.

"பாற்கடலில் தோன்றிப் பல்லுயிரையும் கொன்றழிக்க வந்த பெருங்கொடு நஞ்சினை, விண்ணவர் வேண்டச் சிவபெருமான் உண்டு, கண்டத் தடக்கியிருளினன்; அதனால் 'திருநீலகண்டத்தர்' எனப் பெயர் பெற்றவர்; அத்தகு கண்டத்தையும், திருநீறு பூசிய திருமேனியையும் உடையவர்; அழகான புலித்தோலினை ஆடையாகக் கொண்டவர்; அத் தோலின் மேல் அரவக் கச்சினைக் கட்டியுள்ளவர்; செம்பஞ்சு ஊட்டப்பெற்ற மெல்லிய திருவிரல்களையுடைய உமாதேவியைப் பாகத்தே கொண்டவர்; ஒப்பற்ற பவழம் போன்ற செந்நிறம் உடையவர். இத்தகு அருளாளரான சிவபெருமான், எளியேன் தூங்கும்போது கனவிடைத் தோன்றியருளினன்; தனது வலது திருக்கையில் உள்ள உடுக்கையைக் கொட்டி அருளினன்; அடியேன் அந்த இசை முழக்கம் கேட்டதுமே 'துண்'ணென எழுந்திருந்தேன்; பின் நிகழ்ந்தனவற்றைச் சொல்லால் விளக்கும் ஆற்றல் எனக்கு இல்லை! பொன் போன்ற திருச்சடையின்மேல் புனல் சூடியுள்ள எம்பெருமான், 'நம் ஊர் திருப்புறம் பயம்' என்று அருளிப் போயினன். (ஆதலின் நான் அங்குச் செல்ல வேண்டும்!)"[10] என்ற பொருளில் நாவரசர் பாடும் திருப்பாட்டு வருமாறு:

*"நஞ்சடைந்த கண்டத்தர் வெண்ணீ றாடி*
*நல்லபுலி யதள்மேல் நாகங் கட்டிப்*
**பஞ்சடைந்த மெல்விரலாள் பாக மாகப்**
*பராய்த்துறையே னென்றோர் பவள வண்ணர்*
*துஞ்சிடையே வந்து துடியுங் கொட்டத்*
**துண்ணென்றெழுந் திருந்தேன்! சொல்ல மாட்டேன்!**
*புன்சடையின் மேலோர் புனலுஞ் சூடிப்*
*புறம்பயம்நம் மூரென்று போயி னாரே!"*[11]

- இதன்கண், சிவத்தோடு ஒன்றியிருக்கும் 'சத்தி' பேசப்பட்டுள்ளது. "துண்ணென் றெழுந் திருந்தேன்; சொல்ல மாட்டேன்!" என நாவரசர் மொழிவது, 'சீவன்முத்தர்' நிலையைக் குறிப்பதாகும். அந்நிலை, பிறர்க்கு

எடுத்துரைக்கும் தன்மையதன்று; அவரவரும் இறையனுபவத்தால் நுகரத்தக்கதாம்!

ஈசன்பால் தம்மையே மறந்து நின்ற நிலை குறித்து அகத்துறைப் பாடல்கள் மூலம் புலப்படுத்துவார் நாவரசர். அவற்றில் ஒன்று:

> "கொள்ளைக் குழைக்காதிற் குண்டைப் பூதங்
> கொடுகொட்டி கொட்டிக் குனித்துப் பாட
> **உள்ளங் கவர்ந்திட்டுப் போவார் போல**
> **உழிதருவர் நான்தெரிய மாட்டேன்! மீண்டேன்!**
> கள்ள விழிவிழிப்பர் காணாக் கண்ணாற்
> கண்ணுள்ளார் போலே கரந்து நிற்பர்!
> வெள்ளச் சடைமுடியர் வேத நாவர்
> வெண்காடு மேவிய விகிர்த னாரே!"[12]

இத்திருப்பாட்டுக்குப் ப.இராமநாதபிள்ளை தரும் உரைவிளக்கம் வருமாறு:

> "மிகுதியும் கனத்த குண்டலங்கள் அணியப்பெற்ற காதினை யுடைய சிறுத்துப் பெருத்த உருவத்தினையுடைய பூதங்கள், 'கொடுகொட்டி' என்னும் பறையினை முழக்கி ஆடிப் பாடத் தாமும் கூத்தாடிக் கொண்டு வருவார் போல் வந்து, ஏழையேன் உள்ளத்தைக் கவர்ந்திட்டுத் திரிகின்றனர்; அதனால் **எளியேனுக்கு ஏற்பட்டுள்ள நிலைமையினை இன்னவாறென்று உணரேன்**; திரும்பினேன்; காண்டற்பொருட்டுக் கொள்ளாத திருக்கண்ணினால் களவியல் முறை விழிப்பு; எளியேன் கருத்தினுள் நிறைந்து நிற்பார் போன்று **மறைந்து நின்றருள்கின்றனர்**; அவரே சலமகளாகிய வெள்ள நீரினைத் திருச்சடையின்கண் தாங்கிய திருமுடியினை யுடையவர்; உறுதிப்பொருள் நான்கும் பயக்கும் திருமாமறையினை உண்ணின்றுணர்த்தி எழுப்பியருளிய திருவாயினையுடையவர்; அவர் திருவெண்காட்டிலெழுந் தருளியிருக்கும் பெரும்பொருட் கிளவிக் கடவுளராவர்!"[13]

இவ்வாறு கூறும் இவர், மேலும் சில நயமான விளக்கங்களைத் தருகின்றார்.

> "'உள்ளங்கவர்தல்': அகப்பொருட்டுறையில் காதல ரிருவருள்ளமும் ஒன்றுபட்டு ஒருவரை ஒருவர் இன்றி யமையாராய் இருவரும் தம் வயம் இழந்து நிற்றல். இதுபோல் செவ்வி வாய்ந்த ஆருயிர், இறைவன்

> வயப்பட்டுத் தன்வயம் இழந்து நிற்பதாகும். **தன்வய மிழந்து சிவன்வயப்பட்டார்க்கே திருவடிப் பேரின்ப முண்டாம்.** தன்வயம் இழத்தலென்பது, ஆவியின் அன்பறிவாற்றல்கள் ஆண்டானின் அன்பறிவாற்றல்களுள் அடங்கி, அவன்வழி நிற்றல்'. சிவபெருமான் ஆருயிரின் உள்ளத்தின்கண் இடையறாதியற்றுங் கூத்தின் திருக்குறிப்பே 'உழி தருவர்' என்பதாம். 'கள்ளவிழி' என்பது, இறைவன் ஆருயிர்களைக் களவுவழியாகத் **தன்வயப்படுத்துவதாம்!**"[14]

என்பதும் அவர்தரும் விளக்கமாம்!

இத்திருப்பாட்டில் அப்பர் பெருமான், "உள்ளங் கவர்ந்திட்டுப் பேசுவார் போல, உழிதருவர் நான்தெரிய மாட்டேன், மீண்டேன்" என உரைப்பது 'சீவன்முத்தர்' நிலையைக் குறிப்பதாகும்.

ஆனால் இத்தகு உயர்நிலை பெற, 'அவன் அருள்' வேண்டும்! அவனருளின்றி எந்நிலையும் வாராது! இதனையும் அப்பரடிகள் உணர்த்துகின்றார்:

> "**இருளாய வுள்ளத்தி னிருளை நீக்கி**
> *யிடர்பாவங் கெடுத்தேழை யேனை யுய்யத்*
> *தெருளாத சிந்தைதனைத் தெருட்டித் தன்போற்*
> **சிவலோக நெறியறியச் சிந்தை தந்த**
> **அருளானை!** *ஆதிமா தவத்து ளானை*
> *ஆறங்க நால்வேதத் தப்பால் நின்ற*
> *பொருளானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்*
> *போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே!*"[15]

'சிவலோகநெறி'யினை அறிவிப்பவனும் ஆண்டவனே; இதனைச் சைவ சித்தாந்தம் 'உணர்த்த உணர்தல்' என்று பேசும். இவ்வாறு அறிவிப்பதற்குமுன், உயிர்களிடத்துள்ள 'ஆணவமலம்' ஆகிய 'இருள்' நீங்கவேண்டும். இதனையே நாவரசர், 'இருளாய உள்ளத்தின் இருளை நீக்கி' என்றார். அதுமட்டுமன்று; ஆணவப் பிணிப்பால் உண்டாகும் துன்பத்துக்குக் காரணமாயிருக்கும் 'பாவங்'களையும் தொலைத்தார் என்பது தோன்ற 'இடர் பாவம் கெடுத்து' என்றார். "சுட்டறிவாலும் சிற்றறிவாலும் தெளிவிக்க முடியாத எளியேனது சிந்தையாகிய எண்ணத்தைத் தெளிவித்தார்; தனக்கே உரிய 'சிவலோகத்'தை அடைதற்கான வழிவகைகளை அறியுமாறு அறிவித்தார்! அவரை என்றும் மறவாமலிருப்பதற்கான எண்ணத்தையும் அருளிய அருளாளர்" என்றும் கூறுகின்றார்.

*"சிவபெருமான் சிந்தையைத் தெளிவித்தருளின் அதுவே சிவலோக நெறியாகும். அந்நெறி நிற்பார், அகத்தும் புறத்தும் திருவடியின்பத்துத் திளைப்பர்!"*[16]

என்பார் ப.இராமநாதபிள்ளை.

சிவனடியார்களின் பெருமை குறித்தும், அத்திருக்கூட்டத்துள் தாமும் ஒருவராக நின்று சிவனருளைப் பெற வேண்டும் என்றும் நாவரசர் கூறும் இடங்கள் பல. அவற்றுள் ஒருசில வருமாறு:

*"வீடினார் உலகினில்* **விழுமிய தொண்டர்கள்**
*கூடினார்* **அந்நெறி கூடச் சென்றலும்**
**ஓடினேன்** *ஓடிச்சென்று உருவம் காண்டலும்*
*நாடினேன் நாடிற்று நமச்சி வாயவே!"*

*"பாடுவார் பணிவார் பல்லாண்டிசை*
*கூறு* **பத்தர்கள்** *சித்தத் துள்புக்குத்*
*தேடிக் கண்டு கொண்டேன்*
*திருவாரூர் அம்மானே!"*

*"பொறிப்பு லன்களைப் போக்கறுத்து உள்ளத்தை*
*நெறிப்ப டுத்து* **நினைந்தவர்** *சிந்தையுள்*
*அறிப்பு றும்அமு தாயவன் ஏகம்பம்*
*குறிப்பி னாற்சென்று* **கூடித் தொழுதுமே!"**[17]

இத்தகைய அடியார்கட்கும் தாம் ஓர் அடியாராக ஆக வேண்டும் என்றுகூடப் பேசுகின்றார் நாவுக்கரசர்.

*"மடந்தை பாகன் வலஞ்சுழி யான்அடி*
**அடைந்த வர்க்குஅடி மைத்திறத்து ஆவனே!"**[18]

என்பது அவர் அருள்மொழி!

எம்பெருமான் திருவருளுக்கு ஆளாகி நின்ற ஞானசம்பந்தப் பெருமான் போன்ற அடியார்களையும் அவர்களின் அருட்செயல்களையும் வியந்து வியந்து போற்றும் உயர் பண்பினை நாவரசர்பால் காணலாம்!

*"பாடிப் பெற்ற பரிசில் பழங்காசு*
*வாடி வாட்டம் தவிர்ப்பார் அவரைப்போல்*
*தேடிக் கொண்டு திருவாய்மூர்க் கேஎனா*
*ஓடிப் போந்திங்கு ஒளித்தவாறு என்கொலோ?"*

*"திறக்கப் பாடிய என்னினும் செந்தமிழ்*
*உறைப்புப் பாடி அடைப்பித்தா ருந்நின்றார்!"*[19]

என்பன சம்பந்தரைப் பற்றியன.

*"சண்டி யீச்சுரவர்க்கருள் செய்தஅக்*
*கொண்டி யீச்சர வன்கழல் கூறுமே!"*[20]

என்பது, சண்டேசரைப் பற்றியது.

ஆடியும் பாடியும் தன்னைத் தொழுது வணங்கும் சிவனடியார்களின் அன்பினையே பெரும் பொருளாகக் கருதுபவன் சிவபெருமான் என்பதை,

*"துன்பிலாத் தொண்டர்கூடித் தொழுதழுது ஆடிப்பாடும்*
*அன்பலாற் பொருளும் இல்லை ஐயன்ஐயாற னார்க்கே!"*

*"பண்ணினைப் பாடியாடும்*
*பக்தர்கள் சித்தம் கொண்டார்!"*[21]

என்னும் பதிகங்களால் குறிப்பிடுவர் நாவரசர். எனவே "சிவனடியார்கட்கு மனம் உவந்து சிறப்பினைச் செய்ய வேண்டும்" என்ற குறிப்பினால், தம் நெஞ்சினை நோக்கி,

*"அத்தி யால்,அடி யார்க்குஒன்று அளித்திலை*
*...............மடநெஞ்சமே!"*[22]

என்கின்றார். இத்தகைய சிவனடியார் திருக்கூட்டத்தோடு சேர்ந்தால், முத்தியாகிய மேனிலை எய்த 'ஏணி'யாக இருப்பன் எம் ஈசன் என்னும் பொருள்பட,

*"அடியார்க்கு முத்தி காட்டும் ஏணியை"*

*"பத்தர்க்கு முத்திகாட்டும் வரத்தானை"*[23]

என்றும் கூறுகின்றார் அப்பரடிகள்!

சிவனடியார்களோடு சேராமல் இதுகாறும் வீணே கழித்தமைக்குக் கழிவிரக்கங் கொண்டு நாவரசர் பாடும் நற்றமிழ்ப் பாடல் வருமாறு:

*"குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும் பொல்லேன்*
*குற்றமே பெரிதுடையேன் கோல மாய*
*நலம்பொல்லேன் நான்பொல்லேன் ஞானி யல்லேன்*
**நல்லாரோ டிசைந்திலேன்**! *நடுவே நின்ற*
*விலங்கல்லேன் விலங்கல்லா தொழிந்தேன் அல்லேன்*
*வெறுப்பனவும் மிகப்பெரிதும் பேச வல்லேன்*
*இலம்பொல்லேன் இரப்பதே ஈய மாட்டேன்*
*என்செய்வேன் தோன்றினேன் ஏழை யேனே!"*[24]

இவ்வாறு கூறுபவர், சிவனடியார்களைக் கண்டால் சிவனெனவே நினைந்து தொழுதல் வேண்டும் என்கின்றார்.

*"எவரேனுந் தாமாக விலாடத் திட்ட*
*திருநீறுஞ் சாதனமுங் கண்டா லுள்கி*

*உவராதே யவரவரைக் கண்ட போதே*
*உகந்தடிமைத் திறம்நினைந்தங் குவந்து நோக்கி*
*இவர்தேவர் அவர்தேவ ரென்று சொல்லி*
*இரண்டாட்டா தொழிந்தீசன் திறமே பேணிக்*
*கவராதே தொழுமடியார் நெஞ்சி னுள்ளே*
*கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே!"*[25]

என்பது அவர் திருமொழி!

## அப்பர் வாழ்வும் சிவப்பேறும்

'சிவப்பேறு' குறித்த விளக்கம் இவ்வியலின் தொடக்கத்தில் இயம்பப்பட்டுள்ளது. எனினும் ஈண்டும் சில சொல்லல் சாலும்.

உயிரானது, சிவனை உலகத்துப் பொருள்களை அறிவது போல அறிவதில்லை. உலகப் பொருள்கள் உயிருக்கு வேறாக, 'அது' என்று சுட்டியறியும்படியாக நிற்கின்றன. அவ்வாறு 'சிவன்' உயிருக்கு வேறாய், அதனால் சுட்டியறியப்படுபவன் அல்லன். அவன், தன்னை அறியும் அவ்வுயிரின் அறிவினுள்ளே '**அத்துவிதமாய்**'க் கலந்து நிற்பவன். அதனால் அவனை அறிகின்ற உயிரும், அவனுக்கு வேறாய் நின்று அறியாமல், ஒன்றாய் நின்றே அறியும். அஃதாவது உயிராய் நின்று அறியாமல், **சிவமாய்** நின்று அறியும். எனவே 'முத்தி'யில் உயிரானது, சிவத்தோடு இரண்டறக் கலந்து நின்றுதான் அதனை அறிந்து அனுபவிப்பதாகிறது.[26]

'முத்தி'ப் பயனை அடைவதற்குச் சிறந்த சாதனம் 'ஞானம்' என்பது முன்னரும் சொல்லப்பட்டது. இதனைப் பின்வருமாறு விளக்கலாம் :

முத்தி - ஞானம் - இருவினையொப்பு (வினைநீக்கம்) -
தவம் (வழிபாடு) - சத்தி நிபாதம்

உயிரானது, திருவருளில் அழுந்தி நிற்கும் நிலை 'அருள்நிலை' எனப்படும்; திருவருள் வழியாகச் சிவத்தில் அழுந்தி நிற்கும் நிலை 'ஆனந்த நிலை' எனப்படும். எனவே, அருள்நிலைக்கு அப்பால் உள்ளது 'ஆனந்த நிலை' எனலாம். ஆன்மா, சிவத்தில் அழுந்துதலாகிய ஆனந்தநிலையே 'முத்தி' எனப்படும்.

'சிவம்' இன்பப் பொருள் ஆதலின் '**சிவப்பேறு**' என்பது, 'இன்புறுநிலை' ஆயிற்று. இவ் இன்புறு நிலையில், சிவத்தைச் சார்ந்த உயிரானது, 'தான்' என்பது சிறிதும் தோன்றாமல், சிவமாகவே நிற்கும். மாணிக்கத்தைச் சார்ந்த பளிங்கு, அம்மாணிக்கமாகவே நிற்றல் போன்றது இது! பளிங்கு, மாணிக்கமாக ஆகிவிடாது! எனினும், மாணிக்கத்தின் தன்மையைத் தன் தன்மையாகக் கொண்டு காட்டும். அதுபோல, முத்தியில்,

**உயிரானது சிவமேயாகி விடாது! எனினும் சிவத்தின் தன்மையைத் தன் தன்மையாகப் பெற்றிருக்கும்.**

மேலும், இம் முத்திக் காலத்தில், உயிருக்குத் தன்னைப் பற்றிய உணர்வு தோன்றாது, பேரின்பம் ஒன்றே தோன்ற, அதில் மூழ்கி விடும் ஆதலால் 'சிவம்' ஆகிய ஒரு பொருளே உள்ளது போலத் தோன்றும்!

முத்தியில், 'உயிரும் சிவமும்' ஆகிய இரண்டும், உண்மையில் உள்ளவையாம். ஆயினும் பிரிந்து வேறு நில்லாது, ஒரு பொருள் போல நிற்கும். கலப்பினால் ஒன்றாய் நிற்கும். அக்கலப்பே, '**அத்துவிதம்**' எனப்படும்.[27]

'முத்தியில் உயிரும் சிவமும்' குறித்து ஆ.ஆனந்தராசன் கூறுவது இங்கு முதன்மையாகக் குறிக்கத்தகும்:

> *"உயிரும் சிவமும் ஒன்று என்னும் இக்கொள்கையைச் சைவ சித்தநாதம் ஏற்பதில்லை! எத்துணையும் அரிய சிவமும், எத்துணையும் எளிய உயிரும், பொருளால் ஒன்றாகுமோ? உயிர், பாசத்துட்பட்டுப் பிணிப்புண்டு நிற்பது; சிவம் அப்பிணிப்பின்றித் தனியே நிற்பது. இவ்விரண்டும் பொருளால் ஒன்று எனல் எவ்வாறு பொருந்தும்? முதலவன் ஆண்டானும், உயிர்கள் அவனுக்கு ஆட்பட்டு ஒழுகுதற்குரிய அடிமையும் என நிற்கும் உயர்வு தாழ்வுடைய வேறுவேறு முதல்களே!"*[28]

எனவே உயிரானது சிவத்தில் அழுந்தி, அதன் இயல்பை உணருந்தோறும் 'சிவபோகம்' வரம்பின்றிப் புதிது புதிதாய் விளைந்து, உயிர்க்கு இன்பம் செய்யும் என்பதாம்!

அப்பரடிகள், 'சிவப்பேறு' ஆகிய இம் 'முத்திநிலை' குறித்துப் பலபடக் கூறுகின்றார். அவற்றுட் சில வருமாறு:

'முத்தி' என்னும் சொல் தவிரச் "சிவலோகம், சிவகதி, சிவமாய் நின்ற செம்மை, செல்கதி, வீடு, திரு, தூநெறி" முதலான பல சொற்களையும் எடுத்தாள்கின்றார் நாவரசர்.[29]

> *"பத்தர்கட்கு அருளும் வைத்தார்*
> *பாய்விடை யேற வைத்தார்*
> *சித்தத்தை ஒன்ற வைத்தார்*
> ***சிவமதே** நினைய வைத்தார்*
> ***முத்தியை முற்ற வைத்தார்***
> *முறைமுறை நெறிகள் வைத்தார்*
> *அத்தியின் உரிவை வைத்தார்*
> *ஐயன்ஐ யாற னாரே!"*[30]

என்று முத்திநிலை அளிப்பவன் முதல்வன் என்று மொழியும் நாவரசர், இறைவனின் திருவடித் தலமானது என்னென்ன இன்பங்களைத் தரவல்லது என்பதை ஓர் அழகான பாடலால் தெளிவுபடுத்துகின்றார்:

*"சிந்திப் பரியன! சிந்திப்*
*பவர்க்குச் சிறந்து செந்தேன்*
*முந்திப் பொழிவன! முத்தி*
*கொடுப்பன! மொய்த்திருண்டு*
*பந்தித்து நின்ற பழவினை*
*தீர்ப்பன! பாம்புசுற்றி*
*அந்திப் பிறையணிந்து ஆடும்ஐ*
*யாறன் அடித்தலமே!"*[31]

நாவரசர், சிவானந்தத் தேனைப் பருகிய பான்மையைப் 'பொய்யுறக்கம் மேவின'தாக ஒரு பாடலில் குறிப்பிடுகின்றார்:

*"வஞ்சப்பெண் ணரங்கு கோயில்*
*வாளெயிற்று அரவந் துஞ்சா*
*வஞ்சப் பெண் ணிருந்த சூழல்*
*வான்தவழ் மதியம் தோயும்*
*வஞ்சப்பெண் வாழ்க்கை யாளன்*
*வாழ்வினை வாழ லுற்று*
*வஞ்சப்பெண் ணுறக்க மானேன்*
*வஞ்சனேன் என்செய் கேனே!"*[32]

இதற்கு வ.த.இராமசுப்பிரமணியம் கூறும் உரை வருமாறு:

"வஞ்சப்பெண்ணாகிய கங்கை சூடிய இடத்தில், அரவமானது துயிலாது விழித்திருக்க, அச்சூழலில் அது, ஈசனின் சடையில் மேவும் சந்திரனை விழுங்க நோக்குகின்றது. உமாதேவியைப் பாகமாகக் கொண்டு மேவும் பெருமானை நோக்கும் கங்கையினில், சந்திரன் தோய்கின்றது. ஒவ்வொன்றும் ஒவ்வொரு குறிப்பினைக் கொண்டு விளங்க, நான் ஒரு வஞ்சப்பெண் போன்று, ஈசனின் அருட்பேற்றினை மனத்துட் கொண்டு, பொய் உறக்கம் கொண்டேன்!"

இவ்வாறு உரைகூறி, "நாவுக்கரசர் சிவானந்தத் தேனைப் பருகும் நோக்கில் பொய்யுறக்கம் மேவினர் எனப் புகன்றதாம்!" என்று நயமும் காட்டுவர்.[33]

நாவரசர், ஆன்மாவனது 'சிவகதி' பெறுதற்குரிய எளிய வழியையும் கூறுகின்றார். அத்திருப்பாட்டு வருமாறு:

*"மெய்ம்மையாம் உழவைச் செய்து*
*விருப்பெனும் வித்தை வித்திப்*

*பொய்ம்மையாம் களையை வாங்கிப்*
*பொறையெனும் நீரைப் பாய்ச்சித்*
*தம்மையும் நோக்கிக் கண்டு*
*தகவெனும் வேலி யிட்டுச்*
*செம்மையுள் நிற்ப ராகில்*
***சிவகதி** விளையு மன்றே!"*[34]

இவ்வாறு 'சிவகதி' பெறுதற்கான வழி கூறும் வாகீசர், "பாதிரிப்புலியூர் இறைவா! எனக்குச் **சிவகதி** தந்து அருள்புரிக!" என வேண்டுகின்றார்.

*"கருவாய்க் கிடந்துன் கழலே*
*நினையும் கருத்து டையேன்*
*உருவாய்த் தெரிந்து உன்றன்நாமம்*
*பயின்றேன் உனதருளால்*
*திருவாய்ப் பொலியச் **சிவாய***
***நமவென்று நீறணிந்தேன்**!*
*தருவாய் **சிவகதி** நீபா*
*திரிப்புலி யூர்அரனே!"*[35]

என்பது அப்பர் திருவாக்கு.

'தமது வேண்டுகோள் வீண் போகாது' என்ற நம்பிக்கையால், "எல்லாம் வல்ல சிவபெருமான், எனது பிறப்பை அறுத்து, என் வினைகளையும் போக்கி இறுதியில், சிவலோகத்தே என்னை உறுதியாக இருத்திடுவான்!" எனத் துணிந்து கூறுகின்றார்:

*"தன்னைச் சரண் என்று தாளடைந்*
*தேன்றன் அடியடையப்*
*புன்னைப் பொழிற்புக லூர் அண்ணல்*
*செய்வன கேண்மின்களோ*
*என்னைப் பிறப்பறுத்து என்வினை*
*கட்டறுத்து ஏழ்நரகத்து*
*என்னைக் கிடக்கலொட் டான்,**சிவ***
***லோகத்து இருத்திடுமே**!"*[36]

திருநாவுக்கரசர், உழவாரத் திருத்தொண்டாற்றித் திருப்புகலூரில் எழுந்தருளிய ஈசனை வணங்கித் திருப்பதிகங்களால் ஏத்தி ஒழுகி வரலானார். 'தமியேனைப் புகலூரன் தன் திருவடிக்கீழ் 'இருத்திடும்' என்று, எழுகின்ற முன்னுணர்வால் திருப்பதிகங்கள் பல மொழிந்தார். 'திருப்புகலூர்த் திருப்பதிகத்' திருப்பாடல்கள், இவ்வுண்மைக்குச் சான்று பகரும்.

*"எண்ணுகேன் என்சொல்லி எண்ணு கேனோ*
*எம்பெருமான் திருவடியே எண்ணி னல்லால*
*கண்ணிலேன் மற்றோர் களைகண் இல்லேன்*
*கழலடியே கைதொழுது காணின் அல்லால்*
*ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்*
*ஒக்க அடைக்கும்போ துணர மாட்டேன்!*
*புண்ணியா!* **உன்னடிக்கே போது கின்றேன்***!*
*பூம்புகலூர் மேவிய புண்ணியனே!"*[37]

நாவரசரின் விருப்பம் நிறைவேறியது; அண்ணலாம் சிவபெருமானின் திருவடி நீழலில் இன்புறுதலாகிய 'சிவப்பேறு' பெற்றார்.

இவ் விந்தை நிகழ்ச்சியைத் தெய்வச் சேக்கிழார்,

*"மண்முதலாம் உலகேத்த மன்னுதிருத் தாண்டகத்தைப்*
*புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன் எனப்புகன்று*
*நண்ணரிய* **சிவானந்த ஞானவடி வேயாகி**
**அண்ணலார் சேவடிக்கீழ் ஆண்டஅர சமர்ந்திருந்தார்!"**[38]

என்னும் செந்தமிழ்ப் பாட்டால் சீர்படப்பாடுவது இங்கு எண்ணி எண்ணி இன்புறத் தக்கது!

உயிர்க்கு உறுதி பயக்கும் எண்ணில் திருப்பதிகங்களைத் திருவாய் மலர்ந்தருளிய திருநாவுக்கரசர், ஒரு சித்திரைத் திங்கள் சதயத் திருநாளில் மேற்கூறிய கடைசித் திருத்தாண்டகத்தைப் பாடிச் சிவானந்த ஞானவடிவேயாகி எம்பெருமானின் திருவடிக்கீழ் இனிதமர்ந்தார்.

இவ்வாறு நாவரசர் 'சிவப்பேறு' எய்துதற்குக் கையாண்ட நெறி - 'தொண்டுநெறி'யாகும்!

ஞானசம்பந்தப் பெருமான் முதன்முதலாகத் திருநாவுக்கரசரை நேரிற் கண்ட காட்சியைத் தெய்வச் சேக்கிழார் கூறுவது வருமாறு:

*"சிந்தை இடையறா அன்பும் திருமேனி தன்னில் அசைவும்*
*கந்தம் மிகையாம் கருத்தும்* **கைஉழ வாரப் படையும்**
*வந்திழி கண்ணீர் மழையும் வடிவிற் பொலிதிரு நீறும்*
*அந்தமி லாத்திரு வேடத் தரசும் எதிர்வந் தணைய!"*
*"தொண்டர் திருவேடம் நேரே தோன்றியது!"*[39]

தவத்திரு. குன்றக்குடி அடிகளார்,

*"இங்கர்சால். பிளேட்டோ, சாக்ரடீஸ் போன்றவர் களைவிடச் சமுதாய சீர்திருத்தத்திற்குத் தகுதியுடைய பெரியார் அப்பரடிகள் என்பது என்னுடைய ஆழ்ந்த நம்பிக்கை!"*[40]

என்று கூறுவது இவண் எண்ணத்தகும்.

'திருநாவுக்கரசு' என்ற சொல்லே 'திருமந்திரம்' என்பதைச் சிவப்பிரகாச சுவாமிகள்,

*"உற்றானலன் தவம் தீயில்நின்*
*றான்அலன் ஊன் புனலா*
*அற்றான்அலன் நுகர்வும் திரு*
**நாவுக்கரசு** *எனும்ஓர்*
*சொல்தான் எழுதியும் கூறியு*
*மேஎன்றும் துன்பில்பதம்*
*பெற்றான் ஒருநம்பி அப்பூதி*
*என்னும் பெருந்தகையே!"*[41]

எனும் திருப்பாட்டில் உணர்த்துவர்! அத்தகு சிறப்பினர் நாவரசர்!

தூய தொண்டு நெறியால் பரமனின் திருவருளுக்காளாகி, முத்தி நெறியாகிய சிவப்பேற்றில் ஆரா இன்பம் துய்த்தலே, மனித்தப் பிறவி எடுத்ததன் மாண்பயனாகும்!

ஞானசம்பந்தர் போன்ற திருமுறை அருளாளர்களும் இவை குறித்து விரிவாகப் பாடியுள்ளனர். இங்கே சில சான்றுகள் மட்டும் தரப்படுகின்றன:

*"இறைவன் கழல்ஏத்தும் இன்பம் இன்பமே!"*

*"ஏதுக்க ளாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்*
*சோதிக்க வேண்டா சுடர்விட்டுளன் எங்கள் சோதி!"*

*"திருவடி தொழுவார், ஊன்நயந்து உவகைகள் தருவார்!"*

*"நாதனை நல்லூர்ப் பெருமண மேவிய*
*வேதன தாள்தொழ* **விடேளி தாமே** *!"*[42]

என்பன சம்பந்தர் தேவாரம்.

*"தானெனை முன்படைத்தா னதறிந்து தன்***பொன்னடிக்கே**
*நானென பாடலந்தோ நாயினேனைப் பொருட்படுத்து*
*வானெனை வந்தெதிர்கொள்ள மத்தயானை யருள்புரிந்து*
**ஊனுயிர் வேறுசெய்தான்** *நொடித்தான்மலை உத்தமனே!"*[43]

என்பது சுந்தரர் தேவாரம்.

*"நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காஅட்டி"*

*"அடியார் ஆனார் எல்லாரும்*
*வந்துன் தாள்சேர்ந்தார்"*

"*சிந்தைதனைத் தெளிவித்துச்* ***சிவமாக்கி*** *எனையாண்ட*
*அந்தமிலா ஆனந்தம்*"

"*செம்மைய ஆய* ***சிவபதம்*** *அளித்த*
*செல்வமே சிவபெரு மானே!*"

"*சித்தமலம் அறுவித்துச்* ***சிவமாக்கி*** *எனையாண்ட அத்தன்!*"[44]

என்பன மணிவாசகர் மணிமொழிகள்!

"*சிவசிவ என்கிலர் தீவினை யாளர்*
*சிவசிவ என்றிடத் தீவினை மாளும்*
*சிவசிவ என்றிடத் தேவரும் ஆவர்*
*சிவசிவ என்றிடச்* ***சிவகதி*** *தானே!*"[45]

என்பது திருமூலர் திருமந்திரம்.

"*அப்பனை அணிதிரு ஆலங்காட்டுள்*
*அடிகளைச் செடிதலைக் காரைக்காற்பேய்*
*செப்பிய செந்தமிழ் பத்தும் வல்லார்*
***சிவகதி*** *சேர்ந்தின்பம் எய்துவாரே!*"[46]

என்பது காரைக்காலம்மையாரின் மூத்த திருப்பதிகம்.

ஞானசம்பந்தப் பெருமான், திருமணவினை மேற்கொண்டபோது, மணமகளின் திருக்கையைப் பற்றியவர்,

"*இந்தஇல் லொழுக்கம் வந்து சூழ்ந்ததே இவள்தன் னோடும்*
*அந்தமில்* ***சிவன்தாள் சேர்வன்!***"[47]

என்றும் அவ்வாறே, திருமணத்திற்கு வந்தோர், 'ஈனமாம் பிறவி தீர யாவரும் புகுக' என்றும் கூற, அனைவருமே **சிவப்பேறு** எய்தினர் என்பர் சேக்கிழார்.

இவ் இயலில் கூறிய கருத்துக்கள் அனைத்தும் சைவ சித்தாந்த சாத்திர நூல்களில் விரிவாக இடம்பெற்றுள்ளன. அவற்றுட் சில வருமாறு:

"***முத்திகளின்*** *மூன்று முதலும் மொழியக்கேள்*
*சுத்தஅநு போகத்தைத் துய்த்தல்அணு - மெத்தவே*
*இன்பங்கொ டுத்தல்இறை சித்தைவிளை வித்தல்மலம்*
*அன்புடனே கண்டுகொள்அப் பா!*"[48]

என்பது 'உண்மை விளக்கம்'.

"*விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்*
*களந்தறிந் தறியா ஆங்கவை போலத்*
*தாந்தம் உணர்வின் தமியருள்*
*காந்தங் கண்ட பசாசத் தவையே*"[49]

என்பது மெய்கண்டார் அருளிய சிவஞானபோத நூற்பா. "உயிர்கள், தாமாகச் செயற்படும் தன்மையுடையனவல்ல! முதல்வனது திருவருளாலேயே அவை செயற்படும். அவ்வாறு செயற்படும் காலத்தில், அவை தம்மையும் அறியா; தமக்கு உற்ற துணையாய் உடனிருந்து உணர்த்தி வரும் திருவருளையும் அறியா!" என்பது கருத்து.

*"செம்மலர் நோன்றாள் சேரல் ஒட்டா*
*அம்மலங் கழீஇ* **அன்பரொடு மரீஇ**
*மாலற நேயமும் மலிந்தவர் வேடமும்*
*ஆலயந் தானும் அரனெனத் தொழுமே!"*[50]

'அணைந்தோர் தன்மை' கூறும் சிவஞான போத நூற்பா இது. "சிவத்தை அணைந்த சீவன்முத்தன், செந்தாமரை மலர் போல விளங்குகின்ற அம் முதல்வனது திருவடியில் அணைந்து நிற்க ஒட்டாது விலகும்படி செய்வனவாகிய மும்மலங்கள் என்னும் அழுக்கை ஞானம் என்னும் நீரால் கழுவி நீக்குவான். தன்னைப் போல் அயரா அன்பினையுடைய மெய்யடியார்களோடு கூடியிருந்து அவர்களது திருவேடத்தையும், திருக்கோயிலில் உள்ள திருமேனிகளையும் 'சிவன்' எனவே தெளிந்து அவற்றை வழிபட்டு வாழ்வான்!" என்பது இதன் கருத்து.[51]

*"காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போற்*
*காணஉள் ளத்தைக் கண்டு காட்டலின்*
*அயரா அன்பின்* **அரன்கழல் செலுமே!"**[52]

என்பது 'பரமேசுரனது சீபாதங்களை அணையுமாறு உணர்த்தும்' சிவஞான போத நூற்பாவாகும்.

*"பத்தியினான் மறவா தேத்த அவனது*
*சீபாதத்தை யணையும்"*[53]

என்பது இந்நூற்பாவில் வரும் இரண்டாம் அதிகரண மேற்கோளாகும்.

இவற்றை உட்கொண்டு, அருணந்தி சிவாசாரியரும், தமது 'சிவஞான சித்தியார் சுபக்கத்'தில், பின்வருமாறு கூறுவர்:

*"காயமொழிந் தாற்சுத்த னாகி யான்மாக்*
*காட்டக்கண் டிடுந்தன்மை யுடைய கண்ணுக்*
*கேயுமுயிர் காட்டிக்கண் டிடுமா போல*
*ஈசனுயிர்க் குக்காட்டிக் கண்டிடுவ னித்தை*
*ஆயுமறி வுடையவனா யன்பு செய்ய*
*அந்நிலைமை இந்நிலையி னடைந்தமுறை யாலே*
*மாயமெலா நீங்கியரன்* **மலரடிக்கீ ழிருப்பன்**
*மாறாத* **சிவாநுபவ** *மருவிக் கொண்டே!"*[54]

**இதற்கு மு.திருவிளங்கம் தரும் பொழிப்புரையாவது:**

*"மெய்ஞ்ஞானம் பெற்று நிட்டை கைவந்த சீவன்முத்தர் உடலழிந்துபட, மும்மலமும் பற்றறத் திருவடிப் பேறாகும் அத்துவிதப் பரமுத்தியின்பந் துய்த்திருப்பர்; முதல்வன் அந்நிலையில் உயிரோடு லீலைமாத்திரையானே வேறாயும் உடனாயும் ஒற்றித்தும் நின்று சிவாநுபவ நிகழ்த்துவன்!"*[55]

*"செங்கமலத் தாளிணைகள் சேர லொட்டாத்*
*திரிமலங்க ளறுத்தீச னேசரொடுஞ் செறிந்திட்*
*டங்கவர்தந் திருவேட மாலயங்க ளெல்லாம்*
*அரனெனவே தொழுதிறைஞ்சி யாடிப் பாடி*
*எங்குமியா மொருவர்க்கு மெளியோ மல்லோ*
*மியாவர்க்கு மேலானோ மென்றிறுமாப் பெய்தித்*
*திங்கள்முடி யாரடியா ரடியோ மென்று*
*திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடை யோரே!'*[56]

என்பது, மெய்யன்பர் கூட்டத்துச் சிறப்பினைச் சொல்லும் 'சித்தியார்' பாடலாகும்.

"தத்துவங்களாகிய மூலைகளிலே கிடந்த ஆன்மாக்களைச் சிவானுபவ மாகிய முற்றத்திலே கொண்டு வந்து விட்டவர் மிகவும் பெரியவர்" என்ற பொருள்பட வருவது,

*"மூலை யிருந்தாரை முற்றத்தே விட்டவர்*
*சாலப் பெரியரென் றுந்தீபற!*
*தவத்தில் தலைவரென் றுந்தீபற!"*[57]

எனும் திருவுந்தியார்.

*"தொண்டர்க ளிடத்தும் வானோர் தொழுந்திரு மேனிதானும்*
*அண்டரும் கண்டி லாத அண்ணலே எனவ ணங்கி*
*வெண்தர ளங்கள் சிந்த விழிமொழி குழறி மெய்யே*
*கண்டுகொண் டிருப்பர் ஞானக் கடலமு தருந்தி னோரே!"*[58]

என்னும் 'சிவப்பிரகாச' நூற்பாவும் இங்குக் கருதத்தக்கது.

திருநாவுக்கரசர் அருளிய தேவாரப் பதிகங்களும், சம்பந்தர், சுந்தரர் அருளிய தேவாரப் பதிகங்களும், மணிவாசகர் அருளிய திருவாசகமும், பிற திருமுறைப் பாக்களுமாகியன, பின்னர் எழுந்த மெய்கண்ட சாத்திர நூல்கள் தோன்றற்கு வித்திட்டன என்று கூறுவது மிகவும் பொருந்துவதாம்!

**முடிபுகள்**

இவ் 'இயல்' வாயிலாக அறியத்தகும் முடிபுகளாவன:

1. சாதனங்களால் அடையும் பயன்களில் தலைமையானது 'சிவப்பேறு'. இத்தகு சிவப்பேற்றினை அடைய வேண்டுமென்பதே உண்மையான சைவ சித்தாந்தியின் கொள்கையாகும்;
2. சிவபெருமான் திருவடி சேர்தலே 'முத்தி' எனப்படும்;
3. இறைவன், உயிர்களோடு 'ஒன்றாகவும், வேறாகவும், உடனாகவும்' இருக்கும் நிலையாகிய 'அத்துவிதம்', 'முத்திநிலை'யாகிய 'சிவப்பேற்றி'லும் உண்டு;
4. 'முத்திநிலை' எய்திய சிவனடியார், உடம்போடு கூடி நிற்குங்காலும் 'சீவன்முத்தர்' எனப்படுவர். இவர்களை 'அணைந்தோர்' எனத் தமிழில் கூறுவர்;
5. சிவனடியார்கள் 'சிவோகம்பாவனை'யால், சிவனை உணர்ந்தவர்களாவர்;
6. இத்தகு அரிய நிலையைப் பெற்றவர் நாவரசர்;
7. திருநாவுக்கரசர், தம் தேவாரத்தில் இவற்றையெல்லாம் விரிவாகக் கூறியுள்ளார்;
8. ஆன்மாவானது 'சிவகதி' பெறுதற்கான வழிகளை நாவரசர் கூறியுள்ளார்;
9. 'உழவாரத் திருத்தொண்டி'ல் தலைநின்ற திருநாவுக்கரசர், திருப்புகலூரில், 'புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்!' எனத் திருவாய் மலர்ந்து, அவ்வாறே சிவனருளால் அண்ணலார் சேவடிக்கீழ் இனிதமர்ந்தவர்;
10. இத்தகைய 'சிவப்பேறு' எய்துதற்கு நாவரசர் மேற்கொண்டது 'தொண்டு' எனும் தூய நெறியாகும்;
11. 'நாவரசர்' என்னும் மந்திரப் பெயரைக் கூறியே 'துன்பில்பதம்' பெற்றவர் அப்பூதியடிகள்;
12. திருநாவுக்கரசர் பாடிய தேவாரப் பதிகங்களும், பிற திருமுறைப் பாக்களும் கூறிய கருத்துக்கள், பின்னர்த் தோன்றிய சைவ சித்தாந்த சாத்திர நூற் கருத்துக்களுக்கு அடிகோலின!;
13. தூய தொண்டு நெறியால், முதல்வனின் திருவருளுக்காளாகி, இறுதியில் 'சிவப்பேறு' பெறுதலே மனிதப் பிறவி எடுத்ததன் மாண்பயனாகும்!

**சான்றெண் விளக்கம்**

1. ந.சுப்புரெட்டியார், சைவ சமய விளக்கு, பக்.327-329.
2. வ.ஆ.தேவசேனாபதி, சைவ சித்தாந்தத்தின் அடிப்படைகள், ப.131.

3. முரு.பழ. இரத்தினம் செட்டியார், இதோ சைவ சித்தாந்தம் தெரிந்து கொள்ளுங்கள். ப.34.
4. ஆ.ஆனந்தராசன். சிவஞானபோதம் வழித்துணை விளக்கவுரை, ப.55.
5. மேலது, பக்.63,64.
6. சி.அருணை வடிவேலு முதலியார், சிவஞானபோத மாபாடியப் பொருள்நிலை விளக்கம், ப.759.
7. சிவஞான போதமும் சிவஞானமுனிவர் அருளிச் செய்த சிற்றுரையும். கழகப் பதிப்பு ப.160.
8. ஆ.ஆனந்தராசன், மு.கா.நூல். ப.308.
9. மேலது, ப.311.
10. ப.இராமநாதபிள்ளை (உ.ஆ.). தேவார அருள்முறைத்திரட்டு. பக்.94-95.
11. திருநாவுக்கரசர் தேவாரம், 6:132.
12. மேலது, 6:354.
13. ப.இராமநாதபிள்ளை. மு.கா.நூல். ப.96.
14. மேலது, ப.97.
15. திருநாவுக்கரசர் தேவாரம், 6:544.
16. ப.இராமநாதபிள்ளை, மு.கா.நூல். ப.110.
17. திருநாவுக்கரசர் தேவாரம். 4:110: 4:207:3-4: 5:481.
18. மேலது, 5:668:3-4.
19. மேலது, 5:505: 5:506:1-2.
20. மேலது, 5:700:3-4.
21. மேலது, 4:399:3-4: 4:430:2.
22. திருநாவுக்கரசர் தேவாரம். 5:327:2.4.
23. மேலது, 6:481:1-2: 6:507:1-2.
24. மேலது. 6:937.
25. மேலது. 6:613.
26. ஆ.ஆனந்தராசன், மு.கா.நூல், பக்.151.152.
27. மேலது, பக்.277-278.
28. மேலது, ப.279.
29. திருநாவுக்கரசர் தேவாரம், 4:38:3: 4:1009:4: 4:737:4: 5:482:1: 6:285:2; 6:268:3: 5:347:4: 5:435:4.
30. மேலது. 4:380.
31. மேலது. 4:883.
32. மேலது. 4:730.
33. வ.த.இராமசுப்பிரமணியம் (உ.ஆ.). திருநாவுக்கரசர் தேவாரம் மேலது உரை. ப.571.
34. திருநாவுக்கரசர் தேவாரம், 4:737.

35. திருநாவுக்கரசர் தேவாரம், 4:918.

36. மேலது, 4:1009.

37. மேலது, 6:971.

38. திருத்தொண்டர் புராணம், திருநாவுக்கரசு நாயனார், 427.

39. மேலது, திருஞானசம்பந்த நாயனார், 270,271:2.

40. குன்றக்குடி அடிகளார். அப்பர் விருந்து. பக்.2,3.

41. நால்வர் நான்மணிமாலை. 38.

42. சம்பந்தர் தேவாரம். 1:80:4:4; 3:54:5:1-2; 1:77:2:1-2; 3:125:10:3-4.

43. சுந்தரர் தேவாரம். 100:1.

44. திருவாசகம், 1:59; 5:83:2; 31:1:3-4; 37:3.

45. திருமந்திரம், 2716.

46. காரைக்காலம்மையார், மூத்த திருப்பதிகம், 11.

47. திருத்தொண்டர் புராணம், திருஞானசம்பந்த நாயனார், 1242:3-4.

48. உண்மை விளக்கம். 50.

49. சிவஞானபோதம், சூத்.5.

50. மேலது, சூத்.12.

51. ஆ.ஆனந்தராசன். மு.கா.நூல், ப.299.

52. சிவஞானபோதம், சூத்.11.

53. மேலது, அதிகரணம் 2:மேற்கோள்.

54. சிவஞான சித்தியார் சுபக்கம், 310.

55. மு.திருவிளங்கம் (உ.ஆ.), மேலது உரை, ப.610.

56. சிவஞான சித்தியார் சுபக்கம், 312.

57. திருவுந்தியார். 12.

58. சிவப்பிரகாசம். சூத்.12. (வ.எண்.98).




# 8

# முடிவுரை

இவ் ஆய்வேட்டின் இயல்களில் கூறப்பட்ட முடிபுகள், ஈண்டுத் தொகுத்துரைக்கப்படுகின்றன.

திருநாவுக்கரசர், திருவாமூரில் தோன்றிச் சமண் சமயஞ் சார்ந்து, சூலை நோயினால் பேரிடருற்றுச் சிவபெருமான் திருவருளால் சைவம் மீண்டு, நோய் நீக்கம் பெற்றுப் பல திருத்தலங்கட்கும் சென்று, 'தேவாரத் திருப்பதிகங்கள்' பாடியருளியவர். சமணர்கள் இழைத்த பல கொடுமைகளின்றும் இறையருளால் உய்தி பெற்றவர். எண்பத்தோராண்டுகள் இந்நிலவுலகில் 'உழவாரத் திருத்தொண்டு' செய்து, இவ்வுலக வாழ்வினின்றும் விடுதலை பெற ஆண்டவனிடம் வேண்டிக் கொண்டு, அவ்வாறே ஒரு சித்திரைத் திங்கள் சதயநாளில், சிவப்பேறு எய்தியவர்.

'முத்தி' தரும் பரசிவனே, முதல்வன். அவனை நாவுக்கரசர், 'அம்மான், தலைவன், தத்துவன், தழலன், நின்மலன், பராபரன்' என்றெல்லாம் போற்றுவர். சிவனை, 'அம்மையப்பனா'கவன்றி, 'உடன்தோன்றினவர்' என்று அப்பர் கூறுவது ஆழ்ந்த பொருளுடையது. ஊழி முதல்வனாக உள்ள 'பதி'யே 'ஆதி'யாகவும் உள்ளவன்; அவனுக்குச் 'சொரூப, தடத்த' இலக்கணங்கள் உண்டு; 'தன்வயத்தன் ஆதல்' முதலான எண்குணங்கள் உண்டு; 'அத்துவித' நிலையில் உயிர்களோடு, 'ஒன்றாய், வேறாய், உடனாய்' நிற்பவன். அவனைப் 'பதிஞானத்'தால் உணரமுடியும். நாவுக்கரசர், தாம் புறச்சமயத்திலிருந்தபோது நிகழ்ந்த நிகழ்ச்சிகளைக் கூறி வருந்துகின்றார். சைவ சித்தாந்தத்தின் அடிப்படையாகிய 'அத்துவிதக்' கொள்கையை நாவரசர், தம் தேவாரப் பாக்களில் கூறியுள்ளார்.

சைவ சித்தாந்தம் கூறும் முப்பொருள்களுள் ஒன்றாகிய 'பசு'வாகிய 'உயிர்' அல்லது 'ஆன்மா' பற்றி நாவரசர் பல பாக்களில் எடுத்தியம்புகின்றார். பதி-சித்து; உயிர்-சதசத்து. இவ்வுயிர், சார்ந்ததன் வண்ணமாகச் செயல்படும்; அது, 'சொரூப இலக்கணம்' ஆகும். உயிர்கள் பல; எனினும் மலத்தால் மூவகைப்படும். இறைவன் தமக்குச் செய்த 'காட்டும் உபகாரம்', 'காணும் உபகாரம்' இவை குறித்து நாவரசர் மொழிகின்றார். தம்மை அமணர்கள்,

கல்லில் கட்டிக் கடலில் தள்ளியபோதும் 'திருவைந்தெழுத்து', ஓதிக் கரை சேர்ந்ததையும், இறைவன் தமக்குச் செய்த அருட்டிறத்தையும் பாடல்கள் வாயிலாகத் தெளிவுறுத்துகின்றார்!

'பதி, பசு'வைப்போல், 'பாசமு'ம் அநாதியே. இஃது 'ஆணவம், கன்மம், மாயை' என மூவகைப்படும். உயிர் உள்ளவன்றே ஆணவமும் அதனுடன் பொருந்தி, அதனறிவு தோன்றாதவாறு மறைத்து நிற்கிறது. உயிருக்குப் பகை 'ஆணவமே'; அஃது ஒன்றே எனினும் எண்ணில் பல சத்திகள் கொண்டது. இறைவன் திருவருள் இருப்பின், 'ஆணவமலம்' உயிரைப் பற்றாது நிற்கும். 'கன்மம்' என்பது 'வினை'. இது, 'சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம்' என மூவகைப்படும். திருவருளை விடாது பற்றினால் வினையிலிருந்து விடுபடலாம். உயிர்களை மயக்குந் தன்மையது 'மாயை'. முதல்வனது விருப்பப்படியே இம் மாயையானது, உலகைத் தோற்றுவிக்கும். தத்துவம், பொறிபுலன்கள் முதலாயின 'மாயை'யுள் வைத்துப் பேசப்படும். உயிரானது அறிவு பெறத் துணை செய்வது 'மாயை'. இம் மும்மலங்கள் குறித்துத் திருநாவுக்கரசர் தம் தேவாரப் பாக்களில் பலபடப் பேசுகின்றார்.

இறைவனை அடைதற்குரிய நெறிகள் 'சரியை, கிரியை, யோகம், ஞானம்' எனும் நான்காம். 'இருவினையொப்பு' வருங்காலமே உயிர்களுக்கு 'ஞானம்' வருங்காலமாகும். இவ் 'ஞானநிலை' எய்தச் 'சிவோகம்பாவனை' இன்றியமையாதது. 'மலவாசனை' நீங்கத் 'திருவைந்தெழுத்'தை முறைப்படி ஓதவேண்டும், இவையனைத்தையும் நாவரசர் அருளிய தேவாரப் பாக்களில் காணலாம்.

சாதனங்களால் அடையும் பயன்களில் தலைமையானது 'சிவப்பேறு'. சிவன் திருவடி சேர்தலே 'முத்தி'; இம் 'முத்திநிலை'யிலும் 'அத்துவிதம்' உண்டு. முத்திநிலை பெற்ற சிவனடியார்கள், உடம்பு உள்ளபோதும் 'சீவன்முத்தர்' அல்லது 'அணைந்தோர்' எனப்படுவர். ஆன்மா, 'சிவகதி' பெறும் வழிகளை நாவரசர் கூறியுள்ளார். இச் 'சிவப்பேறு' எய்துதற்கு நாவரசர் மேற்கொண்டது 'தொண்டுநெறி'யாகும். 'நாவரசர்' எனும் பெயரே 'மந்திரம்' ஆகும்; இம் மந்திரத்தைச் சொல்லியே 'துன்பில்பதம்' பெற்றார் அப்பூதியடிகளார்!

திருநாவுக்கரசர், தம் வாழ்வின் பயனாக இவ்வுலகுக்கு உணர்த்திய தூநெறி - 'தொண்டுநெறி'யாகும்.

நாவுக்கரசர் கூறும் இச் சைவ சித்தாந்தக் கருத்துக்கள், ஞானசம்பந்தர் போன்ற திருமுறை அருளாளர்களின் பாடல்களிலும் சொல்லப்பட்டுள்ளன. அன்றியும், மெய்கண்டார் அருளிய 'சிவஞான போதம்' நூலும், பிற சாத்திர நூல்களும் தோன்றுவதற்கு அடிப்படைகளாய் அமைந்தவை திருநாவுக்கரசர் போன்றோர் பாடிய திருமுறைப் பாடல்கள் எனலாம்.

திருநாவுக்கரசர் அருளிய தேவாரத் திருமுறைகளை நாளும் ஓதி வழிபடுவோர், இவண் கூறிய சைவ சித்தாந்தக் கருத்துக்களை அறிந்து கொள்ளவும்; அதனால் நால்வகை நெறிகளைத் தம் வாழ்வில் கடைப்பிடித்து இறுதியில் 'சிவப்பேறு' எய்தவும் கூடும்.

இவ்வகையில் இச் 'சிற்றாய்வு' பெரிதும் பயன்படும் எனலாம். திருநாவுக்கரசர் அருளியுள்ள ஒவ்வொரு பதிகத்தையும், பதிகத்திலுள்ள ஒவ்வொரு பாடலையும், இந்த ஆய்வுக் கண்ணோட்டத்தில் ஆராய்ந்து மிகப் பெரியதொரு ஆராய்ச்சி நூலினைத் தமிழுலகிற்கு வழங்குவதற்கும் இடமுண்டு!

'திருநாவுக்கரசர் திருவடி போற்றி!'



# பின்னிணைப்பு

## துணைநூற்பட்டியல்

### முதன்மை ஆதாரம்

#### தமிழ்

திருநாவுக்கரசர் தேவாரம் (4,5,6 திருமுறைகள்) மூலமும் தெளிவுரையும். (உ.ஆ.) வ.த.இராமசுப்பிரமணியம். தமிழ் நிலையம், சென்னை, 1995

சித்தாந்த சாத்திரம் பதினான்கு மூலமும் உரையும். சைவ சித்தாந்தப் பெருமன்றம், சென்னை. 3ஆம் பதிப்பு 1944

### துணைமை ஆதாரங்கள்

#### தமிழ் நூல்கள்

அருணை வடிவேலு முதலியார், சி., சிவஞான போத மாபாடியப் பொருள் நிலை விளக்கம், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர். 1991

அறிவுடைநம்பி ம.சா.. திருநாவுக்கரசர் தேவாரத்தில் காணப்படும் இலக்கியக் கொள்கைகள், கருமணி பதிப்பகம், மதுரை. 1986.

அறிவுடைநம்பி ம.சா., 'போதமும் சுபக்கமும்'. சைவத்தமிழ், கருமணி பதிப்பகம், மதுரை. 1992.

ஆறுமுகநாவலர். (ப.ஆ.). திருக்குறள் மூலமும் பரிமேலழகர் உரையும், வித்தியாநுபாலன யந்திரசாலை. சென்னை, 13ஆம் பதிப்பு, சர்வதாரி.

ஆறுமுக முதலியார், சரவண., திருநாவுக்கரசர், அ.ப.க., அண்ணாமலை நகர், 1970.

ஆனந்தராசன். ஆ., சிவஞானபோதம் வழித்துணை விளக்கவுரை, அருள்நந்தி சிவம் அருட்பணிமன்றம். திருநெல்வேலி. 1994.

இரத்தினசபாபதி. வை.. திருமுறைத் தெளிவே சிவஞான போதம். செ.ப.க.. சென்னை. 1979

இரத்தினசபாபதி. வை.. (உ.ஆ.) நால்வர் நான்மணிமாலை, மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1969.

இரத்தினம் செட்டியார், முரு.பழ., இதோ சைவ சித்தாந்தம் தெரிந்து கொள்ளுங்கள், மலேசியத் திருமுறை மாணவர்கள், மலேசியா, 1991.

இராமநாதபிள்ளை, ப., (ப.ஆ.) சிவஞானபோதமும் சிவஞான முனிவர் அருளிச்செய்த சிற்றுரையும், கழகப்பதிப்பு, சென்னை, 1974.

இராமநாதபிள்ளை, ப., தேவார அருள்முறைத்திரட்டு விளக்க உரையுடன், கழகப்பதிப்பு, சென்னை, 1961.

(இ)ராமானுஜாசாரி, ர., சைவ சித்தாந்தம், ஆசிரியர். அண்ணாமலைநகர். 1963.

கங்காதரன், ச., சைவ சித்தாந்த அடிப்படைக் கொள்கைகளும் வரலாறும். அங்கயற்கண்ணி அகம். மதுரை. 1992.

கந்தர் அனுபூதி. முத்துக்குமரன் பிரஸ். சென்னை. (?).

கலியாணசுந்தரனார். திரு.வி., திரு.வி.க.வின் சிவஞான பாடிய அணிந்துரை. (தனி வெளியீடு). பெருமன்றம். சென்னை. 1982.

கழகத் தமிழ்க் கையகராதி, கழகப்பதிப்பு. சென்னை. மறுபதிப்பு. 1956

குன்றக்குடி அடிகளார், அப்பர் விருந்து, தமிழ்ப்பண்ணை, சென்னை. 1970.

ஜகந்நாதன். கி.வா. (உ.ஆ.), பெரியபுராண விளக்கம் பகுதி 6. அல்லயன்ஸ் கம்பெனி. சென்னை, 1984

சச்சிதானந்தம்பிள்ளை, ச., 'திருநாவுக்கரசு சுவாமிகள்', நால்வர் சரித்திரமும் அற்புதத் தேவாரத் திரட்டும், தருமையாதீனம், 1941.

சாமிநாதய்யர், உ.வே. (ப.ஆ.). புறநானூறு மூலமும் பழைய உரையும். உ.வே.சா. நூல்நிலையம். சென்னை. 7வது பதிப்பு, 1971.

சாம்பசிவனார். ச., அப்பர் குறுந்தொகை ஐம்பது மூலமும் பொழிப்புரையும். நாவலர் புத்தக நிலையம். மதுரை. 1972.

சாம்பசிவனார். ச., தெய்வத்தமிழ் அலங்கல். வளவன் வெளியீடு. மதுரை, 1994.

சாம்பசிவனார், ச. (ப.ஆ.), தொல்காப்பியம் பொருளதிகாரம் (பகுதி 1) மூலமும் குறிப்புரையும். வளவன் வெளியீடு, மதுரை. 1980.

சாம்பசிவனார். ச., பத்திநெறிப் பனுவல்கள், வளவன் வெளியீடு, மதுரை, 1992.

சிவானந்த தேசிகர். சைவ சித்தாந்த சாரம். கழகப்பதிப்பு. சென்னை. 1934

ஸ்ரீநிவாசாசாரியன். தே.ஆ., (உ.ஆ). இருபா இருபஃது நூலின் விரிவுக் கட்டுரை, திருவாவடுதுறை ஆதீனம். 1955

சுப்பிரமணியபிள்ளை. ஜி., நாவுக்கரசரும் திருவள்ளுவரும். தமிழ்நிலையம். புதுக்கோட்டை. 1966.

சுப்பிரமணிய முதலியார். சி.கே., சேக்கிழார். கோவைத் தமிழ்ச் சங்கம். கோவை. 3ஆம் பதிப்பு. 1952.

சுப்புரெட்டியார். ந., சைவ சமய விளக்கு. (வி.உ.) பாரிநிலையம். சென்னை. 1984.

சைவ சமயச் சொற்பொழிவுகள். சமாசம், சென்னை. 1959.

ஞானசம்பந்தன், அ.ச., பெரியபுராணம் ஓர் ஆய்வு. தமிழ்ப் பல்கலைக் கழகம். தஞ்சாவூர். 1987.

ஞானியார் அடிகள். ஞானியார் அடிகள் நினைவுமலர். பெருமன்றம். சென்னை. 1955.

தண்டபாணி தேசிகர். ச. (உ.ஆ.). பண்டார சாத்திரம் உபதேசப் பஃறொடை. பஞ்சாக்கரப் பஃறொடை. திருவாவடுதுறை ஆதீனம், 1962.

தண்டபாணி தேசிகர், ச. (உ.ஆ), பண்டார சாத்திரம் - சித்தாந்தப் பஃறொடை, திருவாவடுதுறை ஆதீனம், 1961.

தாயுமானசுவாமிகள் திருப்பாடற்றிரட்டு, பி.இரத்தினநாயகர் சன்ஸ், சென்னை, ஆ.இ.

திருத்தொண்டர் புராணம், திருவாவடுதுறை ஆதீனப்பதிப்பு, 1988

திருநாவுக்கரசுதேவர் திருஏகாதசமாலை மூலமும் உரையும், அக்கினீஸ்வரர் தேவத்தானம், திருப்புகலூர், 1961.

திருமந்திரம், குமரகுருபரன் சங்கம், வைகுண்டம், 1976

திருவாசகம், பெருமன்றம், சென்னை, 2ஆம் பதிப்பு, 1988.

திருவிளங்கம் மு. (உ.ஆ.), சிவஞான சித்தியார் சுபக்கம், கூட்டுறவுத் தமிழ்நூற்பதிப்பு விற்பனைக் கழகம், யாழ்ப்பாணம், 2ஆம் பதிப்பு, 1971

துரைசாமிப்பிள்ளை, ஔவை சு., சைவ இலக்கிய வரலாறு (கி.பி. 7 முதல் 10 ஆம் நூற்றாண்டு வரை), அ.ப.க., அண்ணாமலைநகர், 1978

துரைசாமிப்பிள்ளை, ஔவை சு., 'தலைமைப் பேருரை', தூத்துக்குடிச் சைவசித்தாந்த சபை 65 ஆம் ஆண்டு நிறைவு, தனி வெளியீடு, 1986

தேவசேனாபதி, வ.ஆ., சைவ சித்தாந்தத்தின் அடிப்படைகள், செ.ப.க., சென்னை, 1981

நடேசக்கவுண்டர், கு., அப்பர் வரலாற்றாராய்ச்சியும் தேவாரத் திறனாய்வும், கழகப் பதிப்பு, சென்னை, 1972

பதினோராந்திருமுறை, திருப்பனந்தாள் ஆதீனப்பதிப்பு, 1963

பாரதிதாசன், தமிழியக்கம், செந்தமிழ் நிலையம், இராயவரம், 2ஆம் பதிப்பு, 1947

மயிலை இளமுருகனார் (ப.ஆ.), தேவார அடங்கன்முறை, திருவருளகம், சென்னை, 1953,

மறைமலையடிகள், சிவஞானபோத ஆராய்ச்சி, கழகப்பதிப்பு, சென்னை, 1971

மீனாட்சிசுந்தரம் பிள்ளை, த.ச. (ப.ஆ.), சிவஞான தீபம், திருவாவடுதுறை ஆதீனப்பதிப்பு, 1962.

வச்சிரவேல் முதலியார், க., 'சைவம்', சைவமும் வைணவமும், தமிழ்நாடு இந்து அறநிலைய ஆட்சித்துறை, சென்னை, 1976

## ஆங்கில நூல்கள்

**Devapoopathy** Nadarajah, The Strength of Shaiviam, Second International Seminar on Saiva Siddhanta, Kuala Lumpur, Malaysia, 1986

Ramanujachari, R., 'Saiva Siddhanta', **Collected Lectures on Saiva Siddhanta**, A.U., Annamalainagar, 1965.

Vanmikanathan G., (English Version), Peria Puranam, Sri Ramakrishna Math, Madras, 1985



# அப்பர் தேவாரம் மற்றும் பிற நூல்களின் செய்யுள் முதற்குறிப்பு அகராதி

# சைவ சித்தாந்த சாத்திர நூல்களின் நூற்பா, செய்யுள் முதற்குறிப்பு அகராதி

